# மொழித்தூய்மை

பதிப்பாசிரியர்

முனைவர். சி. சித்ரா






## தமிழாய்வுத் துறை

## தேசியக் கல்லூரி

(தேசியக் கல்வித்தர மதிப்பீட்டுக் குழுவின் 'A' தகுதி பெற்றது)

திருச்சிராப்பள்ளி - 620 001.

# மொழித்தூய்மை
# தேசியக் கருத்தரங்கக் கட்டுரைகள்
# 25.01.2007

## பதிப்புக்குழு

தலைவர் :

முனைவர் இரா. இரகோத்தமன்

உறுப்பினர்கள் :

முனைவர் க. இராசரத்தினம்
முனைவர் ச. ஈஸ்வரன்
முனைவர் சாமி. திருமாவளவன்
முனைவர் இரா. சபாபதி
முனைவர் ந. மாணிக்கம்
முனைவர் சி. காந்தி
முனைவர் இரா. இரவிச்சந்திரன்

தமிழாய்வுத் துறை
தேசியக் கல்லூரி
திருச்சிராப்பள்ளி - 620 001.

# NATIONAL COLLEGE

(Nationally Accredited with 'A' Grade by NAAC)
Dindigul Road, Tiruchirapalli - 620 001, Tamilnadu, India.
*Tele Fax : +91-431-2480055*
*+91-431-2481997 (OFF)*
*e-mail ; nationalcollege_trichy@yahoo.com*




19-1-07


K. RAGHUNATHAN, B.Sc., B.L.
SECRETARY


## வாழ்த்துரை

திருச்சிராப்பள்ளி தேசியக்கல்லூரி தொடங்கப்பட்ட காலம் முதல் இன்றளவும் பாரம்பரியத்தையும் பண்பாட்டையும் கட்டிக்காக்கும் வகையில் செயல்பட்டு நூற்றாண்டை நோக்கி வெற்றிநடை போட்டு வருகிறது அனைவருக்கும் கல்வி கிடைக்க வேண்டும் என்ற உயர்ந்த இலட்சியத்தை ஈடேற்றி வருகிறது. அதேசமயம் இன்றைய காலத்தின் தேவைக்கேற்பத் தன்னை வளர்த்து முன்னிறுத்திக் கொண்டு வருகிறது. அதன் ஒரு பகுதியாகத் தமிழாய்வுத்துறையினர் "மொழித்தூய்மை" என்னும் பொருளில் தேசியக் கருத்தரங்கினை நடத்துகின்றனர்

தாய்மொழியாம் அன்னைத் தமிழைப் போற்றும் நாம் அதன் தூய்மையைப் பாதுகாக்க முயல வேண்டும் எனக் கூறுகிறோம். எனினும் இது அனைவருக்கும் ஏற்புடையதாக இருக்க வேண்டும். அதனைப் பயன்படுத்த எளிதாக, இனிதாக அமைய வேண்டும் என்று கூறும் பொழுதுதான் கருத்து மாறுபாடுகள் தோன்றுகின்றன. இந்நிலையில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு மொழியின் வளர்ச்சியினைச் சான்று காட்டுகின்றனர்

நமது பழம்பெருமையும் பண்பாடும் நிலைத்து நீடிகக வேண்டுமானால் மொழியின் தனித்தன்மை காக்கப்பட வேண்டும் அதற்கேற்ற முறையில் மொழித்தூய்மையைச் சமூகவியல், அறிவியல், மொழியியல், தனித்தமிழியல் என்னும் நோக்குகளில் தமிழறிஞர்கள் ஆய்நது தங்கள் கருத்துக்களை முன்வைக்க உள்ளனர். தமிழுலகம் இதனை நன்கு ஆழ்ந்து நோக்கிப் பயன்கொள்ளுமாயின் அதுவே இக்கருத்தரஙகின வெற்றியாக அமையும் இது நிறைவேறும் என உறுதியாக நம்புகிறேன் எமது வேண்டுகோளை ஏற்ற தமிழறிஞர்களுக்கு நன்றி தமிழாய்வுத்துறையினரின் முயற்சிக்குப பாராட்டுக்கள் கருத்தரங்கம் சிறக்க வாழ்த்துக்கள்

Raghunathan

# NATIONAL COLLEGE

(Nationally Accredited with 'A' Grade by NAAC)
**Dindigul Road, Tiruchirapalli - 620 001, Tamilnadu, India.**
*Tele Fax : +91-431-2482995 (PPL)*
*+91-431-2481997 (OFF)*
*e-mail : nationalcollege_tricky@yahoo.com*



---

**Dr. K. ANBARASU,** *M.Sc., M.Phil., Ph.D.,*
**PRINCIPAL**

12.01.2007

## வாழ்த்துரை

பாரம்பரியமிக்க தேசியக்கல்லூரியின் தமிழ் ஆய்வுத்துறை மொழித்தூய்மை என்ற தலைப்பில் தேசியக்கருத்தரங்கம் நடத்துவதை அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைகின்றேன். மொழித்தூய்மையினால் மொழிக்கு ஏற்படும் பலன்கள், சிறப்பு மற்றும் வளர்ச்சி போன்ற விவரங்கள் இக்கருத்தரங்கில் விவாதிக்கப்படுவதாக அறிகின்றேன். தமிழ்சார் வல்லுநர்கள் பலர் இக்கருத்தரங்கில் உரையாற்ற உள்ளார்கள் என்பது கல்லூரிக்குப் பெருமை சேர்க்கின்றது ஆக்கப்பூர்வமான விவாதங்களே ஒரு மொழி வளர்ச்சிக்கு அவசியம். இக்கருத்தரங்கில் நடைபெறும் விவாதங்கள் தமிழ்மொழி வளர்ச்சிக்குப் பெரிதும் உதவும் என்பதில் ஐயமில்லை. இக்கருத்தரங்கம் வெற்றியடைய என்னுடைய மனமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்கின்றேன்

கு. அன்பரசு



முனைவர். சி. தங்கமுத்து
துணைவேந்தர்

பாரதிதாசன் பல்கலைக்கழகம்
பல்கலைப்பேரூர்,
திருச்சிராப்பள்ளி - 620 024.

10.01 2007

வாழ்த்துரை

திருச்சிராப்பள்ளி தேசியக் கல்லூரியில் 25.01.2007 அன்று மொழித்தூய்மை என்னும் தலைப்பில் தேசியக் கருத்தரங்கம் நடைபெறவுள்ளது குறித்து மிக்க மகிழ்ச்சி. இக்கருத்தரங்கம் தமிழ் வளர்ச்சித்துறை இயக்குனர் முனைவர் ம. இராசேந்திரன் மற்றும் முனைவர் பொற்கோ ஆகியோரின் தலைமையில் நடைபெறுவது மிகவும் சிறப்பாகும். இக்கருத்தரங்கம் அனைவருக்கும் பயனுள்ள வகையில் அமையவும், விழா மலர் சிறக்கவும் எனது வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சி. தங்கமுத்து

பெறுநர்

முனைவர் கு. அன்பரசு
முதல்வர்
தேசியக் கல்லூரி
திருச்சிராப்பள்ளி 620 001



# தமிழ்ப் பல்கலைக்கழகம்

தஞ்சாவூர்-613 005 - இந்தியா

முனைவர் சி.சுப்பிரமணியம்
துணைவேந்தர்

நாள்:20.1.2007

<u>வாழ்த்துச் செய்தி</u>

அன்புடையீர்,

சிறந்த கல்விப் பணியாற்றி வரும் தேசியக் கல்லூரி மொழித்துறை குறித்து நடத்தவிருக்கும் கருத்தரங்கு மிகச் சிறந்ததொன்றாக அமைய எனது மனமார்ந்த வாழத்துக்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

செம்மொழியின் சிறப்பினை நான்கு கூறுகளாகப் பகுத்துத் தொகுத்து தமிழ் மொழிக்குச் சிறப்பினைச் சேர்க்கும் வகையில் நடைபெறவுள்ள இக்கருத்தரங்கம் ஓர் உயரிய நிகழ்வாக அமைய தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் வாழ்த்துக்களை மகிழ்வோடு தெரிவித்துக்கொள்கிறேன்.

தங்கள் அன்புள்ள,

(சி.சுப்பிரமணியம்)

பெறுநர்

முதல்வர்,
தேசியக் கல்லூரி,
திருச்சி-620 001.

**இந்திய மொழிகளின் நடுவண் நிறுவனம்**
**CENTRAL INSTITUTE OF INDIAN LANGUAGES**
(மனிதவள மேம்பாட்டு அமைச்சகம், இடைநிலை மற்றும் உயர்நிலைக் கல்வித் துறை, இந்திய அரசு)
**(Ministry of Human Resource Development, Dept. of Higher Education)**
மானசகங்கோத்ரி, மைசூர் 570 006
**MANASAGANGOTRI, MYSORE 570 006**

தொலைபேசி 0821-2345019 (அலுவலகம்)
0821-2416147 (வீடு)
கைபேசி 09880143649
மின் அஞ்சல் . ramasamyk@ciil.stpmy.soft.net

**No.F. 11-264/2005-06/CECT/** **January 15, 2007**

பேராசிரியர் க.இராமசாமி
துணை இயக்குநர்
தலைவர், செம்மொழித் தமிழ்த் திட்டம்

அன்புடையீர்,

வணக்கம். மொழித்தூய்மை பற்றிய கருத்தரங்கு ஒன்றினை திருச்சிராப்பள்ளித் தேசியக் கல்லூரியில் 2007 சனவரி 25 அன்று நடத்தவிருக்கும் செய்தியறிந்து மகிழ்ச்சி. தமிழைப் பொறுத்தவரை மொழித்தூய்மை என்பது வரலாற்று நோக்கிலும் வளர்ச்சி நோக்கிலும் இன்றியமையாத ஒன்று. தமிழின் தனித்தன்மை அதன் தூய்மையோடு நெருங்கிய தொடர்புடையது. எனவே, மொழித்தூய்மையைப் போற்றிப் பாதுகாப்பது நமது தலையாய கடமையாகும். மொழித்தூய்மையை மாற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் எதிரானதாகப் பார்க்கும் கண்ணோட்டம் சரியானதல்ல. மொழித்தூய்மையோடு இயைந்த மாற்றங்களையும் வளர்ச்சிக்கூறுகளையும் ஏற்றுக் கொள்ள நாம் எப்போதும் தயங்கியதில்லை; தயங்கவும் கூடாது. தனித்தமிழ் இயக்கம் சற்றே தொய்வடைந்துள்ள இக்காலக் கட்டத்தில் இத்தகையதொரு கருத்தரங்கினை நடத்த முன்வந்துள்ள அனைவருக்கும் என் உளமார்ந்த பாராட்டுகள். கருத்தரங்கம் தனித்தமிழ் உணர்வைப் புதுப்பிக்கும் வகையில் வெற்றிகரமாக நிறைவேற நல்வாழ்த்துகள்.

நன்றி,

இவண்,

க.இராமசாமி

(க.இராமசாமி)

Dr. K. Anbarasu
Principal
National College
Tiruchirapalli 620 001.
Tamil Nadu

# உள்ளுறை

பக்கம்

## பதிப்புரை

என்று பிறந்தது என்றுணராத இயல்புடைய பழைமை கொண்டது தமிழ்மொழி. இது சமூகவியல், மானுடவியல் நோக்கிலான ஆய்வுகளுக்கு அடிப்படையாக உள்ள மொழி என்பதால் உலக அரங்கில் பல நாடுகளால் போற்றப்படுகின்றது. பென்சில்வேனியா, சிகாகோ, ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ், லெய்டன், உப்சாலா, ஸ்டாக்ஹோம் போன்ற பல்கலைக்கழகங்களில் சிறப்பு நிலையிலான தமிழாய்வுகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. அமெரிக்கா, இங்கிலாந்து, ஜெர்மனி, ஸ்வீடன், ரஷ்யா, ஆஸ்திரேலியா, கனடா, இஸ்ரேல், இத்தாலி, ஜப்பான், பிலிப்பைன்ஸ், மலேசியா, சிங்கப்பூர், இலங்கை போன்ற நாடுகள் தமிழாய்வுக்குச் சிறப்பிடம் தருகின்றன.

இலக்கிய மரபு, உலகப்பொதுமை, தூய்மை, இலக்கணமுடைமை, வழக்கறாமை, பழையன கழிதல், புதியன போற்றல், இயற்கை இயைபு, அறம் வழாமை, குறிக்கோள் நிலை, வரலாறுடைமை, அயலவரை ஈர்த்தல், அறிவியல் சார் பண்பு, பன்முக ஆற்றல் போன்ற ஆளுமைப் பண்புகளை உள்ளடக்கிச் செவ்வியல் தன்மைகளோடு 'செம்மொழியாக'த் தமிழ் ஏற்றம் பெற்றிருப்பது போற்றற்குரியதாகும்.

ஆயின், 'இந்தத் தமிழனுக்குத் தமிழைச் சரியாகத் தெரிந்துகொள்ள ஆசையில்லை' (ஜி.யு.போப்) என்ற கருத்து நம் நெற்றியைச் சற்றே சுருங்க வைக்கின்றது. 'தமிழ்நாட்டின் தமிழ்த்தெருவில் தமிழ்தானில்லை' (பாவேந்தர்) என்னும் கருத்து நமக்குள் பல வினாக்களை எழுப்புகின்றது. 'வானமே எல்லை' எனக்கருதி வளர்ச்சிப்பாதையை நோக்கி வேகமாகப் பயணித்துக் கொண்டிருக்கும் ஆர்வம் பெருகிக்கொண்டே வரும் சூழலில் மொழியைக் கையாளும் நெறிமுறைகளைப் பற்றிச் சிந்திக்க வேண்டிய தேவைப்பாடு இன்று எழுந்துள்ளது.

இன்றைய தாராளமயமாதல், உலகமயமாதல், அறிவியல்மயமாதல் சூழலில் மொழித்தூய்மை தேவையா? பன்மொழிக்கலப்பு என்பது பழகிவிட்ட ஒன்றல்லவா? தமிழில் அறிவியல், தொழில்நுட்பக் கலைச்சொற்கள் தேவைக்கேற்ப உள்ளனவா?

பிறநாட்டார் கண்டுபிடிப்புகளை அவ்வந்நாட்டு மொழிவழிப் பயன்படுத்துவது தவறா? ஆகிய கருத்துக்களை முன்வைத்து மொழித்தூய்மை வேண்டாம் என்போரின் குரல் ஒலிக்கின்றது.

கருத்துப் பகிர்வுக்கான ஒரு கருவி என்ற அளவில் மொழியின் முழுமை முடிந்து விடுவதில்லை. அது சமுதாயம், நாகரிகம், பண்பாடு, சமயம், பல்துறை வளர்ச்சி உள்ளிட்ட பலநிலைகளில் தன் முத்திரையைப் பதிக்கின்றது. எனவே தொலைநோக்கு நிலையில் சிந்தித்து மொழித்தூய்மையின் தேவை, மொழித்தூய்மை பேணுவதற்கான வரையறைகள், நெகிழ்வுகள், புதிய முயற்சிகள், அதன் விளைவுகள் ஆகியவற்றைப் பற்றிய சீரிய கருத்துக்களை உணர வேண்டுவதும் உணர்த்த வேண்டுவதும் இன்றியமையாததாகும்.

எந்த மொழியும் மக்கட் சமுதாயத்தை விட்டு விலகி நின்று தனித்து வளர்வதில்லை. தமிழ்ச் சமுதாயம் தமிழ் மொழியைக் கையாளும்போது சில இன்னல்களையும் ஐயங்களையும் எதிர்கொள்ள வேண்டிய சூழல் நிலவுகின்றது. பேச்சு மொழிக்கும் எழுத்து மொழிக்குமிடையேயுள்ள வேறுபாடு, அறிவியல், தொழில்நுட்பக் கலைச்சொற்கள் கல்வி நிறுவனங்களில் தேவையான அளவு பரவலாக்கப்படாமை, பிறமொழிச் சொற்களைக் கடன் வாங்கிப் பயன்படுத்துவதில் மொழியியலாளரிடையே ஏற்படும் கருத்து வேறுபாடுகள், தமிழைத் தனித்த தூய்மையோடு தலைநிமிரச் செய்ய முடியும் என்ற தமிழார்வலர்களின் ஆர்வம் ஆகியவற்றைக் குறிப்பாகச் சொல்லலாம். எனவே, சமுதாயவியல், அறிவியல், மொழியியல், தனித்தமிழியல் பார்வைகளில் ஆழமாகச் சிந்திக்கும்போது ஏதோ ஒரு புள்ளியில் ஓர் ஒருங்கிணைப்பு உண்டாகும்.

வடசொல், திசைச்சொல் குறித்த இலக்கணவியலார் கருத்தாக்கங்களை நாம் புறந்தள்ளிவிட முடியாது. நடைமுறையில் தூய்மையம் என்பது முன்னுள்ள மொழியின் பயன்பாட்டு நிலையைச் சீரமைக்கும் வகையில் அமைதல் வேண்டும், சிதறடிக்கும் நிலைக்கு மாற்றிவிடக் கூடாது என்பதைக் கருத்திற்கொள்ள வேண்டும்.

மொழித்தூய்மை பேணுதல் என்னும் சிந்தனையும் செயல்பாடுகளும் பலநாடுகளில் பல மொழியினரால் மேற்கொள்ளப்பெற்று வருகின்றது. தூய்மை காத்தல் தமிழிலும்

புதுவதன்று. இந்த அக்கறை சரியான முறையில் வலுப்பெறல் வேண்டுமென்ற எண்ணத்தில் இடையறாத பல்வேறு பணிகளுக்கிடையே 'மொழித்தூய்மை' என்னும் பொருண்மையின்பால் கொண்ட ஈடுபாட்டினால், சமூகவியல் நோக்கு, அறிவியல் நோக்கு, மொழியியல் நோக்கு, தனித்தமிழியல் நோக்கு என்னும் அடிப்படையில் தங்கள் ஆய்வுரைகளை வழங்கிச் சிறப்பித்த, முனைவர் இரா. கோதண்டராமன், முனைவர் எல். இராமமூர்த்தி, முனைவர் மருத்துவர் சு. நரேந்திரன், முனைவர் மணவை முஸ்தபா, முனைவர் மா. நயினார், முனைவர் ஆ. கார்த்திகெயன், முனைவர் கு. திருமாறன், முனைவர் கு. பூங்காவனம், முனைவர் சா. உதயசூரியன் முதலிய தமிழ்ச்சான்றோர் பெருமக்களை நன்றியோடு வணங்குவதில் பெருமகிழ்ச்சியடைகிறேன்.

இச்சான்றோர்தம் கருத்துக்கள் 'மொழித்தூய்மை' குறித்து நடைமுறையில் பின்பற்றத்தக்க, தேவையான வழிமுறைகளை நமக்குக் கொடுக்கும் என்று நம்புகின்றேன்.

இந்திய அளவில் சிறந்தோங்கித் திகழும் கல்வி நிறுவனங்களில் தேசியக் கல்லூரிக்குத் தனிப்பெருமை உண்டு. நூற்றாண்டோடு கரங்கோர்க்கக் கால் பதித்துக் கொண்டிருக்கும் இக்கல்லூரியின் தமிழாய்வுத்துறை எண்ணற்ற பெருமைகளை ஈட்டித் தந்துள்ளது. ஆழ்ந்த அறிவும் நுட்பமான செயல்பாட்டுத்திறனும் மிக்க சான்றோர்களால் செந்நெறிப்படுத்தப் பெற்று அந்நெறிக்கண் இன்றும் வெற்றிநடை போட்டு வரும் தமிழாய்வுத் துறையினரின் ஆய்வுப்பார்வை பரந்து விரிந்த எல்லைகளைக் கொண்டது.

தமிழாய்வுத்துறை மென்மேலும் தழைத்தோங்க வேண்டும் என்னும் நோக்குடன் வேண்டியவாறெல்லாம் உதவிகள் செய்து ஊக்கமூட்டியவர் கல்லூரியின் மேனாள் செயலர் வித்யா சேவாரத்னம் கு. சந்தானம் அவர்கள்.

புதிய புதிய சிந்தனைகள், ஆக்கப்பூர்வமான செயல்பாடுகள், துறைகளின் வளர்ச்சி - கல்லூரியின் மலர்ச்சி என்னும் தொடர் ஓட்டத்தில் இனிய புன்னகையோடு எங்களை இயக்கிக் கொண்டிருக்கும் கல்லூரிச் செயலர் திரு. கா. ரகுநாதன் அவர்கள்,

பல்துறையறிவு பாங்குற அமையப்பெற்று உயர்ந்த இலக்குகளைத் தன்னகப்படுத்தும் சாதனைகளுக்குச் சொந்தக்காரர், அன்பால் அனைவரையும் ஆட்டுவிக்கும் கல்லூரி முதல்வர் முனைவர் கு. அன்பரசு அவர்கள்,

அனுபவம், ஆற்றல், தகுதி அனைத்திலும் மேம்பட்ட நிலையில் திகழ்ந்து பல்லாற்றானும் என்னை நெறிப்படுத்தி, நல்வழிகாட்டிகளாகத் திகழும் தமிழாய்வுத்துறைத் தலைவர் அவர்கள், பேராசிரியப் பெருந்தகையோர் - இவர்கள் அத்துணைபேரையும் நன்றியோடு நினைவு கூர்ந்து வணங்கி மகிழ்கிறேன்.

அன்புடன்.
சி. சித்ரா.

# 1. சமூகவியல் நோக்கு : மொழித்தூய்மை

## மொழித் தூய்மையும் மொழிப்பயன்பாடும்

முனைவர். இரா. கோதண்டராமன்,
தொல்காப்பியர் அடிப்படை ஆய்வு மையம்,
புதுச்சேரி

1.0 மொழித்தூய்மை - மறு விளக்கம்.

மொழித்தூய்மை என்பதும் மொழிப்பயன்பாடு என்பதும் இருவேறு நிலைகளில் ஆராயத்தக்கவையாகும். மொழித்தூய்மை என்பது ஒரு சமுதாயத்தின் மனோநிலையைப் பொறுத்ததாகும். இது உளவியல் சார்ந்த மொழியியலோடு (Psycho Linguistics) தொடர்புடையதாகும். மொழிபபயன்பாடு என்பது சமுதாய மொழியியலோடு (Socio Linguistics) தொடர்புடையதாகும. வழக்கிலுள்ள எந்த மொழியும் தனித்தியங்க வாய்ப்பில்லை. இருவேறு மொழிச்சமுதாயங்கள் ஒன்றையொன்று சார்ந்துள்ள நிலையில் மொழியில் பிறமொழித்தாக்கம் தவிர்க்கமுடியாதது. இந்தத் தாக்கம் தாய்மொழியலலாத பிறமொழியானது கல்வி மொழியாக அமையும்போதும நிகழவல்லதாகும. தமிழகத்தில் அறிவியல், தொழில்நுட்பம், மேலாண்மை முதலிய துறைசார்ந்த கல்வி ஆங்கிலத்தில் அமைவதால் தமிழில் இந்தப் பாடங்கள் தொடர்பான ஆங்கிலச சொற்கள் இடம பெறுவதைத் தவிர்க்கமுடியாது. இதற்குக் காரணம் தமிழ்ச சமுதாயம் மொழிப்பயன்பாட்டுக்கு முன்னுரிமை அளிப்பதாகும். ஆயினும் தமிழ்ச் சமுதாயம் மொழிததூய்மையையும் வலியுறுத்தும தன்மையதாகும்.

மொழிததூய்மை என்பது தனித்தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்துவது மட்டுமே என்று கொள்வதற்கில்லை எடுத்துக்காட்டாக வேடபாளர், வங்கி ஆகிய இரண்டு சொற்களுள் முந்தையது தமிழ்ச சொல்லாகவும் பிந்தியது 'Bank' என்ற சொல்லின் திரிபாகவும் அமைகின்றன. இந்த நிலையில் வங்கி என்ற சொல்லையும் தமிழ்ச சொல்லாகவே ஏற்றுக்கொள்வது தான் ஏற்புடையதாகும. எனவே

தமிழ்ச்சொல் என்பது மறுவிளக்கத்திற்கு உரியதாகும். தமிழ் எழுத்தியல் மரபுக்கேற்ப தமிழில் திரிந்து வழங்கும் பிறமொழிச் சொற்களும் தமிழ்ச் சொற்களாகவே கருதத்தக்கனவாகும். இந்த வகையில் தமிழில் தொன்றுதொட்டு வழங்கிவரும் அசுவினி, பரணி முதலான நாட்பெயர்க்கிளவிகளும், புதன், வியாழன் ஆகிய கிழமைப்பெயர்களும் சித்திரை, வைகாசி முதலான திங்கட்பெயர்களும் தமிழ் மரபுக்கேற்ப திரிந்து திகழ்வதால் இவையும் தமிழ்ச்சொற்களாகக் கருதத்தக்கனவாகும். இத்தகைய சொற்களைத் தமிழ்ச் சமுதாயம் பயன்படுத்துவதால் தமிழின் தூய்மை பாதிக்கப்படுவதாகக் கருதமுடியாது. ஆயினும் தமிழ் எழுத்தியல் மரபுக்கேற்ப பிறமொழிச் சொற்கள் எல்லாவற்றையும் தமிழில் பயன்படுத்தவியலுமா என்பது கேள்விக்குறியாகும். எடுத்துக்காட்டாக, சென்ட்ரல் ரயில் நிலையம் என்ற தொடரைக் கருத்தில் கொள்க. இந்தத் தொடரில் சென்ட்ரல் என்ற சொல்லில் நிகழும் -ன்ட்- என்ற மெய்ம்மயக்கம் தமிழ் எழுத்தியல் மரபுக்கு முரண்பட்டதாகும். ஆனால் ரயில் என்ற சொல் தமிழ் எழுத்தியல் மரபுக்கு மாறாக ரகரத்தை மொழிமுதலில் கொண்டிருந்தாலும் இந்தச்சொல் 'Rail' என்ற ஆங்கிலச் சொல்லின் திரிபாகும். எனவே இதனைத் தமிழ்ச் சொல்லாகக் கொள்வதைப்பற்றி எண்ணிப்பார்க்கலாம். பிறமொழிச் சொற்களைத் தன்மொழியில் பயன்படுத்தும்போது மூன்றுவகையான உத்திகள் கருத்தில் கொள்ளப்படுகின்றன. ஒன்று, கடன் மொழிபெயர்ப்பு (Loan Translation) (எ.டு. Honey Moon - தேன் நிலவு), கடன் கலவை (Loan Blend) (எ.டு. Milk Powder - பால் பவுடர்), கடனாக்கம் (Loan Creation) (எ.டு Coal - நிலக்கரி). இந்த மூன்று உத்திகளுள் ஒரு மொழிக்குரிய சமுதாயம் எதனை மிகுதியாகப் பயன்படுத்துகிறது என்பது அந்தச் சமுதாயத்தின் மனநிலையைப் பொறுத்ததாகும். மொழித் தூய்மையை வலியுறுத்தும் சமுதாயம் கடன் மொழிபெயர்ப்பு, கடனாக்கம் ஆகிய உத்திகளை மிகுதியாகப் பயன்படுத்தும். ஆயினும் கடன்கலவை உத்தியானது மொழியின் எழுத்தியல் மரபைப் போற்றும் வகையில் அமைந்தால் அது மொழியின் தனித்தன்மையைச் சிதைத்துவிடும் என்று சொல்லமுடியாது. எடுத்துக்காட்டாக பால்பவுடர் என்ற தொடரில் பவுடர் என்பது ஆங்கில உச்சரிப்பினின்றும் மாறுபட்டதாகும். எனவே இந்தச் சொல்லை வங்கி என்ற சொல்லைப்போல் தமிழ்ச் சொல்லாகக் கருதுவதற்கான வாய்பபை எண்ணிப் பார்க்கலாம்.

## 2.0 மொழியிழப்பு: (Language Loss)

ஒரு மொழியில் பிறமொழித் தாக்கம் மிகுதியாக இருப்பதாலேயே அந்த மொழி வழக்கற்றுப் போய்விடுவதில்லை. எடுத்துக்காட்டாக தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மொழிகளில் வடமொழித்தாக்கம் மிகுதியாக இருந்தபோதிலும் அந்த மொழிகள் வழக்கற்றுப்போய்விடவில்லை. பிறமொழித் தாக்கமானது மொழியின் அமைப்பியல் கட்டமைப்பினைச் சிதைக்காதவரை அந்த மொழியானது நிலைத்து நிற்க வல்லதாகும். மொழியிழப்பு என்பது திடீரென்று நிகழ்வதில்லை. ஒரு மொழியானது பெரும்பான்மையோரால் பேசப்படும் ஒரு மொழிச் சமுதாயத்தில் சிறுபான்மை மொழியாக அமையுமாயின் அந்த மொழி காலப்போக்கில் வழக்கற்றுப்போக வாய்ப்புண்டு. இதற்கு முன்னோடியாகச் சிறுபான்மை மொழியாளர்கள் இரு மொழியத் தாக்கத்திற்கு இலக்காகின்றனர். இந்தச் சூழலில் சிறுபான்மையோரின் தாய்மொழியின் பயன்பாடு குறையத் தொடங்குகிறது. பல சூழல்களிலும் பெரும்பான்மையோரின் தாய்மொழியைப் பயன்படுத்தும் நிலைக்குச் சிறுபான்மை மொழிச்சமுதாயம் தள்ளப்படுகிறது. தமிழகத்தில் தெலுங்கு மொழி பேசும் சமுதாயம் சிறுபான்மை மொழிச் சமுதாயமாகும். இந்தச் சமுதாயத்தினர் தங்கள் தாய்மொழியை இழந்து தமிழ் மொழியைத் தாய்மொழியாகக் கொள்ளும் போக்கு நிலவுகிறது. ஆயினும் சிறுபான்மை மொழிச் சமுதாயத்தினர் சிதறிப் போகாமல் ஒன்றுபட்டவர்களாக இருக்கும்வரை அவர்கள் மொழியானது தக்கவைத்துக் கொள்ளப்படுகின்றது. தமிழகத்தில் மதுரையில் வசிக்கும் சௌராஷ்டிர சமுதாயத்தை இந்த வகையில் கருத்தில் கொள்ளலாம். எனவே மொழியிழப்பு என்பது பல நிலைகளில் ஆராயத்தக்க ஒன்றாகும்.

## 3.0 உயர்தனிச் செம்மொழி:

3.1 உயர்மொழி என்றும் தனிமொழி என்றும் செம்மொழி என்றும் மூன்று வகைகளில் தமிழ் உயர்தனிச் செம்மொழி என்று சிறப்பிக்கப்படுகிறது. இந்தச் சிறப்புக்குத் தமிழ் முற்றிலும் ஏற்புடைய ஒரு மொழியா என்பதை எங்ஙனம் கண்டறிவது? தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய நான்கு திராவிட மொழிகளும் இலக்கிய இலக்கணப்பாரம்பரியங்களைக் கொண்ட மொழிகளாகும். எனவே தெலுங்கு, கன்னடம், மலையாளம், ஆகிய மொழிகளையும் உயர்தனிச் செம்மொழிகளாக ஏன் கருதக்கூடாது? இலக்கிய இலக்கணங்களைக்

கொண்ட மொழிகளையெல்லாம் உயர்தனிச் செம்மொழிகளாகக் கருத நேர்ந்தால் இந்தோ ஆரிய குடும்பத்தைச் சேர்ந்த பல மொழிகளையும் உயர்தனிச் செம்மொழிகளாகக் கருத வேண்டும். ஆனால் இந்தோ ஆரிய மொழிக்குடும்பத்தில் சமஸ்கிருதம் மட்டுமே நீண்ட இலக்கண இலக்கியப் பாரம்பரியங்களைக் கொண்ட மொழியாக அமைகிறது. சமஸ்கிருதம் செம்மொழியாகக் கருதத் தக்கதாயினும் அந்த மொழி பயின்று வழங்கும் பேச்சு மொழியாக அமையாமல் சான்றோர் மொழியாகவே வேதகாலந்தொட்டுக் கருதப்பட்டு வருகிறது. அதன் கிளைமொழிகளும் பதிவு செய்யப்பெற்ற வழக்கு மொழிகளாகப் பயின்று வழங்கவில்லை. ஆயினும் இந்தோ ஆரிய மொழிக்குடும்பத்தைப் பொறுத்தவரை சமஸ்கிருதம் இலக்கிய இலக்கணங்களைக்கொண்ட ஒரு தொன்மையான மொழி என்பதில் இருவேறு கருத்துகளுக்கு இடமில்லை. தமிழைப் பொறுத்தவரையிலும் இதே நிலைதான். ஆயினும் சமஸ்கிருதத்தைப்போல் தமிழின் கிளைமொழிகள் வழக்கற்றுப் போகாமல் இன்றும் மக்கள் நாவில் பயின்று வழங்குகின்றன.

3.2 இலக்கிய இலக்கணப் பாரம்பரியத்தைக் கொண்ட நான்கு திராவிட மொழிகளுள் தமிழ் தொன்மையான ஒரு மொழியாகும். தமிழின் இத்தகைய பாரம்பரியம் ஒரு நெடிய வரலாற்றைக் கொண்டதாகும். இத்தகைய வரலாறு பிற திராவிட மொழிகளுக்கோ இந்தோ ஆரிய மொழிகளுக்கோ இல்லை. நெடிய இலக்கிய இலக்கண வரலாற்றைக் கொண்டு மட்டுமே ஒரு மொழியை உயர்தனிச் செம்மொழியாக மதிப்பீடு செய்யமுடியாது. தமிழைப் பொறுத்தவரை சங்க இலக்கியங்களாகிய பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் தொன்மையான படைப்புகளாகும். அதேபோல் தொல்காப்பியம் என்ற இலக்கண நூலும் தொன்மையான இலக்கண இலக்கிய மரபுகளை ஆராயும் ஓர் இலக்கண நூலாகும். சங்க இலக்கியங்களும் தொல்காப்பியமும் தமிழ் மரபைப் புலப்படுத்தும் அரிய உயரிய படைப்புகளாகும். தொல்காப்பியத்தைப் பொறுத்தவரை அது மொழியியல், இலக்கியவியல் ஆகிய இரண்டு நிலைகளில் மேற்கொள்ளப்பட்ட ஒப்புயர்வற்ற ஓர் இலக்கணப் படைப்பாகும். மொழியின் இலக்கணம் பேசும் போக்கினை மட்டுமே பிற மொழிகள் கொண்டுள்ளன. ஆனால் தமிழைப் பொறுத்தவரை தொல்காப்பியம் மொழி இலக்கணத்தை மட்டுமின்றி அக்காலத்தில் நிலவிய தமிழ் இலக்கிய மரபுகளையும் கருத்தில் கொண்டு தமிழ் இலக்கியவியலையும் ஆராய்ந்துள்ளது. இருவகையான இத்தகைய ஆய்வுகளை வேறு

எந்த மொழியிலும் காணமுடியாது. தமிழை உயர்தனிச் செம்மொழியாகக் கருதுவதற்கு அடித்தளமாக அமைந்தவை தொல்காப்பியமும் சங்க இலக்கியங்களுமாகும்.

## 4.0 பிறமொழித் தாக்கம்:

4.1 தமிழைப் பொறுத்தவரை அது பிற திராவிட மொழிகளைப்போல் வடமொழி எனப்படும் சமஸ்கிருத செல்வாக்கிற்கு இலக்காகவில்லை. இதற்கு என்ன காரணம்? தொல்காப்பியமும் சங்க இலக்கியங்களும் தமிழ் மரபையும் தமிழின் தனித்தன்மையையும் போற்றிக் காக்கும் படைப்புகளாக அமைந்ததே இதற்குக் காரணமாகக் கருதத்தோன்றுகிறது. தமிழில் பிற மொழித் தாக்கத்தைத் தொல்காப்பியம் மிக விழிப்புடன் கண்காணிக்கிறது. வழக்கற்ற மொழி என்பது தாய்மொழியாளர்கள் அற்ற மொழியாகும். வழக்கில் உள்ள எந்த மொழியும் தாய்மொழியாளர்களைக் கொண்ட மொழியாகும். இத்தகைய மொழியில் பிறமொழித் தாக்கத்தின் நிகழ்ச்சியைத் தவிர்க்க முடியாது. தமிழ் தாய்மொழியாளர்களைக் கொண்ட ஒரு மொழியாதலின் அது முழுக்க முழுக்கப் பிறமொழித் தாக்கமின்றித் தனித்தியங்க முடியாது. இதனை நன்குணர்ந்த தொல்காப்பியர் வடசொற்களைத் தமிழானது பயன்படுத்த நேர்ந்தால் அத்தகைய சொற்களைத் தனது தனித்தன்மைக்கு ஏற்பத் தமிழ் அமைத்துக்கொள்ள வேண்டும் என்று குறிப்பிட்டார். வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ, எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே' (சொல்.சேனா, 401) என்ற தொல்காப்பிய நூற்பா இதனை வலியுறுத்துவதாகும். செய்யுள் ஈட்டச்சொல் என்று தொல்காப்பியர் (சொல்.சேனா, 397) இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்று நான்குவகைச் சொற்களைக் குறிப்பிடுவார். எனவே தொல்காப்பியர் திரிசொல், திசைச்சொல்லைத் தவிர தமிழில் வடசொற்களின் தாக்கமும் தவிர்க்க முடியாதது என்பதை நன்கு உணர்ந்துள்ளார். ஆயினும் தமிழின் தனித்தன்மைக்கு முரணாகத் தொல்காப்பிய இலக்கிய இலக்கண மரபுகள் அமையவில்லை என்பதை நாம் கருத்தில் கொள்ளவேண்டும். தமிழைத் தனித்தன்மையுள்ள மொழியாகக் கருதுவதற்குத் தொல்காப்பியம் வலுவான ஓர் அடித்தளத்தை அமைத்துத் தந்துள்ளது. பழந்தமிழ் இலக்கிய மரபுகளும் தமிழ் மற்றும் தமிழரின் வாழ்வியல் மரபுகளைப் போற்றுவனவாகவே அமைந்துள்ளன. மொழி, இலக்கியம் இரண்டு

நிலைகளிலும் தமிழானது தனது தனித்தன்மையை வரலாற்றுக் காலந்தொட்டு போற்றிப் பாதுகாத்து வந்துள்ளது. அதுமட்டுமல்ல தமிழின் வழக்குப் பயிற்சியும் இன்றளவும் உயிர்த்துடிப்புடன் விளங்குகிறது. தமிழை உயர்தனிச் செம்மொழியாகக் கருதுவதற்கான காரணங்களுள் இவையும் கருத்தில் கொள்ளத்தக்கனவாகும்.

## 5.0 மொழித்தூய்மையும் மொழியின் தனித்தன்மையும்:

5.1 மொழியின் தனித்தன்மை என்பதும் மொழியின் தூய்மை என்பதும் ஒன்றோடொன்று தொடர்புள்ளவையா? இதையே வேறுவகையில் சொல்லவேண்டுமென்றால், தமிழின் தனித்தன்மை மற்றும் தமிழின் தூய்மை இரண்டும் ஒன்றையொன்று சார்ந்தவையா? தழிழைப் பொறுத்தவரை இது ஒரு சிக்கலான கேள்வியாகும். மொழியின் தனித்தன்மை என்பது அதன் உள்கட்டமைப்பை அடிப்படையாகக் கொண்டதாகும். இந்த உள் கட்டமைப்பு எழுத்தியல், சொல்லியல், தொடரியல், தொடரனியல் ஆகிய பல நிலைகளில் அமைவதாகும். ஒரு மொழியின் அமைப்பானது பிற மொழியின் அமைப்பியல் தாக்கங்களுக்கு இலக்காகாதவரை அந்த மொழியின் தனித்தன்மை போற்றப்படுவதாகக் கருதலாம். ஓர் எடுத்துக்காட்டின் மூலம் இதை விளக்கலாம். தமிழ் ஒரு பின்னொட்டு மரபைக் கொண்ட மொழியாகும். ஆயினும் அசைவம், அநாகரிகம், அசுத்தம், அவமரியாதை, அவநம்பிக்கை ஆகிய முன்னொட்டுக்களைக் கொண்ட சொற்கள் தமிழில் பரவலாகக் காணப்படுகின்றன. இந்த முன்னொட்டு மரபு தமிழின் பின்னொட்டு மரபைச் சிதைக்காதவரை அதன் தனித்தன்மை போற்றப்படுவதாகக் கருதலாம். அதேபோல் எழுவாய் - பயனிலை - செயப்படுபொருள் என்ற வைப்பு முறையிலான ஆங்கில வாக்கியத்தின் தாக்கம் எழுவாய் - செயப்படுபொருள்-பயனிலை . என்ற வைப்பு முறையிலான தமிழின் வாக்கிய அமைப்பைச் சிதைக்காதவரை தமிழின் தனித்தன்மை போற்றப்படுவதாகவே கருதவேண்டும். எனவே மொழியின் தனித்தன்மையும் மொழியின் தூய்மையும் ஒன்றையொன்று சார்ந்தவை எனக் கருதமுடியாது. ஆனால் தமிழ்ச்சமுதாயம் தமிழின் தனித்தன்மையும் தூய்மையும் பின்னிப் பிணைந்தவையாகக் கருதுகின்றது. இதற்கு என்ன காரணம்?

5.2 வரலாற்று நிலையில் தனித்தன்மை, தூய்மை இரண்டும் தமிழின் இரண்டு கண்களாகக் கருதப்பட்டு வந்துள்ளன. தொல்காப்பியர்

பயன்பாட்டு நிலையில் வடசொற்களைச் செய்யுள் ஈட்டச் சொற்களாக எடுத்தாள்வதை மறுக்கவில்லை. இந்தநிலையினைச் சங்க இலக்கியங்கள்தொட்டு, காப்பிய இலக்கியங்கள், பக்தி இலக்கியங்கள் வரை காணலாம். தனித்தன்மை என்ற நிலையில் தொல்காப்பியர் ஒருபடி மேலேபோய் தமிழ் நெடுங்கணக்கிலும் இதனை வலியுறுத்துகிறார். தமிழில் எழுத்துக்களின் வைப்புமுறை பிராமி நெடுங்கணக்கின் வைப்புமுறையைக் கொண்டதாகும். பிராமி நெடுங்கணக்கில் மெய்யெழுத்துக்கள் புள்ளி பெறுவதில்லை. இந்த நெடுங்கணக்கில் எகர ஒகரக் குறில்களுக்கு இடமில்லை. இதனைக் கருத்தில் கொண்ட தொல்காப்பியர் மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்' (எழுத்து, இளம், 15), எகர ஒகரத்து இயற்கையும் அற்றே' (எழுத்து இளம், 16) என்ற நூற்பாக்களின் வாயிலாகத் தமிழ் நெடுங்கணக்கின் தனித்தன்மையை வலியுறுத்துகிறார். இதனின்றும் தமிழ் மரபானது தனித்தன்மைக்கு எத்துணை முக்கியத்துவம் தந்துள்ளது என்பது புலனாகும். மொழித் தூய்மையைப் பொறுத்தவரை அதன் அமைப்பியல் மரபுகள் இலக்கணிகளாலும் புலவர்களாலும் பெரிதும் போற்றப்பட்டு வந்துள்ளது.

6.0 சில மெய்ம்மயக்கங்கள்:

தொல்காப்பியர் குறிப்பிடும் பல மெய்ம்மயக்கங்கள் தனி மொழிகளில் நிகழ -ல்ய்-, -ல்வ்-, -ள்ய்-, -ள்வ்- (எழுத்து, இளம், 24). -ஞ்ய்-, -ந்ய், -ம்ய்-, -வ்ய்-, (எழுத்து, இளம் 27), -ம்வ்-, ஆகிய மெய்ம்மயக்கங்கள் தனி மொழியில் நிகழவில்லை. உரையாசிரியர்கள் இந்த மெய்ம்மயக்கங்களுக்குத் தொடர் மொழிகளையே எடுத்துக்காட்டுகளாகக் குறிப்பிடுகின்றனர். இந்த வகையில் தொல்காப்பியரின் நிலைப்பாடு நமக்குத் தெளிவாகப் புலப்படவில்லை. வடசொற்களைச் செய்யுள் வழக்கில் பயன்படுத்தலாம் என்ற தொல்காப்பியரின் கூற்றினைக் கருத்தில் கொண்டால் மேற்படி மெய்ம்மயக்கங்கள் வடசொற்களைக் கருத்தில் கொண்டதாக இருக்கலாமோ என்று கருதலாம். ஆயினும் மொழியில் தனித்தன்மை என்று எடுத்துக்கொண்டால் இந்தக் கருதுகோள் அடிபட்டுப்போகும். ஏனெனில் பழந்தமிழிலாகட்டும் பின்பழந்தமிழிலாகட்டும் பக்தி இலக்கியங்கள் போற்றிய தமிழாகட்டும் மேற்படி மெய்ம்மயக்கங்களைக் கொண்ட வடசொற்களின் நிகழ்ச்சி காணப்படவில்லை இந்த நிலையில்

தொல்காப்பியர் குறிப்பிடும் தமிழின் தனி மொழிகளில் நிகழாத சில மெய்ம்மயக்கங்களின் நிகழ்ச்சி ஆய்வுக்குரியதாகின்றது.

7.0 தொல்காப்பியரின் நாளும் திங்களும்:

மொழியின் தூய்மையைப் பொறுத்தவரை தமிழில் வடசொற்களின் பயன்பாட்டைத் தொல்காப்பியர் முற்றிலுமாகப் புறக்கணிக்கவில்லை. நாட்பெயர்க் கிளவிகளும் திங்கட்பெயர்க் கிளவிகளும் உயிரீற்று மெய்யீற்றுப் பதப்புணர்ச்சிகளில் புணருமாற்றினைப் பற்றித் தொல்காப்பியர் பின்வரும் நான்கு நூற்பாக்களில் பேசுகிறார்.

(அ) நாள்முன் தோன்றும் தொழில்நிலைக் கிளவிக்கு
ஆன்இடை வருதல் ஐயம் இன்றே (எழுத்து, இளம், 248)

(ஆ) திங்கள் முன்வரின் இக்கே சாரியை (எழுத்து, இளம், 249)

(இ) திங்களும் நாளும் முந்துகிளந் தன்ன (எழுத்து, இளம்,287)

(ஈ) நாட்பெயர்க் கிளவி மேற்கிளந் தன்ன
அத்தும் ஆன்மிசை வரைநிலை யின்றே
ஒற்றுமெய் கெடுதல் என்மனார் புலவர் (எழுத்து, இளம்,332).

இந்த நூற்பாக்கள் மூலம் நாட்பெயர்களாக அசுவினி, பரணி, கார்த்திகை, மகம், பூரம் முதலானவையும் சித்திரை, வைகாசி, ஆனி முதலானவையும் தொல்காப்பியர் காலத்திலேயே தமிழகத்தில் பயின்று வழங்கின என்பது தெளிவாகின்றது. தொல்காப்பியர் குறிப்பிடும் நாட்பெயர்களும் திங்கட்பெயர்களும் தமிழுக்குரியனவல்ல. வடமொழியைச் சார்ந்த இவை தமிழ் எழுத்தியல் மரபிற்கேற்ப மாற்றியமைக்கப்பட்டவையாகும். இதனின்றும் வடசொற்களைத் தமிழ், வடமொழியில் உள்ளவாறே ஏற்றுக்கொள்ளவில்லை என்ற உண்மை பெறப்படுகிறது. தவிரவும் பழந்தமிழைப் பொறுத்தவரை தமிழில் வழங்கிய வடமொழிச்சொற்கள் தமிழின் தனித்தன்மையையோ தூய்மையையோ பாதிக்கவில்லை என்பதும் கருத்தில் கொள்ளத்தக்கதாகும்.

8.0 இருவகைத் தாக்கங்கள்:

தமிழின் அமைப்பியல் மரபுகள் இரண்டு வகையான தாக்கங்களைக் கொண்டதாகும். ஒன்று, அகநிலைத் தாக்கம்,

பிறிதொன்று புறநிலைத் தாக்கம். முதலில் அகநிலைத் தாக்கத்தைப்பற்றிச் சிந்திக்கலாம். தமிழ் ஓர் இரட்டை வழக்கு மொழியாகும். இரட்டை வழக்கு என்பது இருவகையான வழக்குகளைக் கருத்தில் கொண்டதாகும். இந்த வழக்குகளை செவ்விய வழக்கு என்றும் பேச்சு வழக்கு என்றும் மொழியியலார் குறிப்பிடுவர். தமிழில் செவ்விய வழக்கு என்பது செய்தி அறிக்கைகளிலும் பாட நூல்களிலும் ஆய்வுக் கட்டுரைகளிலும் அரசாணைகளிலும் வெளியிடங்களிலும் பயன்படுத்தும் மொழியாகும். பேச்சு வழக்கு செவ்விய வழக்கில் இடம்பெறுமானால் அதனை மொழித் தூய்மைக்கு எதிரானதாகக் கருதமுடியுமா? பழந்தமிழில் நெடில் குறில் மயக்கமாகப் பயின்று வழங்கும் பல சொற்கள் காணப்படுகின்றன. எ.டு. கழீஇ, குரீஇ, தழீஇ, தழுஉகம், தருஉம், தருஉந்து, உண்பதூஉம். இத்தகைய சொற்களைத் திரிசொற்கள் எனக் கருதலாம். இவை இயற்சொற்களின் திரிந்த வடிவங்களாகும். இவற்றுக்கு நிகரான இயற்சொற்கள் கீழே குறிக்கப்பெற்றுள்ளன.

| இயற்சொல் | திரிசொல் |
|---|---|
| 2. (அ) கழுவி | கழீஇ (நற். 12.5) |
| (ஆ) குருவி | குரீஇ (குறு. 46.2) |
| (இ) தழுவி | தழீஇ (அகம். 6.8) |
| (ஈ) தழுவுகம் | தழுஉகம் (நற். 50.3) |
| (உ) தருகும் (தருகு+ உம்) | தருஉம் (பதி. 21.19) |
| (ஊ) தருகுந்து (தருகு+ உந்து) | தருஉந்து (புறம், 24.9) |
| (எ) உண்பதுவும் | உண்பதூஉம் (குறள், 166) |
| (ஏ) எழுவுதல் எழுப்புதல் | எழுஉதல் (தொல்.எழுத்து.இளம்.6) |
| (ஐ) எழுவிய (க.ரா, சுந்தர. 5158) | எழீஇய (கலி. 70.22) 'எழுப்பிய' |

| | |
|---|---|
| (ஒ) செய்நர் (*< செயுநர்) | செய்ஞ்ஞர் (க.ரா, பால.423) |
| (ஓ) எனக்கு | எற்கு (பரி, 20.81, க.ரா, அயோ.1382) |
| (ஔ)நினக்க | நிற்கு (க.ரா, அயோ. 1353) |
| (க) கலிழும் (குறு. 11.2) | கலுழும் (நற்.66.10) |
| (கா)மகனுக்கு | மகற்கு (குறள், 67) |

8.2 தொல்காப்பியர் (சொல், சேனா, 399) ஒரு பொருள் வேறு சொல்லையும் (எ.டு. வெற்பு, விலங்கல், விண்டு), வேறு பொருள் குறித்த ஒரு சொல்லையும் (எ.டு. எகினம் - அன்னம், கவரிமா, புளிமா, நாய்) திரிசொற்களாகக் கருதுவர். சேனாவரையர் தொல்காப்பிய நூற்பாவிற்குக் குறிப்பிடுவதுபோன்ற எடுத்துக்காட்டுக்களைத்தான் தொல்காப்பியர் கருதினாரா என்பது ஆய்வுக்குரிய ஒன்றாகும். திரிசொல் என்பது ஒரு சொல்லினின்றும் திரிந்தமையும் வடிவமேயாகும். இந்த அடிப்படையில் வெற்பு, விலங்கல், விண்டு ஆகியவை ஒரு பொருள் குறித்தனவாயினும் அவற்றை ஒன்றினின்றும் திரிந்த திரிசொற்களாகக் கருதுவதற்கு வாய்ப்பில்லை. மாறாக தழுவி என்பதன் திரிபாக அமையும் தழீஇ என்பதைத் திரி சொல்லாகக் கொள்வது பொருத்தமாகத் தோன்றுகிறது. இதேபோல் பலபொருள் குறித்த எகினம் என்பதையும் திரிசொல்லாகக் கருதமுடியாது. ஒரு சொல்லின் பொருண்மை அதனுடன் தொடர்புள்ள பொருண்மையாகத் திரியுமாயின் அந்தச் சொல்லைத் திரிசொல்லாகக் கருதலாம். எ.டு. கால் - உறுப்பு, நான்கில் ஒரு பங்கு, இடை - இடம், இடுப்பு, தலை - முதன்மை, உறுப்பு. ஆயினும் இத்தகைய நமது கருதுகோள் தொல்காப்பியரின் திரிசொல் பற்றிய கருதுகோளினின்றும் மாறுபட்டது என்பதை மறுப்பதற்கில்லை. பழந்தமிழில் நிகழும் தொலைச்சு (அகம், 18.28) (*< தொலய்க்கு), அடைச்சு (நற். 337.5) (*< அடய்க்கு), பழிச்சு (பதி. 41.6) (=பழிக்கு *< பழிய்க்கு) முதலானவையும் இடைக்காலத் தமிழில் நிகழும் இழிச்சுவார் (க.ரா, பால. 774) என்பதன் பகுதியாகிய இழிச்சு (= இழிக்கு *< இழிய்க்கு) என்பதும் திரி

சொற்களாகக் கருதத்தக்கவையாகும்.

8.3 தழீஇ, தழூஉகம், தரூஉந்து முதலான திரிசொற்கள் ஒரு குறிப்பிட்ட கிளைமொழிக்கு உரியவையாகும். இத்தகைய திரிசொற்கள் தமிழகத்தில் எந்தப் பகுதியில் வழங்கிய கிளைமொழிக்கு உரியவை என்பதை அறுதியிட்டுக் கூறமுடியவில்லை.

பழந்தமிழிலேயே இதுபோன்ற திரிசொற்கள் மிகுதியாக இடம்பெற்றிருப்பதால் தமிழானது தகுமொழியாக ஏற்றுக்கொள்ளப்பட்ட காலத்துக்குமுன்பே வழங்கிய ஒரு கிளைமொழியில் இவை நிகழ்ந்திருக்க வேண்டும். பழந்தமிழ் ஒரு குறிப்பிட்ட கிளைமொழியின் அடித்தளத்தைக் கொண்டதாகக் கருதமுடியாது. சங்க இலக்கியம் பல்வேறு கிளைமொழிகளின் தாக்கத்திற்கு உட்பட்ட இலக்கியமாகும். இரட்டைவழக்குப் பின்னணியில் இந்தக் கிளைமொழித் தாக்கங்களில் இனங்காண முடியும். சங்க இலக்கியத்திலேயே செவ்விய வழக்கும் பேச்சு வழக்கும் பயின்று வழங்கிய நிலையைத் தொல்காப்பியம் சுட்டுகிறது. எ.டு. குளக்கரை/ குளங்கரை, செய்கும் / செய்வோம், செய்கம் / செய்வோம், வருதும் / வருவோம்.

8.4 இடைக்காலத் தமிழில் எதுகை கருதிப் பேச்சு வழக்குச் சொற்களைத் தமது படைப்புக்களில் பயன்படுத்தப் புலவர்கள் தயங்கவில்லை. இந்த வகையில் இத்தகைய சொற்களைத் திரி சொற்களாகக் கருதலாம். பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் கருத்தில் கொள்க.

| | இயற்சொல் | திரிசொல் |
|---|---|---|
| 3. (அ) | நிறைந்த | நிறைஞ்ச (க.ரா, பால, 1106) |
| (ஆ) | மைந்தர் | மஞ்சர் (க.ரா, பால. 1135) |
| (இ) | மைந்தன் | மஞ்சன் (க.ரா, பால.1180) |
| (ஈ) | உய்ந்தனென் | உஞ்சனென் (க.ரா, சுந்தர.5244) |

| | | |
|---|---|---|
| (உ) | உய்ந்தனை | உஞ்சனை (க.ரா, சுந்தர. 5186) |
| (ஊ) | அய்ந்து | அஞ்சு (க.ரா, சுந்தர. 5431) |
| (எ) | மடிந்தபின் | மடிஞ்சபின் (க.ரா, அயோ 2354) |
| (ஏ) | உய்ந்து | உஞ்சு (க.ரா, அயோ, 2316) |
| (ஐ) | விரைந்து | விரைஞ்சு (க.ரா, அயோ.241) |
| (ஒ) | தெரிந்து | தெரிஞ்சு (க.ரா, அயோ.1334) |
| (ஓ) | மொய்த்த | மொய்ச்ச (சம்.தே.2-ஆம் திரு.65.4) |
| (ஔ) | அய்ந்தினர் | அஞ்சினர் (சம்.தே.2-ஆம் திரு.7.3) |
| (க) | காய்ச்சு | காச்சு (சம்.தே.2-ஆம் திரு.9.2) |
| (கா) | வாய்ச்சு | வாய்ச்சு |
| (கி) | நைந்தேன் | நைஞ்சேன் (திருவா. 25.10) |

தமிழ் இலக்கியத்தைப் பொறுத்தவரை இரட்டை வழக்கு நிலை பழந்தமிழிலேயே இடம் பெற்றுவிட்டதையும் இடைக்காலத் தமிழில் எதுகை கருதி பேச்சு வழக்கிலமைந்த திரி சொற்கள் உயர் வழக்கில் இடம்பெற்றுள்ளதையும் மேலே குறிப்பிட்ட எடுத்துக்காட்டுக்கள் தெளிவுபடுத்துகின்றன. பேச்சு வழக்கு செவ்விய வழக்கில் இடம் பெறுவதை மொழித் தூய்மைக்கு எதிராகத் தமிழ்ப் புலவர்கள் கருதவில்லை. இக்கால இலக்கியங்களிலும் இந்த நிலையைக்

காணலாம். *இன்பத் தேன்வந்து பாயுது காதினிலே, ஒரு சக்தி பிறக்குது மூச்சினிலே* என்ற பாரதியின் கவிதைகளில் நிகழும் *பாயுது, பிறக்குது* ஆகிய சொற்கள் பேச்சு வழக்கினவாகும். ஆயினும் இவற்றைப் *பாய்கிறது, பிறக்கிறது* ஆகியவற்றின் திரிசொற்களாகக் கருதமுடியாது. *பாயுது/பாய்கிறது, பிறக்குது/பிறக்கிறது* ஆகியவை இரு வேறு வளர்ச்சிப் போக்கினைக் கொண்டவை. இங்கே கருத்தில் கொள்ள வேண்டியது பேச்சு வழக்கு செவ்விய வழக்கில் இடம் பெறுவதால் பிந்தியதின் தூய்மையும் தனித்தன்மையும் பாதிக்கப்படுவதில்லை என்பதாகும்.

9.0 ஓர் அச்சம்:

தமிழைப் பொறுத்தவரை அதன் தூய்மையும் தனித்தன்மையும் பிறமொழித் தாக்கத்தால் பாதிக்கப்படுவதாகக் கருதப்படுகிறது. இவ்வாறு கருதப்படுவதற்குக் காரணம் தமிழின் நீண்ட இலக்கிய இலக்கணப் பாரம்பரியமேயாகும். இந்தப் பாரம்பரியத்தைப் பாதிக்கும் வகையில் பிறமொழித் தாக்கம் அமைந்து விடக்கூடாது என்ற அச்சமே தனித்தமிழ் இயக்கத்தைத் தமிழகத்தில் ஒரு வலுவுள்ள இயக்கமாக வேர்கொள்ளச் செய்துள்ளது. இந்த அச்சம் கொள்ளத்தக்கதுமல்ல, தள்ளத்தக்கதுமல்ல. தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய திராவிட மொழிகளுள் வடமொழியின் செல்வாக்கு கணிசமாக உள்ளது. இந்த மொழிகளில் காணப்படும் வடமொழித் தாக்கத்தைத் தவிர்த்துவிட்டால் இவை தனித்து இயங்குமா என்பது ஒரு கேள்விக்குறியாகும். காரணம் இந்த மொழிகளில் காணப்படும் சொல்வளம் வடமொழியைச் சார்ந்தே அமைந்துள்ளது. இதனை வேறு வகையில் குறிப்பிடவேண்டுமானால் இந்த மொழிகள் வடமொழியின் துணையின்றிச் சொற்களை ஆக்கிப்படைத்துக்கொள்ளும் ஆற்றலை இழந்துவிட்டனவாகவே கருதவேண்டும். தமிழைப் பொறுத்தவரை இந்த நிலை இல்லை. தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மொழிகளுக்கு வடமொழியின் தாக்கத்தால் ஏற்பட்ட நிலை தமது மொழிக்கு ஏற்பட்டுவிடக்கூடாது என்ற தமிழர்களின் அச்சம் ஏற்புடையதாகவே தோன்றுகிறது. ஆயினும் பழந்தமிழ் தொட்டு இன்றைய தமிழ்வரை பிறமொழித் தாக்கம் தமிழில் உணரப்படாமல் இல்லை. இதற்குக் காரணம் தமிழ் இன்றளவும் உயிர்த்துடிப்புள்ள பேச்சு மொழியாக இருப்பதும் செவ்விய வழக்காகிய செந்தமிழ்

தாய்மொழியாளர்களைக் கொண்டதாக இல்லையாயினும் கல்வியறிவற்ற தமிழர்களும் அதனைப் புரிந்துகொள்ளும் வகையில் நெகிழ்ச்சியுற்று அமைந்துள்ளதுமாகும். இந்த நெகிழ்ச்சிக்குக் காரணம் திரிசொற்கள் மட்டுமல்ல பிறமொழிச் சொற்களும் செவ்விய வழக்கில் இடம்பெறுவதேயாகும். ஆயினும் தமிழைப் பொறுத்தவரை பிறமொழித் தாக்கத்தை ஓரளவுக்குமேல் அனுமதிப்பதைத் தமிழர்கள் விரும்பவில்லை. மொழியின் தூய்மையும் தனித்தன்மையும் அதைப் பேசும் சமுதாயத்தின் மொழிபற்றிய கண்ணோட்டத்தைப் பொறுத்ததாகும். தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மொழி சார்ந்த சமுதாயம் மொழியின் தனித்தன்மையையும் தூய்மையையும் முனைப்பாகக் கருத்தில் கொள்ளவில்லை. இந்தச் சமுதாயத்திற்கு மொழி ஒரு செய்திப் பரிமாற்றத்திற்குரிய கருவியாகும். ஆனால் தமிழ்ச் சமுதாயத்தின் மொழிக் கண்ணோட்டம் இதற்கு எதிரானதாகும். இந்தச் சமுதாயத்திற்கு மொழியானது கருத்துப் பரிமாற்றத்திற்குரிய கருவி மட்டுமன்று, உயிரோடும் உணர்வோடும் கலந்துவிட்ட ஒரு குருதியோட்டமும் ஆகும். எனவேதான் தமிழகத்தில் தனித்தமிழ் இயக்கங்கள் வலுவாகக் கால் கொண்டுள்ளன. இந்த இயக்கங்கள் இல்லாமற் போயிருந்தால் தமிழில் காணப்படும் மொழிக்கலப்பற்ற சொல்வளத்திற்கு வாய்ப்பில்லாமற் போயிருக்கும்.

## 10.0 தமிழில் மணிப்பிரவாளம்:

10.1 இடைக்காலத்தில் தமிழ் நெடுங்கணக்கில் ஜ, ஷ, ஹ, க்ஷ, ஸ்ரீ ஆகிய கிரந்த எழுத்துக்கள் இடம் பெறத் தொடங்கின. இவை தமிழில் மணிப்பிரவாள வழக்கை முதன்மைப்படுத்தும் வகையில் திணிக்கப்பட்டவையாகும். இவற்றுள் க்ஷ, ஸ்ரீ இரண்டும் முறையே ககரத்தையும் ஈகாரம் ஊர்ந்த ரகரத்தையும் கொண்ட கூட்டெழுத்துக்களாகும். வரிவடிவைப் பொறுத்தவரை ககரமும் ஈகாரம் ஊர்ந்த ரகரமும் தமிழ் எழுத்துக்களாகும். ஒரு வகையில் குறிப்பிடவேண்டுமானால், க்ஷ, ஸ்ரீ இரண்டும் தமிழ் வரிவடிவமும் கிரந்த வரிவடிவமும் இணைந்த மணிப்பிரவாள எழுத்துக்களாகும்.

10.2 தமிழில் மணிப்பிரவாள வழக்கு இடைக்காலத்தில் இடம் பெறத்தொடங்கியது. சமண தீர்த்தங்கரர்களைப்பற்றிப் பேசும் ஸ்ரீ புராணமும் நம்மாழ்வாரின் திருவாய்மொழிக்கு அமைந்த ஈடு உரைகளும் தமிழும் வடமொழியும் கலந்த மணிப்பிரவாள வழக்கை மிகுதியாகக்

கொண்டவையாகும். இந்த வழக்கு தமிழின் தனித்தன்மையையும் தூய்மையையும் பெரிதும் சிதைப்பதாக அமைந்தது. பொதுவாக மணிப்பிரவாள வழக்கு ஒரு குறிப்பிட்ட இனச் சார்புடையதாகக் கருதப்பட்டது. அக்குறிப்பிட்ட சமுதாயம் வடமொழிக்கு அரணாக நின்றதால் அவ்வினத்தாரல்லாத தமிழ்ச் சமுதாயம் வடமொழிக்கெதிரான ஒரு நிலைப்பாட்டினை எதிர்கொள்ள வேண்டியிருந்தது. தமிழின் தனித்தன்மையையும் தூய்மையையும் பாதுகாக்க மேற்கொள்ளப்பட்ட இந்த நிலைப்பாடு அக்குறிப்பிட்டச் சமுதாயத்திற்கும் எதிராகத் திரும்பியது. இதன் காரணமாக மணிப்பிரவாள வழக்கு தமிழில் செல்வாக்கு இழந்து பின்னர் சுவடற்றுப் போய்விட்டது.

10.3 தமிழ்ச் சமுதாயத்தில் வரலாற்றுக் காலந்தொட்டே சமண, பௌத்தத் தாக்கங்கள் வேர்கொள்ளத் தொடங்கின. இந்தத் தாக்கங்கள் வைதிக சமயத்திற்கும் தமிழ் மொழிக்கும் பாதிப்பை ஏற்படுத்தும் என்ற அச்சம் நிலவியது. இதன் விளைவாகத் தோன்றியதே பக்தி இயக்கமாகும். கிட்டத்தட்ட நான்கு நூற்றாண்டுகள் (கி.பி. 6-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 10-ஆம் நூற்றாண்டு வரை) ஆழ்வார்களின் பாசுரங்களும் நாயன்மார்களின் பதிகங்களும் சமண, பௌத்த சமயங்களின் செல்வாக்கையும் தமிழகத்தில் வேரறுத்ததுடன் தமிழில் வடமொழியின் ஊடுருவலையும் தடுத்து நிறுத்தின. பக்தி இயக்கம் தமிழகத்தில் தோன்றாமல் இருந்திருந்தால் தமிழ்ச் சமுதாயத்தின் சமயப் பண்பாடும் தமிழின் தனித்தன்மை செறிந்த தூய்மையும் பாதிக்கப்பட்டிருக்கக்கூடும்.

10.4 உயிர்த்துடிப்புள்ள எந்தப் பேச்சு மொழியும் செய்திப் பரிமாற்றப் பயன் கருதி பிற மொழிச் சொற்களைப் பயன்படுத்துவது தவிர்க்கமுடியாததாகும். தமிழ் மொழியில் பயின்று வழங்கும் அமைச்சு, அதிகாரம், ஆணை, ஊசி, காரணம், விஷம், நாட்பெயர்கள், மாதப்பெயர்கள், உயில், ஈரங்கி, கைதி முதலான எண்ணற்ற சொற்கள் தமிழுக்குரியவையல்ல. மறத்தி, உழத்தி, ஒருத்தி முதலான சொற்களில் திகழும் தி என்னும் பெண்பால் விகுதி ஸ்திரி என்பதன் பிராகிருதத் திரிபாகும். தமிழில் இரண்டறக் கலந்துவிட்ட நிலையில் இவற்றைத் தவிர்க்கமுடியாது. அதேசமயத்தில் வேட்பாளர், பேருந்து, அறிவிக்கை முதலான தமிழ்ச் சொற்களைப் படைத்துக் கொள்ளும் ஆற்றலும் தமிழுக்கு உள்ளது என்பதும் உண்மையாகும். இதற்குக் காரணமாக

அமைவது தமிழ்ச்சமுதாயம் வரலாற்றுக் காலந்தொட்டுப் போற்றிப் பாதுகாத்துவரும் மொழி தொடர்பான தனித்தன்மையும் தூய்மையுமேயாகும்.

## சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம் | - | அகநானூறு |
| அயோ | - | அயோத்தியா காண்டம் |
| இளம் | - | இளம்பூரணம் |
| எழுத்து | - | எழுத்ததிகாரம் |
| ஐங் | - | ஐங்குறுநூறு |
| க.ரா. | - | கம்ப ராமாயணம் |
| கலி | - | கலித்தொகை |
| குறள் | - | திருக்குறள் |
| குறு | - | குறுந்தொகை |
| சம் | - | சம்பந்தர் |
| சுந்தர | - | சுந்தர காண்டம் |
| சேனா | - | சேனாவரையம் |
| சொல் | - | சொல்லதிகாரம் |
| திரு | - | திருமுறை |
| திருவா | - | திருவாசகம் |
| தே | - | தேவாரம் |
| தொல் | - | தொல்காப்பியம் |
| நற் | - | நற்றிணை |
| பதி | - | பதிற்றுப்பத்து |
| பரி | - | பரிபாடல் |
| பால | - | பாலகாண்டம் |
| புறம் | - | புறநானூறு |

இந்தக் கட்டுரையில் குறிக்கப்பெற்றுள்ள கம்பராமாயண எடுத்துக்காட்டுக்கள் கோவை கம்பன் கழகப் பதிப்பிலிருந்து எடுக்கப்பட்டவையாகும்.



# 2. சமூகவியல் நோக்கு : மொழித்தூய்மை

முனைவர் எல். இராமமூர்த்தி
புதுச்சேரி மொழியியல் பண்பாட்டு
ஆராய்ச்சி நிறுவனம்,
புதுச்சேரி

முன்னுரை:

சமூக அமைப்பு என்பது பல்வேறு சமூக நிறுவனங்களின் இயக்க அடிப்படையில் அமையும். சமூகத்தின் ஒட்டு மொத்த விழுமியங்கள் சமூக நிறுவனங்களின் கட்டமைப்பினாலும் செயல்பாடுகளினாலும் நிர்ணயிக்கப்படுகின்றன. ஒரு சமூகத்தின் மொழியும் ஏனைய சமூக நிறுவனங்களாகிய குடும்பம், சாதி, சமயம், வேளாண்மை, போன்று முதன்மை மிக்க சமூக நிறுவனமாகும். மொழியும் சமூகமும் ஒன்றோடு ஒன்று நெருங்கிய தொடர்புடன் செயல்படும். மொழி என்பது ஒரு சமூக நிறுவனமாக மட்டுமன்றிப் பிற சமூக நிறுவனங்களின் விழுமியங்களைத் தன்னகத்தே பொதிந்து வைத்தும் செயல்படுகிறது. சமூகத்தின் விழுமியங்களைக் கட்டமைப்பதுவும், அதைத் தலைமுறைகள் தாண்டிக் கொண்டு செல்வதுவும் மொழிதான். ஒரு சமுதாயத்தின் பண்பாடாகவும், பண்பாட்டாக்கக் கருவியாகவும் மொழி செயல்படுவதால், சமூகத்தில் நடைபெறுகின்ற மாற்றங்கள் மொழியில் பிரதிபலிக்கப்படும். எனவே மொழித் தூய்மைச் செயல்பாடுகள் என்பதும் பிற நிறுவனங்களின் தூய்மை வாய்பாட்டை ஒட்டியே அமையும். சமூகத்தின் தூய்மை வாய்பாட்டைத்தான் மொழியிலும் காணமுடியும். இந்த நிலையில், தமிழ்த் தூய்மை என்ற சொல்லாட்சி, மொழித்தூய்மையை மட்டுமன்றி, சமூகத் தூய்மை வாய்பாட்டையும் ஆராய்வதாக இங்கு ஆளப்பட்டுள்ளது. தமிழ்த் தூய்மை பற்றிப் பல்வேறு அறிஞர்கள் பல ஆண்டு காலம் சிந்தித்து வந்துள்ளனர். ஆனால், தூய்மை வாய்பாட்டைச் சமூகத்துடன் இணைத்து ஆராய்ந்தவர்கள் கைலாசபதி, அண்ணாமலை, சிவத்தம்பி போன்றோர்தான். அந்த வரிசையில் இக்கட்டுரையும் தமிழ்த் தூய்மையோடு சமுதாயத் தூய்மைச் செயல்பாடுகள் எவ்வாறு தமிழில் காணப்படுகின்றன என்பதை ஆராய்கிறது.

### தூய்மையும் அதிகாரமும்:

தூய்மை பற்றிய சிந்தனை என்பது சமுதாயமோ, மொழியோ தத்தம் இயங்கு தளத்தில் செயல்படும்போது ஏற்படாது. சமூகத்தின் வளர்ச்சியாலும் மாற்றங்களினாலுமே இத்தகைய எண்ணங்கள் தோற்றுவிக்கப்படுகின்றன. சமூக மாற்றம் என்பது கால அடிப்படையில் பிற சமூகத்தின் தாக்கத்தால் அறியப்படுகின்றது. ஒரு சமுதாயத்தின் பண்பாட்டுச் சிறப்பு, பொருளாதார வளர்ச்சி போன்றவை ஏற்றத்தாழ்வுகளை ஏற்படுத்தி, அதிகாரக் குவிப்பைத் தோற்றுவிக்கின்றன. இத்தகைய அதிகாரத் குவிப்பும், சமூக ஏற்றத்தாழ்வுகளுமே தூய்மைச் சிந்தனையை ஏற்படுத்தி, மேன்மேலும் தங்களை வலிமைப்படுத்திக் கொள்கின்றன. தமிழ்ச் சமுதாயத்தைப் பொறுத்தவரை சாதியிலும், சமயத்திலும், வேளாண்மை, மருத்துவம் போன்ற அனைத்து நிலைகளிலும் அதிகார உறவுகளால் மட்டுமே தூய்மை கட்டமைக்கப்படுகிறது.

### சாதிய நிலை:

பழந்தமிழ் நாட்டில் சாதிய நிலைகளை ஆய்வு செய்த லூயி துய்மோன் (1980) சாதிய அடுக்கு என்பது தூய்மையின் அடிப்படையில்தான் பிரிக்கப்பட்டுள்ளது என்று கூறுவார். ஆனால் ஒலிவே (1998) தர்ம சாஸ்திரப் பனுவலில் கையாளப்பட்டுள்ள சுத்தம், அசுத்தம் என்னும் சொல்லாட்சிகளை வைத்துத் தூய்மை என்பது சடங்கியல் அடிப்படையிலும், சட்டம் நீதி அடிப்படையிலும்தான் பாகுபடுத்தப்பட்டுள்ளதே அன்றி, எந்த ஒரு குழுவையோ, வர்ணப் பாகுபாடுகளையோ குறிக்கவில்லை என்று விளக்குவார். சமூக நிலையில் தவறு இழைத்தவர்கள் தங்கள் சாதியிடமிருந்து விலக்கி வைக்கப்பட்டதாகத் தர்ம சாஸ்திரங்கள் கூறுகின்றனவே அன்றித் தூய்மை என்பதைவிடத் தூய்மைப்படுத்துதலையும், அசுத்தம் பற்றிய விழிப்புணர்வையுமே வலியுறுத்துகின்றன என்பார். மேலும், தூய்மையைப் பற்றி விவரிக்கும்போது அது ஒரு கருத்தியல்நிலை (abstract condition) என்றும் அது பின்வரும் மூன்று நிலைகளில் விளக்கப்படுகிறது என்றும் கூறுவார். ஒன்று ஒரு கருத்தைப் பற்றிய அறியாமை அது சுத்தமானது என்ற எண்ணத்தை ஏற்படுத்தும். எடுத்துக்காட்டாக ஓர் இலையில் வைத்த உணவை நாய் நக்கியிருந்து, அது சாப்பிடுபவருக்குத் தெரியாத வரையில் சுத்தமான உணவுதான்

என்பதால், அறியாமை என்பது சுத்தத்தின் முதல் தகுதி என்று தர்மசாஸ்திரங்கள் கூறுவதாகக் கூறுவார். இரண்டாவதாகக் குறிப்பிட்ட சமூகமோ பொருள்களோ அவற்றின் தன்மைகளால் சுத்தமானவை என்று வரையறை செய்யப்பட்டுள்ள நிலை. எடுத்துக்காட்டாகப் பிராமணர்கள் சுத்தமானவர்கள் என்பதும், சாதத்தை விட அரிசி சுத்தம் என்பதும் இந்நிலையின்படி அமைக்கப்பட்டன. மூன்றாவது நிலை அசுத்தமான ஒன்றைச் சுத்தமாக்குவது குறித்தது. எடுத்துக்காட்டாக, ஒரு பிராமணனை அழைத்துச் சுத்தமாகிவிட்டது என்று கூறச் செய்வதால் சுத்தமாகிவிடும் என்பது. கடைசி இரண்டில் கூறப்பட்ட நிலைகள் பிராமணர்களை ஓர் அதிகார நிலைக்குக் கொண்டு சென்றன. தொழில் அடிப்படையிலான வர்ணக் கோட்பாடுகள் பிராமணர்களின் சாதியால் சுத்த அடிப்படையில் அமைந்த சாதியப் பாகுபாடுகளாக மாற்றப்பட்டன. சடங்கியல் நிலையிலும், சட்ட நீதி நிலையிலும் இருந்த அசுத்தம் பற்றிய விழிப்புணர்வு, சமூகப் பண்பாட்டு எல்லைகளை வரையறை செய்து ஏற்றத் தாழ்வுகளை ஏற்படுத்தியுள்ளது என்பதை அறிய முடிகிறது.

இதே கருத்தைச் சங்க இலக்கியங்களை ஆய்வு செய்த மனோன்மணி சண்முகதாசும் (1991) விளக்குவார். உலக இனங்களின் பண்பாட்டில் அறிய முடியாத, தமிழர்களிடையே நிலவி வரும் சாதி, சங்க இலக்கியச் சமூக நடைமுறையில் கூறப்படவில்லை என்பார். சமூக நிலையிலே வேறுபட்ட நடைமுறைகள் மக்கள் வாழ்வியலில் இடம் பெற்றிருந்ததைச் சங்கப் பாடல்கள் வழி ஆராய்ந்து, சங்க காலத்தில் திணையின் அடிப்படையில்தான் பாகுபாடுகள் அமைந்தன எனக் குறிப்பிடுவார். திணை என்ற சொல் தற்போது தமிழ் வழக்கில் உள்ள சாதியின் தொழிற்பாட்டையே கொண்டிருக்கிறது எனக் கருத இடமுண்டாகிறது. ஆனால் திணை என்ற சொல் மக்களிடையே நிலவிய வேறுபட்ட நடைமுறைகளைச் சுட்ட உதவியதே அன்றி நடைமுறையில் உயர்வு தாழ்வு மனப்பாங்கை வெளிப்படுத்தப் பயன்படவில்லை (மேலது:82) என்றும் கூறுவார்.

ஆரம்ப காலகட்டங்களில் சாதிய ஏற்றத் தாழ்வுகள் இல்லாத சூழலில் ஒரு சில சமூகச் செயல்பாடுகளால் பிராமணர்கள் உயர்ந்தவர்கள் என்ற எண்ணம் தோற்றுவிக்கப்பட்டுத் தூய்மை/தீட்டு மனப்பாங்குகளின் வாயிலாக ஏற்றத்தாழ்வுகள் உருவாக்கப்பட்டன.

இத்தகைய சாதியத் தீட்டு மனப்பாங்கு ஆழமானதாகப் பிராமணர், சைவர், குருக்கள் போன்றவர்களிடம் காணப்பட்டதால், ஏனையோரைத் தீண்டாது வாழ்ந்தனர். "தென்னகத் தமிழர்களில் பிராமணர்கள் நிலச் சொந்தக்காரர்களாகவும் இருந்தமையால் பொருளாதார ரீதியில் ஏனைய தொழில் செய்வோரைக் கட்டுப்பாடு செய்யவும் சாதித் தீட்டு என்ற செயற்கையான அடுக்குநிலை கற்பிக்கப்பட்டது. தீட்டுள்ள பெண்ணை அசுத்தமானவள் என்று எண்ணித் தொடாமலிருந்ததைப் போலவே அசுத்தமான தொழில் செய்வோரையும் தொடமுடியாதவர்களாக எண்ணினார்"என்று மனோன்மணி சண்முகதாஸ் (மேலது.50) கூறுவார்.

எனவே சாதிய நிலையில் சமூகப் பொருளாதாரக் காரணங்களால் ஒரு குறிப்பிட்ட சமூகத்தினர் பிறரை அதிகாரம் செய்யும் நிலைக்கு மாற்றப்பட்டதை உணரலாம். இத்தைகய அதிகாரச் சமுதாயம் தங்கள் நிலையைத் தக்க வைத்துக் கொள்ள சமயம், மொழி போன்றவற்றைக் கருவிகளாகப் பயன்படுத்தியது. மண்ணின் மரபுகளும் வழிபாட்டு முறைகளும், மக்கள் பேசுகின்ற மொழியும் தீட்டுகளாக மாற்றப்பட்டதுதான் உச்சகட்டமான நிலை. மரபுசார்ந்த, மக்களை மையப்படுத்திய சமூக அமைப்பின் ஒவ்வொரு செயல்பாடும், அதிகாரக் குவிப்பு, தொழில்நுட்ப வளர்ச்சி என்ற நிலைகளில் மக்களிடமிருந்தும், மரபிலிருந்தும் அன்னியப்பட்டு அவை தீட்டுக்ளாகக் கருதப்பட்டு வரும் நிலையைக் காணலாம். மருத்துவம், வேளாண்மை, மரபுசார் தொழில்கள் இவற்றிலும் தூய்மை எவ்வாறு வலியுறுத்தப்படுகிறது எனக் காண்பது தமிழ்ச் சமுதாயத்தின் ஒட்டு மொத்த தூய்மை வாய்பாட்டைக் காண ஏதுவாகும்.

### மருத்துவம், வேளாண்மை:

சாதி, சமயம் போன்ற சமூக அமைப்புகள் சடங்கியல் நிலையில் மக்களிடம் ஏற்றத்தாழ்வை ஏற்படுத்தின. அதேபோலத் தொழில் நுட்ப வளர்ச்சி, மேலைநாட்டுத்தாக்கம் போன்றவை உணவு, உடை, கல்வி, ஆட்சி, பொருளாதாரம் போன்ற நிலைகளில் மாற்றம் ஏற்படுத்தின. நமது பண்டைய மருத்துவச் சிறப்பு, மருத்துவ மூலிகைகளின் பயன்பாடு போன்றவை மக்களின் வாழ்க்கை முறையை ஒட்டி எளிமையானவையாக இருந்தன. ஆனால் நவீன அலோபதி மருத்துவம், மனிதனின் அடிப்படை அடையாளமாகிய அவனது உடம்பை அவனுக்குப் புரியாததாக்கி, அதன் மீது ஆளுமை செலுத்தக்

கூடிய நபராக மருத்துவரை மாற்றும் நிலை உருவாகி இருப்பதை அ.மார்க்ஸ் (1994) விளக்குவார். மேலும் நவீன மருத்துவம் நோயைப் பொதுமைப்படுத்தி, நோயின் பெயரால் மருந்தைத் தீர்மானிக்கிறது என்றும், ஓமியோபதி நோயாளியை முதன்மைப்படுத்தி, நோய்க் குறிகளின் அடிப்படையில் நோய்க்கான தீர்வைத் தீர்மானிக்கிறது என்றும் கூறுவார். பன்னாட்டு வியாபார அமைப்புகளின் உதவியுடன் மருந்துப் பொருட்களை விநியோகிப்போரிடம் அதிகாரம் குவிக்கப்படுவதால், மக்களின் மரபார்ந்த மருத்துவ முறைகளைத் தீட்டுகளாகக் கருதும் நிலை ஏற்பட்டது.

அதேபோல வேளாண்மை, மரபுசார் தொழில்களிலும் தொழில்புரட்சி என்ற பெயரால் மரபு முறைகளும், சூழலுக்கு ஏற்ற மண்ணுக்கு ஏற்ற வேளாண்மை முறையும் மாறி, உற்பத்திப் பெருக்கம் என்று கூறுகிற கால மாயையால், விளை நிலங்கள் பாழாக்கப்படுவதை நம்மாழ்வார் (1997) குறிப்பிடுவார். பூச்சி மருந்து, உரங்கள் போன்ற விநியோகிப்போரின் பொருளாதார மேம்பாடு அவர்களை ஒருவித அதிகார வர்க்கமாக மாற்றியுள்ளதையும் அவர் சுட்டுவார்.

மொழித்தூய்மை:

ஒரு சமுதாயத்தில் தூய்மைச் சிந்தனை தோன்றுகின்றதென்றால் அச்சமூகத்தில் அதிகாரப் படிநிலைகள் உள்ளன என அறிந்து கொள்ளலாம். ஒவ்வொரு சமுதாயமும், ஒவ்வொரு மொழியும் தத்தம் இயங்கு தளத்தில் செயல்படும்பொழுது, அங்கே ஆதிக்கச் சூழல் ஏற்படுவதில்லை. வேற்றுச் சமூகம், வேற்று மொழி, அவற்றின் ஆதிக்கம் என்ற நிலையில், இவ்வாதிக்கத்தின் எதிர் விளைவாகத் தூய்மைச் சிந்தனைகள் தோன்றும். இத்தகைய சூழலில் ஆதிக்கச் சூழலில் இருந்து மொழியையும், இனத்தையும் மீட்க, அந்தச் சமூகத்தின் பழமைச் சிறப்புக்களையும், பண்பாட்டுத் தொன்மைகளையும் கொண்ட சொல்லாடல்களை உருவாக்கி மக்களை ஒன்றிணைக்கச் செய்வது மீட்பு வழியாகும். இத்தகைய மீட்பு வழியில் மொழி ஒரு முக்கியமான குறியீடாகப் பயன்படும், ஆதிக்கச் சூழலின் தன்மை அதிகமாக இருக்கும் பொழுது, பழம் பெருமைகள் அதிகம் பேசப்படும்.

சீர்திருத்தவழியில் ஆதிக்கச் சூழலை எதிர்கொள்ளும் சமூகம், தங்கள் மொழியிலும் சமூகத்திலும், சில மாற்றங்களை ஏற்றுத் தங்களது

சமூகத்தையும், மொழியையும் மாற்றியமைத்துக் கொள்ளும். சீர்திருத்த வழியில் பெரும்பாலும் வேற்றுச் சமூக மாதிரிகளே எடுத்துக் கொள்ளப்படுகின்றன. இத்தகைய மாற்றங்களுக்குச் சமூகத்தில் தோன்றுகின்ற பொருளாதார மாற்றங்கள் அடிப்படையாகும். இவ்விரு வழிகளின் அடிப்படையில் ஆதிக்கச் சக்திகளைப் பாதிக்கப்பட்ட சமூகம் எதிர்கொள்ளும்.

மொழி தொடர்பான ஆதிக்கச் சூழலில் மொழியின் தனித்தன்மையை மீட்பதும், மொழிவழியாக இனத்தூய்மையைக் காப்பதும் முன்னிலைப்படுத்தப்படும். வேறு சமுதாய இயக்கங்களுக்கும் மொழி இயக்கத்திற்கும் ஒரு சில வேறுபாடுகள் உள்ளன. சமுதாயத் தூய்மை தொடர்பான இயக்கங்கள் மக்களிடமிருந்து உருவாகலாம். ஆனால், மொழி தொடர்பான தூய்மைச் சிந்தனைகள், ஒரு சில மொழி பற்றிய சிந்தனை கொண்டவர்களிடமிருந்து தோற்றம் பெறும். இவர்களின் கருத்துக்கள் மக்களிடையே பரவி இயக்கமாக மாறும்.

மொழித்தூய்மை என்பது ஒரு கருத்தியலாக மட்டுமின்றி ஒரு செயல்பாடாகவே கருதப்படுகிறது. எனவே, மொழித் தூய்மையாக்கத்தை மொழித் திட்டமிடுதலின் ஒரு பகுதியாகக் கொள்ளலாம். மொழி வளர்ச்சிக்காகச் செய்யப்படும் செயல்பாடாக இருந்தாலும், இச்செயல்பாட்டில் மொழியின் பாதுகாப்பும், மொழியின் மீட்சியும் முக்கியமானதாகிறது. தமிழ் மொழியைப் பொறுத்தவரை, தமிழ்த் தூய்மையாக்கம் என்பது தனித்தமிழ் என்ற நிலைப்பாட்டில் முன்னிறுத்தப்பட்டது.

பிறமொழி ஆதிக்கச் சூழலிலும் தூய்மை எண்ணம் எல்லா மொழிகளிலும் ஒரே மாதிரியாகப் போற்றப்படுவதில்லை. ஆட்சி, அதிகாரம் போன்றவையே இங்கும் தீட்டுக்களாகக் கருதப்படும் பிறமொழிக் கூறுகளுக்கும் தூய்மைத் தகுதியை அளிக்கின்றன. இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டு ஆங்கில மொழியாகும். ஆங்கில மொழியில் ஐம்பது விழுக்காடு இலத்தீன், கிரேக்க மொழிச் சொற்களும், பிற மொழிச் சொற்களும் கலந்துள்ளன. ஆனால் பலமொழிகளின் சொற்களைக் கடன் வாங்கி மொழி வளத்தைப் பெருக்கிக் கொண்ட ஆங்கிலத்தில் தூய்மைச் சிந்தனைகள் வேரூன்றவில்லை. கிரேக்க இலத்தீன் மொழிகள் ஒரு காலகட்டத்தில் இறையியல் மொழியாக, வழிபாட்டு மொழியாக விளங்கின. ஆங்கில மொழி இத்தகைய

மொழிகளின் சொற்களைப் பெற்றிருந்தும் அம்மொழி தனித்தன்மையை இழக்காமல், அத்தகைய கலப்பையே சிறப்பாக்கிக் கொண்டுள்ளது. ஆனால் இந்தியாவில் வழிபாட்டு மொழியாக இருந்த வடமொழியின் கலப்பு பிறமொழிகளின் தனித்தன்மைக்கு எதிராக அமைந்தது. இதற்குக் காரணம் ஆங்கில மொழியின் அரசியல், பொருளாதாரச் செல்வாக்கின் வழியாக அமைந்த அதிகாரம்தான். இந்தியச் சூழலில், சமய, தத்துவ அடிப்படையிலான அதிகாரங்கள் வடமொழிக்கும், அதைப் பயன்படுத்தியவர்களுக்கும் இருந்தமையால், பிற மொழிகளின் மேல் ஆதிக்கம் செலுத்த ஏதுவாகியது. எனவே அதிகாரக் குவிப்பு என்பது மொழி நிலையிலும், சமூக நிலையிலும் தீட்டுக்களையும் தூய்மையாக மாற்றுதலையும் பண்பாகக் கொண்டது என அறியலாம்.

தூய்மையாக்கக் கோட்பாடு:

தூய்மையாக்கத்தைக் கோட்பாட்டு நிலையில் ஆய்வு செய்த நியூஸ்டுபினி (1989) அதை மூன்று வகையாகப் பிரிப்பார். அவை.

1. தூய்மையாக்கச் செயல்பாடு
2. தூய்மையாக்கச் சொல்லாடல்
3. தூய்மையாக்கக் கருத்தியல்கள்

தூய்மையாக்கச் செயல்பாடு என்ற நிலை மொழியில் கலந்த பிறமொழிக் கூறுகளைக் கண்டறிதலும் அவற்றை நீக்குதல் பற்றிய செயல்பாடுகளையும் குறிக்கும். தூய்மையாக்கச் செயல்பாடுகள் மொழியில் கலந்துள்ள அனைத்துப் பிறமொழிக் கூறுகளையும் நீக்குவதாக அமைய வேண்டும். ஆனால் இச்செயல்பாட்டில் ஒருசில குறிப்பிட்ட மொழிக் கூறுகள் மட்டும் மொழியைக் கெடுப்பதாகக் கருதப்படலாம். வேறுசில மொழிக் கூறுகள் மொழிக்கு உதவுபவையாகக் கருதப்படலாம். அதேபோல ஒரு குறிப்பிட்ட சமூகத்தினரது பேச்சுக்களை உயர்வாகவோ அல்லது பேச்சுமொழியே தீட்டாகவோ கருதப்படலாம். மொழியில் கலந்த எல்லா மொழிக் கூறுகளையும் நீக்காமல் ஒரு சில மொழிகளைக் குறிவைத்துத் தாக்கும் நிலையில், இச்செயல்பாடு ஒருவகையான கருத்தியல் அடிப்படையில் இயங்குகிறது என்பதைச் சுட்டிக்காட்ட இயலும். மொழியின் பேச்சு மொழிக் கூறுகளை இழிவாகக் கருதும் போக்குத் தூய்மையாக்கத்தின் தீவிரத்தை உணர்த்துவதாகக் கொள்ளலாம்.

தூய்மையாக்கச் சொல்லாடல்கள் என்ற நிலை, மொழியில் கலந்துள்ள பிற மொழிகள் பற்றிய சொல்லாடல்களையும், பிறமொழிச் சொற்கள் ஏன் நீக்கப்படவேண்டும் என்ற கருத்துக்களையும் எடுத்துரைக்கும். இத்தகைய சொல்லாடல்கள் பிறமொழியின் தன்மையையும் அம்மொழி பேசுவோரின் பண்பாடு ஆகியவற்றையும் இழித்துக் காட்டும். கலப்புக்கு உட்பட்ட மொழியின் தாழ்ந்த நிலை பற்றியும், மொழி அழிவைப் பற்றிய அக்கறையில்லாத மக்களைப் பற்றியும் நேரடியாகவும், மறைமுகமாகவும் எடுத்துரைக்கலாம்.

தூய்மையாக்கக் கருத்தியல் என்பது தூய்மையாக்கச் செயல்பாட்டிற்கும், சொல்லாடலுக்கும் இடையே உள்ள தொடர்பை விளக்கிக் காட்டும். சமூகத்தின் பின்புலத்தோடு, இவ்வுறவுகள் விளக்கிக் காட்டப்படும் பொழுது, அங்கே தூய்மையாக்கக் கருத்தியல்கள் வெளிப்படலாம். சமூகத்தில் உள்ள ஒரு குறிப்பிட்ட ஆதிக்கச் சாதியினரை எதிர்த்து அதிகாரக் கட்டமைப்பை மாற்றுவதற்காக அவர்களின் மொழியே, கலப்பை ஏற்படுத்துகிறது என்று கூறலாம். இத்தகைய சூழலில் ஒரு குறிப்பிட்ட இனத்தவரின் மொழிக் கலப்பை மட்டும் சுட்டிக்காட்டுவது அதிகார அமைப்பை மாற்றுவதற்கான மறைமுகக் கருத்தியல் எனக் கருதலாம்.

தமிழ்த் தூய்மை:

தமிழ்ச் சமுதாயத்தின் தூய்மை, தீட்டுச் சிந்தனைகள் பிற பண்பாட்டுத் தாக்கத்தால் ஏற்பட்டவை எனலாம். தமிழ்ச் சமுதாய விழுமியங்கள் இறையியலை அடிப்படையாகக் கொண்டிருந்த காலத்தில், வடமொழி வழியாகப் புதிய சிந்தனைகள் புகுந்தன. வடமொழி சமயம், தத்துவம், கல்வி என்ற அமைப்புகளின் ஏகபோக மொழியாக இச்சமுதாயத்தில் புகுந்தது. அந்தக் காலகட்டச் சமுதாயத்தின் புதிய சிந்தனைகளும் செயல்பாடுகளும் வடமொழி வழியாகவே நடைபெற்றன. ஒரு குறிப்பிட்ட இனத்தார் அறிவார்ந்த கூட்டமாகக் கருதப்படவும் சமூகத்தில் உயர்ந்த பதவியில் அமர்ந்து அதிகார வர்க்கமாக விளங்கவும் அவர்களுக்கு வடமொழி உதவியது. அவ்வினத்தாரின் செல்வாக்கும் வடமொழியின் செல்வாக்கும் தமிழ்ச் சமுதாயத்தின் அடித்தட்டு மக்கள்வரை பரவியதால், தமிழில் ஏராளமான வடமொழிச் சொற்கள் புகுந்தன. வடமொழி ஆதிக்கத்தைக் களைந்து தமிழின் தனித்தன்மையை நிலைநாட்டத்தான் தனித்தமிழ் இயக்கம்

தோற்றுவிக்கப்பட்டது. வடமொழியின் ஆதிக்கத்தையும் கலப்பையும் களைந்து தமிழின் தனித்தன்மையை நிலை நிறுத்தும் முயற்சி தமிழ்ச் சமுதாயத்தில் தொல்காப்பியர் காலத்திலிருந்தே போற்றப்பட்டுள்ளது. இருப்பினும், அதன்பின்னர் ஏற்பட்ட மொழிக்கலப்பு தமிழின் தனித்தன்மையை பாதிக்கும் அளவுக்கு மிகுதியாயிற்று.

தனித்தமிழ் இயக்கத் தொடக்கக் காலங்களில் மறைமலை அடிகள், பாவாணர் போன்றோர், அளவுகடந்த வடமொழிக் கலப்பு தமிழின் தனித்தன்மையையும், இனிமையையும், அதன் திறனையும் ஒழித்துவிடும் என்று சுட்டிக்காட்டினர். அந்தக் காலகட்டத்தில் தமிழின் மரபை நிலைநாட்டவும் தனித்தன்மையைப் பாதுகாக்கவும் பிறமொழி ஆதிக்கத்தை எதிர்க்கவும் மொழியின் இனிமை வளம் போற்றப்படுவதற்கும் தூய்மை வலியுறுத்தப்பட்டது.

மனப்பாங்குகள்:

இந்தியாவில் வடமொழி ஆதிக்கம் மிகுதியாகக் காணப்பட்டபோது தூய்மைச் செயல்பாடுகள் பலமொழிகளில் மேற்கொள்ளப்பட்டன. தமிழில் தோற்றுவிக்கப் பட்ட தனித்தமிழ் இயக்கம்போல மலையாள மொழியிலும், தெலுங்கு மொழியிலும் மொழித் தூய்மை இயக்கங்கள் ஏற்படுத்தப்பட்டன. ஆனால் அவை தமிழ்ச் சமுதாயத்தில் தமிழ்த்தூய்மை இயக்கம் சாதித்த அளவு தாக்கத்தை ஏற்படுத்தவில்லை. வடமொழியின் ஆதிக்கமும் வடமொழி ஆதிக்கத்தினரும் எல்லாச் சமூகத்திலும் இருந்தபோதும் தமிழ்ச் சமுதாயத்தில் இவற்றை மீறித் தூய்மைக் குரல் ஒலிப்பதற்கு இரண்டு முக்கிய காரணங்களைக் கூறலாம். ஒன்று: தமிழ் மொழியின்பால் மக்களுக்கு இருக்கும் ஈடுபாடு. இரண்டு: தமிழ்மொழியின் இலக்கண இலக்கியச் செழுமை.

வேறு எந்த மொழிகளுக்கும் இல்லாத இலக்கியச் செழுமை தமிழ்மொழிக்கு இருப்பதால், மொழியின்பால் மக்களுக்கு ஒரு பெருமிதம் இருக்கிறது. வடமொழிக்கு இணையான தமிழ்ச் சொற்கள் ஏராளமாக உருவாக்கப்பட்டு அதன் வளமை உணர்த்தப்பட்டது. தமிழ் மொழியின் தனித்தன்மையும் சங்க இலக்கியங்கள் காட்டும் தமிழ்ச் சமுதாயத்தின் உணர்வும் மக்களை மொழியோடு உணர்வுப் பூர்வமாக ஒன்றச் செய்தன.

தமிழ்த் தூய்மையின் வெற்றிக்கு மக்களின் மனப்பாங்குகள்

முக்கியக் காரணமாகும். தெலுங்கு, மலையாள மொழி பேசுவார் மொழியை ஒரு கருத்துப் பரிமாற்றக் கருவியாக மட்டுமே பாவித்தனர். ஆனால் தமிழில், 'உடல் மண்ணுக்கு, உயிர் தமிழுக்கு'ப் போன்ற சொல்லாடல்கள் மக்கள் மொழியின் பால் கொண்ட உணர்வை வெளிப்படுத்தும். இத்தகைய உணர்வுப் பூர்வமான இணைப்பும், இலக்கியச் செழுமையும்தான் மொழி நிலையில் தமிழின் தனித்தன்மையைக் காத்தன எனலாம். இத்தகைய தனித்தன்மைகளைத் தூய்மையாக்கச் செயல்பாடுகளின் வழியாக மேலும் தெளிவுபடுத்தலாம்.

செயல்பாடுகள்:

தூய்மையாக்கச் செயல்பாடுகள் என்பது மொழியில் கலந்துள்ள பிறமொழிக் கூறுகள் நீக்கப்படும் முறை பற்றிக் கூறுவதாகும். தூய்மையாக்கம் என்பதைப் பிறமொழிக் கூறுகளைக் களைவது என்ற நிலையில் மட்டுமல்லாது, அவற்றைத் தேர்வு செய்து பயன்படுத்தும் நிலையில் வழியாகவும் காணலாம் என வெச்ஸலர் (1974) கூறுவார். ஆதிக்க மொழிகள் பல இருந்தால் அவற்றில் ஒரு மொழிக் கூறுகளைத் தீட்டாகக் கருதிப் பிறமொழிக் கூறுகளைப் பயன்படுத்துவதும் ஒரு வகையாகும். எடுத்துக்காட்டாகத் தனித்தமிழ் இயக்கக் காலகட்டத்தில் தூய்மைவாதிகள் ஆங்கில மொழிச் சொற்களைக் காட்டிலும் வடமொழிச் சொற்களையே நீக்க ஆர்வம் காட்டினர் என்பதை ஆகாசவாணி, ஆல் இண்டியா ரேடியோ என்ற சொற்களை வைத்துச் சண்முகம் (1975) அவர்கள் விளக்குவார். இதற்கு மொழியியல் காரணங்களைவிடச் சமூகவியல் காரணமும் தூய்மையாக்கக் கருத்தியலும்தான் அடிப்படையாகின்றன. பிராமணர் சிறுபான்மையாக இருந்தபோதிலும் சாதியப் படிநிலையிலும் அரசின் உயர் பதவிகளிலும் இருந்து, தமிழ்ச் சமூகத்தின்மேல் ஓர் ஆதிக்கச் சக்தியாக விளங்கினர். ஒரு காலகட்டத்தில் வடமொழி வழியாக அறிவு ஜீவிகளாக விளங்கிய பிராமணர்கள், அம்மொழியையும் ஆதிக்க மொழியாக்கக் காரணமானார்கள். எனவே வடமொழிச் சொற்களை நீக்குவது என்பதுதான் பிராமணர் ஆதிக்கச் சக்திக்கு எதிர்ப்பானது என்ற நிலையில் சாதியப் படிநிலையின் அடுத்த நிலையில் இருந்த பிராமணர் அல்லாதோர் பாடுபட்டனர். இவர்களின் அதிகாரப் போட்டியும் பகிர்வும்தான் தனித்தமிழ் இயக்கத்தின் சமூகப் பின்புலம் எனக் கைலாசபதி (1978), அண்ணாமலை (1979) ஆகியோர் விளக்குவார்கள்.

எனவேதான் ஒரு கால கட்டத்தில் ஆங்கில மொழிச் சொற்களைக் காட்டிலும் வடமொழிச் சொற்களே தீட்டுக்களாகக் கருதப்பட்டன.

**தூய்மையாக்கச் சொல்லாடல்:**

இந்தக் காலக்கட்டத்தின் தூய்மை நிலையைச் சந்திரன் தக்கார் (1986) உருவாக்கிய "தற்காலத் தமிழில் ஆங்கிலக் கடன் சொற்கள்" என்ற அகராதி வழியாக அறியலாம். இவ்வகராதியில் தமிழர்கள் அன்றாடம் நடைமுறையில் பயன்படுத்தும் 4000 சொற்களை வரிசைப்படுத்திக் கொடுத்துள்ளார். இதற்கான தரவுகளை 6 மாதகால ஆனந்த விகடன், கல்கி, கலைமகள், குமுதம், ராணி, தினமணிக் கதிர் ஆகிய இதழ்களிலும், ஒருமாத கால மாலை முரசு, தினமணி, தினத்தந்தி ஆகிய நாளேடுகளிலும் தற்கால நாவல், சிறுகதைகளின் 2000 பக்கங்களிலும் இருந்து திரட்டிப் பயன்படுத்தியுள்ளதாகக் கூறுகிறார். இந்த அகராதி வெளிநாட்டு மாணவர்கள் தமிழ் கற்கும்போது ஆங்கிலச் சொற்களை அறிந்து கொள்வதற்கே உருவாக்கப்பட்டாலும் இவ்வகராதி இன்றைய தமிழின் நிலையையே காட்டுகிறது. இதில் உள்ள சொற்கள் படித்த தமிழர்கள் தங்களின் சமூக உயர்வைக் காட்டுவதற்காகப் பயன்படுத்திய சொற்கள். இத்தகைய சொற்களின் பயன்பாடும், இன்றைய சிறார் ஆங்கிலப் பள்ளிகளின் புற்றீசல் வளர்ச்சியையும் மக்களின் மனப்பாங்கில் ஏற்பட்டுள்ள மாற்றத்தையும் காட்டுகின்றன. வடமொழியின் செல்வாக்கு தமிழுக்கு வந்ததுபோல, ஆங்கிலவழிப் படிப்பாளர்களால் ஆங்கில மொழிச் சொற்கள் புகுத்தப்பட்டுள்ளன. அதற்கேற்ப இன்றைய சமூக விழுமியங்களும் ஆங்கிலம் கற்பதே சிறப்பு, கலந்து பேசுவதே உயர்வு என்று கட்டமைக்கப்பட்டுள்ளன.

இன்றைய தேவைக்கேற்பத் தனித்தமிழ் இயக்கச் செயல்பாடுகளும் ஆங்கிலத்தை எதிர்த்தே நடத்தப்படுகின்றது என்பதை இன்றைய சொல்லாடல் தெளிவாக்கும். புதுவைத் தமிழர் புரட்சிப் பண்பாட்டு இயக்கம் வெளியிட்ட ஓர் அறிக்கையில் கூறப்பட்ட செய்தி வருமாறு:

*ஆங்கிலத்தைக் கலந்து பேசுபவன் முட்டாள்*
*ஆங்கிலம் கலந்து எழுதுபவன் அயோக்கியன்*
*ஆங்கில மோகம் பிடித்தவன் காட்டுமிராண்டி*

அதேபோல, தமிழில் கையெழுத்திடுதல், தமிழிலேயே கோப்புகள் எழுத வலியுறுத்தல், பெயர்ப் பலகைகளைத் தமிழில் மாற்றுதல், குழந்தைகளுக்குத் தமிழ்ப் பெயர் வைக்க அறிவுறுத்துதல் போன்றவற்றைப் புதுவையின் தமிழ் வளர்ச்சி நடவடிக்கைக் குழு வலியுறுத்துவது இன்றைய காலகட்டத்தின் ஆங்கில மொழியின் ஆதிக்கத்தைக் காட்டும்.

தமிழன் தமிழனாக இருக்க வேண்டும் என்பதைச் சொல்லும் தூயதமிழ் இதழ், தமிழில் கையெழுத்திடுதலையும் இன அடையாளத்தையும் தொடர்புபடுத்திப் பின்வருமாறு ஒரு செய்தி வெளியிட்டுள்ளது.

*தாமாகவே தமிழில் கையெழுத்திடுபவன் சிறந்த தமிழன்*

*பிறர் அறிவுரையால் தமிழ் ஒப்பமிடுபவனும் சிறந்த தமிழன்*

*அரசு ஆணையின் பேரிலும் தமிழிலும் ஒப்பமிடாதவன் தமிழனா?*

மேற்கூறிய சொல்லாடல்களும் செயல்பாடுகளும் இன்றைய தமிழ்ச் சமுதாயத்தின் போக்கை தெளிவாகக் காட்டுகின்றன.

தூய்மையாக்க வேறுபாடுகள்:

தமிழ்த் தூய்மையாக்க நிலை இரண்டு வகையான நடைமுறைகளைக் கொண்டுள்ளதைச் சமூக நிலையில் தூய்மையாக்கமும் மொழிநிலையில் தூய்மையாக்கமும் காட்டும். சமூக நிலையில் பொருளாதாரச் சுரண்டல் வழி அதிகாரக் குவிப்பை மாற்றும் முயற்சிகளாகச் சாதி, சமயம், வேளாண்மை, மருத்துவம், மரபுத் தொழில்கள் நடைபெறுகின்றன. மக்கள் இச்சுரண்டலைப் பற்றிய விழிப்புணர்வு பெற வேண்டும் என்றும் பொருளாதார மேம்பாடு மக்களைச் சென்றடைய வேண்டும் என்றும் செயல்பாடுகள் திட்டமிடப்படுகின்றன. மக்களிடமிருந்து பிரிக்கப்பட்ட மருத்துவம், வேளாண்மை போன்றவை மண்ணின் மக்களிடமே வந்தடைய வழிவகுக்கப்படுகின்றன. அதிகாரப் பரவலாக்கம், ஆதிக்கச் சக்திகளின் மோசடியின்பால் விழிப்புணர்வு என்ற நிலையே சமூகத் தூய்மையாக்கத்தின் நோக்கமாகும். பண்டைய மரபுகளின் சிறப்பு

இங்குப் போற்றப்பட்டாலும் அவற்றின் பயன் பாமர மக்களையும், ஒடுக்கப்பட்டோரையும் சென்று சேரும்படித் திட்டமிடப்படுகிறது.

மொழிநிலையில் தூய்மையாக்கம் என்பதன் பின்னணி ஒரு வகையான அதிகாரப் பகிர்வாக இருந்தாலும், அங்கு மக்கள் பேசுகின்ற மொழிக்கு மேம்பாடு அமையாத நிலை காணப்படுகிறது. வடமொழி, ஆங்கில ஆதிக்கத்தின் தடயங்களைத் தமிழிலிருந்து நீக்கித் தமிழில் வளத்தைச் சேர்க்கும் தூய்மையாக்கச் செயல்பாடுகளைச் சற்று ஆராய்ந்தால் அவை புரியும். மொழி, பேச்சுமொழி, எழுத்துமொழி எனப் பிரிக்கப்படுவதன் வழியாக, கல்வி வழியாக எழுத்துமொழி கற்றவர்கள் அதிகார வர்க்கமாகின்றனர். இந்த எழுத்துமொழி கற்றவர்களின் மனப்பாங்குகள், மொழிப் பயன்பாட்டில் பிறமொழிச் சொற்களைப் புகுத்துதலுக்கு வழிவகுக்கின்றன. தமிழ்த் தூய்மையாக்கத்தில் எழுத்து வழக்கில் பேச்சு மொழிக் கூறுகள் கலந்து எழுதுவது தீட்டுக்களாகக் கருதப்படுகின்றன. எழுத்துமொழி பயன்படுத்துபவர்கள் பெரும்பாலும் அன்றாடம் பேச்சு மொழியைப் பயன்படுத்தினாலும் எழுத்து மொழியைப் பேசுவது என்ற நிலை கூடக் காணப்படுகின்றது. இது தூய்மையாக்கம் என்ற கருத்தின் அடிப்படையில் பாமரனிடமிருந்து பிரிந்து நிற்கும் செயல்பாடாகும்.

மொழியில் தூய்மையாக்கச் செயல்பாட்டிற்கு நம்முடைய பண்டைய இலக்கணங்களும், இலக்கியங்களுமே துணைக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன. மக்களுடைய வழக்குகள் ஒதுக்கப்பட்டு, செந்தமிழ் வழக்குகள் உருவாக்கப்படுதலாக நடைபெறும். மொழிநிலைத் தூய்மையாக்கம், மக்களை நோக்கிய ஏனைய தூய்மையாக்கத்திலிருந்து வேறுபட்டு நிற்கிறது. இருப்பினும் பிறமொழிச் சொற்கள் வழியாகப் பாமர மக்களின் பண்பாடு சிதைவடையும்போது பண்டைய மரபுகள் இலக்கியச் சொற்கள் வழி நம் பண்பாட்டுச் சீரழிவைத் தடுத்து நிறுத்தும் முயற்சியாக மொழித் தூய்மையாக்கத்தைக் கொள்ளலாம். மொழியிலும் ஒருவகையான மரபுகள் போற்றப்பட்டாலும் மக்களின் கருத்துப் பரிமாற்றம், பயன்பாடு என்ற நிலைகளைக் கருத்தில் கொண்டு தூய்மையாக்கங்கள் நடைபெறுவது மொழி வளர்ச்சிக்குப் பெரிதும் உதவும்.

**தூய்மைச் சிந்தனையும் இன்றைய நிலையும்:**

தமிழ்ச் சமுதாய வரலாற்றின் வழியாகப் பிற மொழிகள் தமிழ்ப் பண்பாட்டிலும் தமிழிலும் தாக்கத்தை ஏற்படுத்தியதைக் கண்டோம். முன் நவீனத்துவக் காலகட்டத்தில் பிராமணப் பண்பாடு, வடமொழி வழியாக மொழியிலும், பண்பாட்டிலும் தாக்கத்தை ஏற்படுத்தியது. அதேபோல நவீனத்துவக் காலகட்டத்தில், மேலைநாட்டுப் பண்பாடு, ஆங்கில மொழி வழியாக மொழியில், பண்பாட்டில் மாற்றத்தைக் கொண்டுவந்தது. ஆனால் இன்றைய பின்நவீனத்துவக் காலத்தில் நம்முடைய பண்பாடு நம்மொழி வழியாகவே சிதைக்கப்படுவதுதான், நாம் எதிர்நோக்கும் பிரச்சனை. இன்றைய சமுதாய விழுமியங்கள் உலகமயமாக்கல், தாராளமயமாக்கல் என்ற நிலையில் கட்டமைக்கப்படுகின்றன. உற்பத்திக் கலாச்சாரம் மாறி நுகர்வோர் கலாச்சாரம் முன்னிறுத்தப்படுகிறது. எனவே, சந்தைப் பொருளாதார வளர்ச்சி, பெரும் முதலாளிகளுக்கு உறுதுணையாக நிற்கிறது. சமுதாய நிலையில் கூட ஒட்டுமொத்தம் என்ற நிலைமாறித் தன்முனைப்பு, பொருளாதார மேம்பாடு என்ற நிலைநோக்கிச் செயல்பாடுகள் கட்டமைக்கப்படுகின்றன. சாதிச் சங்கங்களின் உருவாக்கம், ஒவ்வோர் இனமும் தங்களின் தனித்த அடையாளங்களை முன்னிறுத்தல் போன்றவை ஒருவகையான பொருளாதார மேம்பாட்டை எதிர் நோக்கியே வைக்கப்படுகின்றன. மொழி நிலையிலும் அந்த வட்டார வழக்குகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு எழுதப்படும் இலக்கிய வகைகளின் வளர்ச்சியும் இந்தக் காலகட்டத்தை அடிப்படையாகக் கொண்டதே எனலாம். இந்த நுகர்வோர் கலாச்சாரச் சூழலில் வாங்கும் திறனுள்ளோர் தூய்மையானவர்களாகவும், வக்கற்றவர்கள் தீட்டுக்குரியோராகவும் கருதப்படும் நிலை தோன்றியுள்ளது. எனவே தனியார் முதலீட்டாளர்கள் தங்களுடைய சந்தைப் பொருள்களை எப்படியேனும் மக்களிடம் சேர்க்கப் பலவகை உத்திகளைக் கையாளுகின்றனர். இன்றைய நவீனத் தகவல் தொடர்புச் சாதன வளர்ச்சியில், பல்வேறு வகையான உத்திகளைக் கையாண்டு, நம்மை நுகர்வோர்க் கலாச்சாரத்திற்குக் கொண்டு செல்கின்றனர். இன்றைய ஆயத்தத் தயாரிப்புகள் அனைத்தும் இதனுடைய தாக்கம்தான். இத்தகைய 'ஆயத்தத் தயாரிப்புகள்' நம் பண்பாட்டு வாழ்க்கை முறைக்குச் சிறிதும் உதவாத உலகச் சந்தைப் பொருட்கள்

விளம்பரங்கள் வழி நம்மை அடைகின்றன.

தொலைக்காட்சியில் வேற்றுப் பண்பாடு, வேற்று முகங்கள் தங்களின் தொடர்பற்ற வாயசைப்பு வழியாக நம்மொழி வழியாகச் சந்தைப் பொருள்களாக நமக்கு அறிமுகப்படுத்தப்படுகின்றன. தொலைக்காட்சி வழியாக நமக்குத் தரப்படும் அனுபவங்கள் முற்றிலும் வேறாக அமையும்போது நம்மை அவற்றோடு இணையச் செய்வது மொழி தான். பிற பண்பாடு, உணவு, உடை, பழக்கவழக்கங்கள் யாவும் மொழி மாற்றம் செய்யப்பட்டுத் தமிழுக்கு வருகின்றன. நவீனத் தொழில் நுட்ப உத்திகள் இத்தகைய பண்பாட்டை ஏற்றுக் கொள்ளும் சகிப்புத் தன்மையை நமக்கு வழங்கியுள்ளன. சமய நம்பிக்கைகள் சாதியப் படிநிலைகள் வழி மேம்பட்டிருந்த வடமொழிப் பண்பாடு, பகுத்தறிவு, சமத்துவம் பொருளாதார முன்னேற்றம் என்ற ஆங்கிலப் பண்பாடாக மாறித் தற்போது பொருளாதார மேம்பாடு ஒன்றையே நோக்கமாகக் கொண்ட உலகப் பண்பாட்டிற்கு வந்துள்ளது.

உலகச் சந்தைப் பொருட்களின் வியாபாரம், மொழி வழியாகவே நடைபெற வேண்டிய சூழலில் வியாபாரிகள் தங்களின் பொருட்களை விளம்பரப்படுத்த மொழி அவசியமாகிறது. தமிழ்மொழி வழியாகவே நம் பண்பாடு பாதிக்கப்படும் நிலை உருவாகியுள்ளது. இந்தக் காலகட்டத்தில் மொழித் தூய்மை என்பதைவிடப் பண்பாட்டுத் தூய்மை முன்னிறுத்தப்பட வேண்டியது அவசியமாகிறது. பண்பாடு சிதையும்போது பண்பாட்டின் ஒரு கூறான மொழியும் சிதைந்து அழியும். மொழி மரபுகளும், பண்பாட்டு மரபுகளும் காக்கப்பட வேண்டுமெனின், தனித்தனி அமைப்புகளின் செயல்பாடு பயன்தராது. ஒரு சமுதாய இயக்கமே, அல்லது ஒரு சமுதாயத் தூய்மையாக்கமே தமிழையும் பண்பாட்டையும் காக்கும்.

# 1. அறிவியல் நோக்கு - மொழித்தூய்மை

முனைவர் மருத்துவர் : சு.நரேந்திரன் எம்.எஸ்.பிஎச்.டி
சிறப்பு நிலைப்பேராசிரியர், அறுவை மருத்துவம்
தமிழ்நாடு டாக்டர் எம்.ஜி.ஆர் மருத்துவப் பல்கலைக் கழகம்.

**மொழி :**

மனிதன் சிந்திக்கவும், சிந்தித்ததை வெளிப்படுத்தவும், பிறர் வெளிப்படுத்துவதைப் புரிந்து கொள்ளவும் உதவுவது மொழி - சுருங்கக் கூறின் இது கருத்துப் பரிமாற்றத்திற்கு உதவுவது.

மனித சமூகம் தனக்குரிய மொழியை இலக்கியம், இலக்கணம், தத்துவம், அறிவியல், அரசியல், வரலாறு எனப் பல துறைகளில் பயன்படுத்தும் போது அது நன்கு வளரும். அந்த வளர்ச்சியில் சில மாற்றங்கள், அரசியல் சமூக மாற்றத்திற்கு ஏற்ப ஏற்படுவதுண்டு.

ஒரு பகுதியில் அல்லது ஒரு சமூகத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட மொழிகள் வழக்கிலிருக்கும் போது அவற்றிற்கு இடையே கொள்வினை, கொடுப்பினை, கொடுக்கல், வாங்கல் நிகழும். இது பெரும்பாலும் சொற்களைப் பொறுத்தே அமைந்து, இலக்கண மாற்றங்கள் குறைவான அளவில் நடைபெறும். இம் மாற்றங்கள் அறிவியல் தமிழ் உட்பட எல்லாவிதத் துறைகளிலும் நிகழும்.

**மாற்றங்கள் தவிர்க்க முடியாதது :**

இதனை மனத்திற் கொண்டு மாற்றங்களை ஆராய்வோம். தமிழில் முதல் மாற்றத்தை, சொல் கலப்பை கி.மு 4 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தொல்காப்பியர் மூலம் வட சொல்லைத் தமிழில் பயன்படுத்தும் முறையை அறிகிறோம். பின்னர் நன்னூலார் இதைத் தற்சமம், தற்பவம் மூலம் விரிவாக்கினார்.

இதனைத் தொடர்ந்து பிற மொழிச் சொற்கள் புகுந்ததற்குத் தமிழ் நாட்டில் வேற்று மொழிகள் ஆட்சி அடிக்கடி மாறியதே காரணமாகும். கி.பி.3-ஆம் நூற்றாண்டு முதல் 9-ஆம் நூற்றாண்டு

வரையில் பல்லவர்கள் பிராகிருத மொழியையும் வட மொழியையும் ஆதரித்தனர். களப்பிரர் காலம் ஓர் இருண்ட காலம். பிற்காலச் சோழர்கள் பல்லவர்களை வென்று தமிழ் நாட்டை கி.பி.12ஆம் நூற்றாண்டு முடிய ஆட்சி புரிந்தார்கள். இக்காலத்தில் தமிழ் மொழியில் சமயத் தொடர்பினாலும் பல நாடுகளிலும் கண்ட வெற்றியாலும் மொழிக்கலப்பு ஏற்பட்டது. சைனர்களும் வைணவ உரையாசிரியர்களும் வட சொற்களையும் தமிழ்ச் சொற்களையும் கலந்து நூல்களை மணிப்பிரவாள நடையில் இயற்றினர். அதன் பின்னர் இஸ்லாமிய ஆட்சி 45 ஆண்டுகள் நிலவியது. பின்னர் தமிழ்நாடு முழுவதும் 366 ஆண்டுகள் தெலுங்கு ஆட்சியில் இருந்து வந்தது. இக்காலத்தில் தெலுங்கர்களும் கன்னடர்களும் இங்கு குடியேறினார்கள். தெலுங்குச் சொற்களும் கன்னடச் சொற்களும் தமிழில் நுழைந்தன. மராட்டியர் ஆட்சி 179 ஆண்டுகள் 1855 வரை நடைபெற்றது. ஐரோப்பியர்கள் ஆட்சியில் போர்ச்சுகீசியச் சொற்களும் பிரெஞ்சுச் சொற்களும் ஆங்கிலச் சொற்களும் தமிழில் கலந்தன.

புதிய நாகரிகத்தாலும் புதிய வாழ்க்கையாலும் புதிய ஆட்சி முறையாலும் புதுக்கல்விமுறையாலும் புதுப் பொருள் புகுந்தமையாலும் அயல் நாட்டினர் கூட்டுறவாலும் தமிழ் மொழியில் பிற மொழிச் சொற்கள் அறிவியல் சார்ந்தவை கூட நாம் விரும்பாமலே வந்தேறின.

| | | |
|---|---|---|
| போர்த்துகீசியச் சொற்கள் | – | கிராம்பு |
| தெலுங்கு | – | சரக்கு, சாகுபடி |
| கன்னடம் | – | அக்கறை |

அராபிய, பாரசீக, இந்துஸ்தானிச் சொற்கள்
– காகிதம், ஜோடி, பாத் போன்றவைகள் ஆகும்.

இன்று நாம் படித்துக் கொண்டிருக்கின்ற அறிவியல் வாழ்வியல் படிப்பு பிரிட்டிஷாரால் அறிமுகப்படுத்தப்பட்டதாகும். 1830–களில் இதற்கான தொடக்கம் தமிழகத்திலும் இலங்கையிலும் ஏற்பட்டது. அப்போது வெளிவந்த இதழ்களிலும் அறிவியல் செய்திகள் இடம் பெறலாயின. இரேனியுசு பாதிரியார் "பூமிசாஸ்திரம்" என்கிற நூலைத் தமிழர்கள் அறிவு பெறுவதற்காக எழுதி 1832 இல் வெளியிட்டார். இப்பாதிரியாரே பூமிசாஸ்திரத்திலே குறிக்கப்பட்டிருக்கிற நாமங்களின் அட்டவணை சொற்பெயரில் 51 கலைச் சொற்கள் அடங்கிய

பட்டியலை வெளியிட்டார். இதில் எளிமை காணப்படுகிறது. 1849 இல் இலங்கையில் பாலகணிதம் என்ற நூல் வெளியாயிற்று. 1885 இல் "Algebra" பற்றிய நூல் இயற்கணிதம் எனத் தமிழாக்கப்பட்டு வெளிவந்தது. "வீச கணிதம் என்ற இன்னொரு நூல் இதே ஆண்டில் வெளிவந்தது. இதுவும் Algebra வைப்பற்றியது தான். இயற்கணிதம், வீச கணிதம் என்பதன் பின்புலத்தில் தமிழ், வடமொழிப் பார்வை இருப்பதை அறியலாம். இதன் பின்னர் 1850 இல் மிகப் பெருஞ்சாதனை இலங்கையில் நிகழ்ந்தது. டாக்டர். ஃபிஷ்கிறீன் ( 1882–1884) என்ற மருத்துவர் 11 நூல்களையும் இரண்டு கலைச்சொல் தொகுதியையும் வெளியிட்டார்.

இவர் முயற்சியில் வெளிவந்த நூல்கள் 1. மனுஷ அங்காதிபாதம், 2. இரண வைத்தியம் 3. மனுஷசுகரணம் 4. கெமிஸ்தம் என்பன. இந்த நூல்களின் பெயர்களே வடமொழிச் செல்வாக்கு மிகுதியைப் பறைசாற்றுகிறது. கிறீனின் கலைச் சொற்களை எண்ணிக்கை அடிப்படையில் தொகுத்துப் பார்க்கும்போது வட சொற்கள் முதல் நிலையிலும் ஆங்கிலக் கலைச் சொற்கள் மூன்றாம் நிலையிலும் காணப்படுகின்றன.

கீறினின் வார்த்தையிலேயே இக்கருத்தைக் கூற வேண்டுமெனில் "அரும் பதங்களுள், சில செந்தமிழ்ச் சொற்கள், சில சமஸ்கிருதச் சொற்கள். அநேகம் தமிழ் எழுத்தில் அமைந்த இங்கிலீஷ் சொற்களாயிருக்கும். பதம் ஒவ்வொன்றும் தனித்தனியாக ஆராய்ந்து சேர்க்கப்பட்டது. ஆயினும் தாய் நூலில் உள்ள இங்கிலீஷ் சொல்லைத் தமிழில் எழுதும்போதெல்லாம் அது குறையவும் அதற்குரிய ஓசை கெடாமல் ஏற்ற கோலங் கொள்ளவும் தக்கதாய் இயற்றி இருக்கும் என்று கூறுகிறார். ஆனால் 1872 இல் அவர் வெளியிட்ட கலைச்சொல் பட்டியலில் Belly –வயிறு போன்ற புதிய தமிழ்ச் சொற்கள் காணக்கிடக்கின்றன. வடமொழியும் ஆங்கிலமும் சொற்களில் விசி இருக்கக் காரணம் ஃபெப்ரீஷியஸ் (1778). இராட்லர் (1830) வின்சுலோ (1845) ஆகியோரின் அகராதிகள் இவர்காலத்திலேயே வெளிவந்து விட்டன. இக்கால கட்டத்தில் வடமொழியே உயர்ந்த மொழி என்ற கருத்தும் நிலவி வந்ததால் கிறீன் வடமொழியையும் ஆங்கிலத்தையுமே கலைச் சொல்லுக்கு மிகுதியாகப் பயன்படுத்தினார்.

இதே போல் பதினெட்டாம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் ஏற்பட்ட தொழிற் புரட்சியின் விளைவாக சுகாதார வாழ்விற்குப் பலவித இடையூறுகள் ஏற்பட்டுப் பல நோய்களும், சமூகப் பிரச்சனைகளும் பெருவாரியாகப் பரவின. இங்குத் தோன்றிய நூல்கள் தூய்மை இன்மையைக் கருத்திற்கொண்டு வெளிவந்தன. அவை தமிழில் மொழிபெயர்க்கப்பட்டன. (எ.கா. 1869 இல் சுகாதாரவிளக்கம்) இதன் பொருள் அட்டவணையில் ஆகாயம், போஜனம், தேகசுத்தம், வஸ்திரம், வாசஸ்தலங்கள் என்ற வடசொற்களே மிகுந்து காணப்படுகின்றன. இது போலவே புதிய கண்டுபிடிப்புகளான எந்திரங்களைப் பற்றிய "ஆயில் என்ஜின்" "மோட்டார் ரிப்பேர் இரகசியம்" போன்ற நூற்களும் வட சொற்களும் ஆங்கிலச் சொற்களும் கலந்து எழுதப்பட்டது. டாக்டர் கீறினைத் தொடர்ந்து தமிழ்நாட்டில் ம.ஜகந்நாத நாயுடுவினால் நூல்கள் எழுதப்பட்டன. இதன் தலைப்புகள் "சாரீர வினாவிடை", "பைஷ ஜகல்பம்", "பிரசவ வைத்தியம்" போன்றவை. கிறினைப் போலவே இந்நூல் தலைப்புகளும் வடமொழியே, வடசொற்களே கலைச் சொற்களாக நூலில் மிகுதியாகப் பயன்பட்டிருக்கிறது. மேலும் இவர்கள் நூலில் கலைச் சொல் பட்டியலில் நல்ல தமிழ்ச் சொல் இருந்தாலும் வடசொல்லே உரைநடையில் பயன்படுத்தப் பட்டிருக்கிறது என்பது அக்காலத்திய சொல்லாட்சியை அறிவுறுத்துகிறது.

சேலம் பகடாலு நரசிம்மலு நாயுடு 1900 இல் விவசாயம் அல்லது கிருஷி சாஸ்திர சாரசங்கிரகம் என்ற நூலை வெளியிட்டார். இதில் வட மொழியும் தமிழும் இடையிடையே ஆங்கிலமும் கலந்த பல கலைச் சொற்கள் உள்ளன. எ.கா. Geologist - தத்துவ சாஸ்திரிகள்.

இதனைத் தொடர்ந்து 1916 இல் வெளிவந்த தமிழ் சாஸ்திர பரிபாஷை சங்கத்தாரின் இதழ். ராஜாஜியும் வெங்கட சுப்பையரும் சேர்ந்து அதனை ஆங்கிலத்தில் வெளியிட்டனர். இதில் வெளிவந்த கலைச் சொற்கள் வட மொழிச் சொற்களேயாகும். எ.கா. chemistry – இரசாயன சாஸ்திரம்

1921 இல் ஆயுள்வேத, அலோபதி மருத்துவ இதழ்களில் இம்மருத்துவங்கள் எம்மொழியிலிருந்து வந்தனவோ அம்மொழியின் தாக்கத்திற்கு உட்பட்டு, தமிழிலும் அம்மொழியின் கலைச் சொற்களையே பயன்படுத்தியுள்ளன. ஆயுள்வேத கட்டுரைகளில் 40 விழுக்காடு வட சொற்களும், கிரந்த எழுத்துக்களும் கலந்துள்ளன. ஆனால் அலோபதி மருத்துவக்கட்டுரைகளில் வடசொல் சற்றுக் குறைவு கிரந்த எழுத்துக்களும் குறைவு. எ.கா. ஆயுள் வேத இதழ் வைத்திய கலாநிதி (1921) "ஆயுஷ்ய ரஸாயநம்" – இது வெகு சிலாக்யமான விருத்தி மருந்து ப்ருங்காமல தைலம் முதல் தரமான ஸ்நான தைலம் சிரஸ்களையும் கண்களையும் பொதுவாக தேஹத்தையும் குளிரச் செய்வது. இந்த இரண்டு முக்கியமான ஔஷிதங்களைப் பற்றி. 1926 இல் சிதம்பரநாத முதலியார் மொழி பெயர்த்து வெளியிட்ட இந்திய நர்சுகளுக்கான பாட நூலில் தமிழ்க் கலைச்சொல்லை அடுத்து அடைப்புக்குறிக்குள் ஆங்கிலச் சொல்லும் தரப்பட்டுள்ளது. (எ.கா.) சின்னம்மை (சிக்கன் பாக்ஸ்– Chicken Pox)

1932 இல் தமிழைப் பயிற்று மொழியாக அறிவித்த பின் அரசால் வெளியிடப்பட்ட கலைச் சொற்கள் பெரும்பாலும் வட சொல்லாகவும் ஆங்கிலமாகவும் இருந்தன. Analytical Chemistry – விபேதன ரஸாயன நூல்

1940 இல் தமிழறிஞர்கள் இல்லாது கலைச் சொல்லாக்கக்குழு இந்தியாவிற்கு ஒரு கலைச் சொல் என்பதற்காக உண்டாக்கபட்டது. இப்படியாக தமிழ் நூல்களில் சமஸ்கிருதமும், ஆங்கிலமும் எழுத அரசே வாய்ப்பளிப்பதை உணர்ந்த தனித்தமிழ் இயக்கம் தமிழில் தூய்மையைக் காக்க முற்பட்டது. பல நல்ல தமிழ்ச் சொற்கள் உருவாகின.

ஆனாலும் 1940 – மீண்டும் வட மொழிச் செல்வாக்கு மேலோங்கியது. அதற்குக் கண்டனம் எழவே கல்லூரி தமிழ்க் கல்விக்குழு ஒன்று தோற்றுவிக்கப்பட்டது.

1960–க்குப் பிறகு வடமொழி ஆங்கிலச் சொற்களை நீக்க முயற்சி தோன்றி கருத்துத் தெளிவிற்கு முக்கியத்துவம்

கொடுக்கப்பட்டது. 1962–இல் தமிழ் நாட்டுப் பாட நூல் நிலையம் 1975 வரை 663 அறிவியல் நூல்களை வெளியிட்டது.

1982–இல் தமிழ்ப்பல்கலைக்கழகம் பொறியியல், மருத்துவம், தாவரவியல் முதலிய துறைகள் சார்ந்த சிறந்த கலைச் சொற்களைத் தொகுத்தது. 1990–இல் அவை வெளிவந்தன.

**மொழித்தூய்மையும் சமூகமும் :**

ஆரம்பத்தில் குருகுலக் கல்வி தமிழகத்தில் உயர்குல மக்களுக்குச் சொல்லிக் கொடுக்கப்பட்ட 20–ஆம் நூற்றாண்டின் தொடக்கம் வரை பிரபுத்துவ சமூகத்தைப் பாதுகாப்பதற்குப் பயன்பட்டது. இக்காலகட்டத்தில் கல்வியறிவு பெற்றவர் 15 விழுக்காட்டினரே. அவர்களில் பெரும்பாலோர் நகரங்களிலும் பேரூர்களிலும் வசித்தவர்களே. இந்நாட்டில் தனிப்பெரும் தொழிலாக இருந்த வேளாண் தொழில் செய்தோர் உழுதுண்போர் உழுவித்துண்போர் என்று பாகுபடுத்தப்பட்டு எழுத்தறிவு பெறத்தகாதவர்கள் என்ற எண்ணத்தைப் பரப்பி அவர்களை அறிவு ஒளி அண்டாமல் பார்த்துக் கொள்ளும் நிலை ஏற்பட்டது. மேலும் குருகுலக் கல்வியும் மதக்கல்வியும், கல்விமுறையில் அறிவியல் தத்துவக் கருத்துக்களை வளர விடாமல் தடைசெய்தன. இதனை உறுதிப்படுத்தும் விதமாக 1706–1868 ஆம் ஆண்டு வரை 4200 வெளியீடுகளைக் கொண்ட நூலடைவு ஒன்றை ஜான் முர்டாக் என்பார் தொகுத்தளித்தார். இந்நூலடைவில் வகுப்பு 'டி' எனும் பிரிவில் இயற்கை அறிவியல் என்னும் தலைப்பில் அறிவியல் நூல்கள் வெளியீடு பற்றி மதிக்கப்படும் போது "தமிழர்களை மட்டும் நோக்கினால் அறிவியல் செய்திகளைத் தாங்கியுள்ள நூல்கள் ஏதுமில்லை " என்று குறிப்பிடுகிறார்.

இக்கால கட்டத்தில் 1832 இல் வெளியான பூமி சாஸ்திரத்திலிருந்து 1860 வரை தமிழ் அறிவியல் நூல்களைப் படைத்தவர்கள் பெரும்பாலும் புராடெஸ்டண்ட் பாதிரியார்களே. இதைத் தொடர்ந்து 1858 இல் இருந்து கிறிஸ்துவ பள்ளிப்பாட நூல் சங்கம் பிறகு கிறிஸ்துவர் லிட்ரேச்சர் சொசைட்டி மூலமும் பல அறிவியல் நூல்கள் எழுதப்பட்டன. இவர்கள் நூலிலும் மிக அதிகமாக வட மொழியும் ஆங்கிலமுமே கலைச் சொல்லாகப் பயன்படுத்தப்பட்டன.

இதன் பிறகு மதராஸ் ஸ்டேட் புக் அன்ட் வெர்னாகுலர் லிட்ரேச்சர் சொசைட்டி மூலம் தமிழர்கள் எழுதிய நூல்கள், பாதிரியார்கள் எழுதிய நூல்களை விமர்சித்துப் பதில் கொடுக்கவே எழுதப்பட்டன.

எ.கா. பூகம்பம் எரிமலை இவைகளின் வரலாறு, பூகோள சாஸ்திரம்.

இந்நூல்களிலும் வட மொழியே மிகுதி.

1900–1920 வரை கல்விக் கொள்கையின்படி 64 அறிவியல் நூல்களும் பாட நூல்களும் வெளியிடப்பட்டன. தமிழ் மக்களே அறிவியல் நூல்களை எழுதினார்கள். ஆனால் இக்காலகட்டத்தில் அனைத்துக் கல்விக்கும் வட மொழியே தகுதியானது என எண்ணப்பட்டது.

இதே காலத்தில் தொழிற் புரட்சி காரணமாக எழுதப்பட்ட நூல்களின் பெயர்களிலும் மொழி பெயர்ப்புகளிலும் ஆங்கில் ஒலிபெயர்ப்பு மிகுதியாகக் கலந்தது எ.கா. (1896) ஆயில் என்ஜின் (1916) மோட்டார் ரிப்பேர் இரகசியம்.

**தனித்தமிழ் இயக்கம் :**

இதனைத் தொடர்ந்தே மனோன்மணியம் சுந்தரம்பிள்ளை, மறைமலையடிகள், பாவாணர் போன்றோர் தனித்தமிழ் இயக்கத்தை வேரூன்றச் செய்து தமிழின் தூய்மையைக் காக்க முற்பட்டதால் நல்ல கலைச் சொற்கள் உருவாகின. (எ.கா) Heart என்பதற்கு ஹிர்தயம் என எழுதப்பட்டது. பின்னர் இதயம் ஆகியது.

**இலங்கையில் மொழித் தூய்மை :**

இதே காலகட்டத்தில் அறிவியலில் வடசொற்கள் இடம் பெற்றதற்கு மாறாக, இலங்கையில் நல்ல தமிழில் மொழித்தூய்மைக்கு முதலிடம் கொடுக்கப்பட்டது. எ.கா. மருத்துவர் சின்னதம்பியின் நூல்கள் ( 1932 – 1972)

| | | |
|---|---|---|
| Kidney Tray | - | குண்டிக்காய் தட்டம் |
| Anti Pyretics | – | காய் வெதிரிகள் |

கிரந்த எழுத்துக்கள் முழுவதும் தவிர்க்கப்பட்டுள்ளது.

எ.கா. Yam - யாம்
Yelly - யெல்லி
Syringe - சிறுங்கி

இதன் காரணமாக இந்நூலில் உள்ள ஓர் அறிவியல் சொல்லில் பொருள் மாறுபட்டு, எளிமை மற்றும் இனிமையற்றுக் காணப்பட்டது. ஆரம்பத்தில் அறிவுப் பரப்பல் முதல் நிலையிலும் மொழி உணர்வு இரண்டாம் நிலையிலும் இருந்தன.

இதே போல் தமிழகத்திலும் ஆங்கிலமற்ற சொற்கள், பெயர்ச் சொற்கள் வழக்கத்திற்கு மாறாக மாற்றி எழுதிக் கலைச் சொற்களை உருவாக்கினார்கள். எ.கா.Bock Cock– பாப் காக்கு, ஸ்டாலின் – இசுடாலின் இவைகளும் நாளடைவில் எழுதுவாரற்றுப் போயிற்று.

இன்றைய நிலையில் இலக்கண நெகிழ்வுகள் :

உரைநடையில், கலைச் சொல்லாக்கத்தில் இலக்கண நெகிழ்வுகள் காணப்படுகின்றன.

1. க் ச் ட் த் ப் ற் கடைசியில் வருகிறது.
   எ.கா– டாக்டர், டானிக்

2. மொழி முதலில் ப் வருகிறது.
   எகா – ப்ரோம்

3. Laser என்பது இலேசர் ஆகாது லேசர் ஆனது.

4. Chloroform க்ளோரோபோம் என்று எழுத வேண்டியது குளோரோபார்ம் என்றாகியது.

5. குருதி என்ற நல்ல தமிழ்ச் சொல் இருப்பினும் இரத்தம் எனும் சொல் எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.

6. கூச்சச் சொற்கள் களையப்பட்டுள்ளன.
   எ.கா. முலை – மார்பகம்

7. இதனைத்தாண்டி கருவியின் பெயர், வாய்ப்பாடுகள், குறியீடுகள், சமன்பாடுகள், ஒட்டுமொத்தமாகக்கூற வேண்டுமெனில் சர்வதேசச் சொற்கள் அப்படியே எடுத்தாளப்படுகின்றன
எ.கா. பாரன் ஹீட், செல்சியஸ்.

8. கிரந்த எழுத்துக்கள், மருந்து, கருவிகளின் பெயர்களைக் குறிப்பிடும் பொழுது சாதாரணமாக உபயோகப்படுகிறது.
எ.கா. Anti Histamine–ஆண்டிஹிஸ்டமின் Jenner – ஜென்னர்

இவ்வகை இலக்கண மாற்றங்கள் தானாகவே நடைபெறுவதைப் பேரா.அ.கி.பரந்தாமனார் "இலக்கணமும் காலத்துக்குக் காலம் மாறி வருவது கண்கூடு. மாறிவருவது தான் வளரும் இலக்கணத்திற்கு அறிகுறி, வாழும் இலக்கணத்திற்கு அடையாளம்" என்று கூறுவது ஏற்புடையதாகவே உள்ளது.

இன்றைய நிலையில் மொழி வளர்ச்சியா ? தேய்வா ?

இம்மாதிரியான மாற்றங்கள் தேவைதான் ஏனெனில் "மனித சமுதாயம் வெகுதூரம் முன்னேறிவிட்டது. இன்றையச் சமுதாயத் தேவையும் மாறிவிட்டது. தமிழ் மொழி அமைப்பில் மாற்றம் ஏற்பட்டுவிட்டது. சங்கத் தமிழ்க் கூறுகள் இன்று மொழியில் மாறிவிட்டன. எழுத்தில், சொல்லில், பொருளில் இன்று மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. இவற்றை நோக்கும்பொழுது தமிழில் இன்றைய நிலையைக் காணும்பொழுது அதன் வளர்ச்சி நிலை நமக்குப் புலப்படும்" (ஒ.பாலகிருஷ்ணன்).

ஆனால் இன்றைய நிலையில் அறிவியல் உரையாடலில் அல்லது எழுத்தில் தமிழ்ச் கலைச்சொற்களின் பயன்பாடு குறைந்து ஆங்கிலத்தைப் பயன்படுத்துவது மிகுதியாக உள்ளது. சில சமயங்களில் சில ஆங்கிலச் சொற்களை மட்டும் பேசுவதும், மற்றும் சில சமயங்களில் வாக்கியங்களை அப்படியே ஆங்கிலத்தில் பேசுவதும் நடைமுறையில் உள்ளன.

எடுத்துக்காட்டு (மருத்துவத்துறை) :

மருத்துவத்தைப் பொறுத்தமட்டில் அந்நிலைக்கு ஆளாக்கப்படுவதற்கான காரணம் மருத்துவரும், செவிலியரும் தம் பாடங்களை ஆங்கிலத்தில் கற்று வருவதினாலேயே ஆகும். மேலும், மருத்துவத்திற்கு உபயோகப்படும் கருவிகள் பல ஆண்டுகள் பயன்படுத்தப்பட்ட பிறகே அதற்கான கலைச்சொற்கள் கண்டுபிடிக்கப்படுகின்றன. இக்கால இடைவெளியும் அச்சொற்களை நடைமுறையில் கொணரத் தடைவிதிக்கிறது. மேலும், மருத்துவ உண்மைகளை ஆங்கிலம் தெரிந்த பொது மக்களும் ஆங்கிலத்தைப் பயிற்று மொழியாகக் கொண்ட மாணவர்களும் சஞ்சிகை, பத்திரிக்கை, மற்றும் ஆய்வுக் கட்டுரைகளை ஆங்கிலத்தின் மூலம் படித்து உடன் நடைமுறைக்கு, அன்றாடப் பழக்கத்திற் கொணர்ந்து விடுவதும் ஒரு காரணம். ஆங்கில அடிமைத்தனத்தில் 200 ஆண்டுகள் இருந்ததும் மற்றொரு காரணமாக அமைகிறது. இவைகளெல்லாவற்றையும் விட மிக முக்கியமாக, சிறப்பான மருத்துவக் கண்டுபிடிப்புகள் விளைவித்தமையில் தமிழர்களின் பங்களிப்பு மிக மிகக் குறைவேயாகும்.

ஆகவே கலைச் சொற்கள் தமிழில் உருவாக்கப்பட்டாலும் எல்லா இடங்களிலும், நடைமுறையில் தமிழில் சொல்ல முடியாத நிலை ஏற்படுகிறது. (எ.கா) ஒருவர் தாம் அறுவை சிகிச்சைக்கு உட்படும் பொழுது அதை மற்றொருவருக்குக் கூற நேர்கையில் 'எனக்கு ஆபரேஷன்' என்று கூறுவதும், வயிற்றில் புண் ஏற்பட்டதை 'வயிற்றுப்புண்' என்று கூறாது 'வயிற்றில் அல்சர்' என்று சொல்வதும் பழக்கத்தில் உள்ள ஒன்று. இதே போல் "Gastroscope" என்ற சொல் இரைப்பை அகநோக்கி என்று கலைச்சொல்லாக எழுதப்பட்டாலும், அறுவை அரங்கில் வேலை பார்க்கும் பொழுது மருத்துவர், செவிலியர் மற்றும் மருத்துவ உதவியாளர் அனைவரும் ஒருவருக்கொருவர் பேச்சின் பொழுது அந்நோக்கியை "ஸ்கோப் " என்றே கூறுகின்றனர். காரணம் சொல்லின் எளிமையும் அன்றாடப் பழக்கமும் ஆகலாம்.

மருத்துவர் நோயாளியிடம் பேசும்பொழுது அடிக்கடி ஆங்கில வார்த்தைகளையே கூறுவது சாதாரணமாகக் காணப்படும் ஒரு செயல். இதற்குக் காரணம் 1. ஆங்கிலத்தில் வார்த்தைகளை

அடிக்கடி பேசினால் நோயாளி தன்னைப் பெரிய படிப்பு படித்த பெரிய மருத்துவர் என்று நினைப்பார் என்றும், அதற்கு ஒரு தனி மரியாதை உண்டு என்றும் எண்ணுவதாலும் ஆகும். சில சமயங்களில், அவரே பழக்கத்தில் ஆங்கிலச் சொற்களைத் தமிழ் என நினைத்துக் கொள்வதும் உண்டு. (எ.கா) வாயால், ஆம்புயூல். இதற்கு மாறாக மருத்துவர் நோயாளியிடம் தமிழிலேயே மருத்துவத்தைக் கூற வேண்டும் என்று நினைத்துச் சொன்னாலும் நோயாளி அவ்வார்த்தைகளையே திருப்பி ஆங்கிலத்தில் கூறுகிறார். எடுத்துக்காட்டாக, குழாய் சுரை, அல்லது குப்பி மாத்திரை என்று மருத்துவர் கூறினாலும் நோயாளி உடன் "காப்சூல்" என்றும், படுக்கை என்றால் "பெட்' என்றும் மாத்திரை என்றால் "டாப்பிலட்" என்றும் கூறுகிறார். இதே வார்த்தைகளை ஆங்கில மருந்து விற்பனைக் கூடங்களிலும் கூறியே மருந்துகளும் விற்கப்படுகின்றன. செவிலியரும் மருத்துவ உதவியாளர்களும் மேற்கூறிய வார்த்தைகளுடன் வார்டு, ஆஸ்பத்திரி, ஸ்ட்ரெச்சர் என்ற வார்த்தைகளை மருத்துவமனையில் தவிர்க்க முடியாதவைகளாக மருத்துவர் மற்றும் நோயாளியின் உரையாடலின் பொழுது பேசுவது நாமறிந்தது.

இதே மாதிரியாக பொறியியலில் ஆங்கிலமே தெரியாத தச்சர் அல்லது கொத்தனார் ஆங்கிலம் பயின்ற பொறியியலாளர்களிடம் பேசும் பொழுது மரபு வழிச் சொற்களையே மறந்து அவரைப் போலவே தானும் பேச முயல்கிறார். இதற்குக் காரணங்கள் 1. அவருடன் சேர்ந்த பழக்கம் 2. இப்படிப் பேசுவதின் மூலம் தனக்குச் சமூகத்தில் தனி மரியாதை கிடைக்கும் என்ற நினைப்பு 3.அக்கருவிகளுக்குத் தகுந்த கலைச்சொற்கள் இல்லாத நிலை. (எ.கா) நட்டு, போல்ட், இந்நிலை தொழிற்புரட்சிக்குப் பிறகு மிகவும் அதிகமாக உள்ளது.

இதனை மனதில் கொண்டுதான் 20ஆம் நூற்றாண்டின் ஆரம்ப காலத்தில் வட மொழி கலந்து எழுதப்பட்ட உரைநடை தனித்தமிழ் இயக்கத்தினாலும், திராவிட இயக்கப் பேச்சு எழுத்து வன்மையாலும் மாறியது. தற்பொழுது நல்ல தமிழ் எழுதுவது பேசுவது என்பதை மறந்து ஆங்கிலமும் தமிழும் கலந்த நடையை, எப்படித் தமிழையும் வட மொழியையும் கலந்து மணிப்பிரவாள நடையாக எழுதினார்களோ அப்படியே எழுதப்படுகிறது, பேசப்படுகிறது. எ.கா. "இருப்பினும் டிஸ்சார்ஜ் செய்வதற்கு முன் சில கண்டிஷன்களை இவர்கள்

கடைப்பிடிக்கிறார்கள்,. எப்பொழுதும் ஒரு டாக்டரும் அனுபவமிக்க நர்ஸ் ஒருவரும் குட்டியில் இருப்பார்கள் இவர்களுக்கு உதவியாக அட்டண்டரும் இருப்பார் (குமுதம் ஹெல்த் ஸ்பெஷல் 2001 நவ.ப-39)

இவ்வுரைநடையைப் பார்க்கும் பொழுது மொழிபெயர்க்க வேண்டியவை மொழி பெயர்க்கவில்லை என்று தெளிவாகத் தெரிகிறது, மேலும் கிரந்த எழுத்துக்களும் மிகுதியாகப் பயன்பட்டுள்ளது.

இது போலவே பல லட்சம் மக்கள் பார்க்கும் தொலைக்காட்சியிலும் "வீவோர்ஸ் இன்னைக்கி சந்திரனைப் பற்றி கொஷ்சின் கேட்ட பின் ரைட்டா அல்லது ராங்கான்னு சொன்ன பின் ஒரு சூப்பரான சாங் உங்களுக்குப் போடுவேன்" என்பதும், பல்லாயிரம் பேர் பார்க்கும் விளம்பரப் பலகையில் கடையின் பெயர் "முத்து இங்கிலீஷ் பார்மஸி" என்று எழுதப்பட்டுள்ளதும் தான் இன்றைய தமிழகத்தின் தமிழ் எனலாம்.

கலைச்சொல் அகராதி :

இத்தனை நடந்து கொண்டிருக்கும் தமிழ் நாட்டில் மணவை முஸ்தபா (1991, 94) அறிவியல் கலைச்சொல் களஞ்சியம் எனச் சில கலைச்சொல்லகராதிகளை வெளியிட்டுள்ளார். அ.கிருஷ்ணமூர்த்தி, மற்றும் டாக்டர்.சம்பத் குமாரால் அறிவியல் அகராதி வெளி வந்துள்ளது. இதே போல் டாக்டர்.சாமிசண்முகம் மற்றும் முனைவர் ஜோசப்பினாலும் மருத்துவ அகராதிகள் சிறப்பான முறையில் வெளிவந்துள்ளன. இவை நல்ல தமிழை எழுத உதவுகிறது என்றால் மிகையில்லை.

பரிந்துரைகள் :

தமிழும் ஆங்கிலமும் கலந்து எழுதுவது ஏன் என்ற வினாவிற்குக் கிடைக்கும் பதில் "சயின்ஸ் புரியும் படி எல்லாம் காஷ்வலாக இருக்கனும்" என்பதே. சொல் கலப்பிற்குத் தேவைக்கு ஏற்பக் கடன்வாங்கலாம். ஆனால் எல்லாமே கடனாக இருந்தால் நாம் நாமாகவே இருக்க மாட்டோம் "தமிங்கிலம்" என்ற ஒரு புது மொழி உருவாகிவிட்டது.. இது போய் நாம் பயப்படும் அளவிற்கு எப்படித்

தீவுகளில் Pidgin மொழி பேசப்படுவது போல பல மொழியினர் உள்ள தமிழர் குடியேறிய மொரீசியசில் பேசும் கிரியோல் மொழி போல இக்கணினி யுகத்தில் இப்படியே விட்டுவிட்டால் தமிழ்நாட்டிலும் கிரியோல்மொழி பேசப்படும், எழுதப்படும். ஆகவே தேவைக்கேற்ப கிரந்த எழுத்துக்களையும், பிற மொழிச் சொற்களையும் எடுத்துக்கொண்டு தூசு படிந்த தமிழை மாசுபடியாது விளங்குமாறு செய்ய வேண்டும்.

சிங்கப்பூர் வழிகாட்டுகிறது

சீனமொழியில் மாண்டரின் சைனீஸ் (MANDARIN CHINESE) என்றும் கான்டோனீஸ் (CANTONESE) என்றும் இரண்டு வகையாகப் பேசப்படுகிறது, இதில் மாண்டரின் சைனீஸ் மொழியே பேசப்பட வேண்டும் என்ற நிலைப்பாடு கொண்டுள்ள சிங்கப்பூர் தொலைக்காட்சி நிறுவனம் ஹாங்காங் தொலைக்காட்சியில் ஒலிபரப்பாகும் கான்டோனீஸ் சின்னத்திரைப் படங்களை மாண்டரின் மொழியில் மொழிமாற்றம் செய்தே (Dubed) ஒலிரப்புகிறது, மேலும் அதன் அண்டை நாடான மலேசியா தொலைக்காட்சி-3 என்ற தொலைக்காட்சியில் வரும்கான்டோனீஸ் இல் வெளிவரும் செய்திகளை சிங்கப்பூரிலிருந்து வெளிவரும் இதழ்களில் அம்மொழியிலேயே வெளிவரத் தடைசெய்துள்ளது,

இதுபோலவே ஆங்கிலம் கலந்த கிரையோல் சிங்கலீஸ் சிங்கை தொலைக்காட்சியில் வெகுவாகப் பயன்பாட்டில் உள்ளது. இதன் காரணமாக இளைஞர்கள் இதுதான் பேசவேண்டிய ஆங்கிலம் என்று எண்ணக்கூடும. ஆகவே இக் கிரையோல் மொழி தவிர்க்கப்பட்டு மிகக்குறைந்த அளவிலேயே தொலைக்காட்சியில் வழக்கத்தில் உள்ளது.

இதற்கு இன்றைய நிலைக்குத் தேவைப்பாடுகள்

சில உடனடி நடவடிக்கைகள் :

1. இதழ், வானொலி, தொலைக்காட்சி, சினிமா போன்றவைகளில் நல்ல தமிழ் தெரிந்த எழுத்தாளர்கள் இருக்க வேண்டும்.

2. எப்படி எம்.ஜி.ஆர் ஆட்சியில் பெரியார் எழுத்துச் சீர்திருத்தம் அமுல் படுத்தப்பட்டதோ அதே நிலையில் எல்லாத் தொலைத் தொடர்பு சாதனங்களிலும் தமிழைச் சரிவர எழுதக் கண்காணிப்புக் குழு அமைக்க வேண்டும். இல்லையேல் இந்தோனேசியா, பிரான்ஸ், மலேசியாவைப்போல் பிறமொழிக்கலப்பை ஒரு குற்றமாகக் கொண்டு அதனை நீக்கச் சட்டம் இயற்ற வேண்டும்.

3. மற்ற மொழிச் சொற்களுக்கு நிகரான சொற்கள் எளிதில் கிடைக்க புதிய அகராதிகள் அவசியம். இது தவிர ஒரு மேற்கோள் அகராதியும், வட்டாரச் சொல் அகராதியும் இன்றியமையாதது.

4. புதிய கண்டுபிடிப்புகள் கருவிகள் பல நாடுகளில் உருவாக்கம் பெறும் பொழுது இங்குப் புழக்கத்தில் அப்போதே தமிழ்ச்சொல் வர வழி செய்தல் வேண்டும்.

5. பி.ஏ., எம்.ஏ., மற்றும் இதழியலிலும் இலக்கியம் சார்ந்த பாடங்களோடு இணையப் பயன்பாட்டுத் தமிழ், கலைச் சொல் உருவாக்கத் தமிழ் மற்றும் மொழி சார்ந்த சிறப்புத் தமிழும் பாட மொழியாக இருக்க வேண்டும்.

6. ஊடகங்கள் கையில் ஊடாடும் அறிவியல் தமிழும் அறிவியல் பாடத் தமிழும் ஒரே தமிழாக, துறைக்கேற்ற பயன்பாட்டுத் தமிழாக மாற்றியமைக்க வழியமைக்க வேண்டும்.

7. கல்லூரிகளில் பகுதி 1 என்று தமிழ் இருந்தாலும் அந்த மதிப்பெண்கள் பட்டம் வழங்கும்போது தர மதிப்பீடுகளுக்கு ஏற்கப்படுவதில்லை. எதிர்காலத்தில் இந்நிலை மாற்றியமைக்கப்பட்டு அந்த மதிப்பெண்களும் தர மதிப்பீட்டுக்கு எடுத்துக் கொள்ளப்பட வேண்டும்.

8. தமிழைப் பொறுத்த வரை கலைச்சொற்கள் தூயதமிழில் இருத்தல் வேண்டும் என்ற எதிர்பார்ப்பு உண்டு. இவற்றை நடைமுறைப்படுத்த மருத்துவம், பொறியியல் மற்றும் அறிவியல் சம்பந்தப்பட்ட சொற்களும் சமூக

அறிவியல் ஏற்பாடுகளும் தொகுக்கப்பட்டுச் சிறு சிறு தொகுதிகளாக இலங்கையிலும், தமிழகத்திலும் வெளிவந்துள்ளன. இவற்றையெல்லாம் தெரிந்து ஆவணப்படுத்த வேண்டும். தமிழகத்திலுள்ள மரபு வழித் தொழிலாளர்களிடமிருந்து கலைச் சொற்களைத் திரட்ட வேண்டும். புதுச் சொற்களை ஆக்க வேண்டும். தேவையான அகராதிகளை வெளியிட வேண்டும். இப்பணிகளை மேற்கொள்ள 1. தமிழ்க் கலைச்சொல் தரப்படுத்தக் குழு ஒன்று உடனே அமைக்க வேண்டும். இதில் இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் சார்பாளர்களும் இடம் பெற வேண்டும். துறை அறிஞர்களோடு மொழியியல் அறிஞர்களும், தமிழ் அறிஞர்களும் இடம் பெறுதல் வரவேற்கத்தக்கது. இது ஒரு தீர்வகமாக (Clearing House) இருந்து செயல்பட வேண்டும். இக்குழு கலைச் சொல் பட்டியல்களை மட்டும் வெளியிடாது தரப்படுத்தப்பட்ட கலைச்சொல் அகராதிகளைத் துறை வாரியாகவும் பொதுவாகவும், வெளியிட வேண்டும். அவற்றைப் பயன்படுத்திப் பாடநூல்கள் எழுதப்பட வேண்டும்.

9. அறிவியல் மூல நூல்களை எழுதுவதோடு மொழி பெயர்ப்பும் மேற்கொள்ளப்பட வேண்டும். இதற்கான அறிவியல் இலக்கிய மொழி பெயர்ப்பு மையம் (Centre For translating science literature) ஒன்று நிறுவப்பட வேண்டும். இவற்றையெல்லாம் பயன்படுத்த தமிழே பயிற்று மொழியாக வேண்டும்.

### மொழித் தூய்மை காத்தல்

உலகில் பல மொழிகள் இந்த மொழிக்கலப்பால் சிக்கல்களை எதிர் நோக்கின. அவற்றைத் தீர்க்கப் பல நடைமுறைகள் இக்கட்டுரையின் பரிந்துரையில் கூறப்பட்டுள்ளன. சோமாலி, மாயன், போலிஷ், ஹங்கேரி முதலிய மொழிகள் தங்கள் இயல்பைத் தக்க வைத்துக் கொள்ளப் போராடின; ஓரளவு வெற்றி பெற்றன.

**மொழித் தூய்மை நடைமுறைக்கு ஏற்றதா? சாத்தியமா ?**

பிறமொழிச் சொற்களைக் கூடுமான வரை தவிர்ப்பதன் மூலம் மொழித்தூய்மையைக் காப்பாற்றலாம். நடைமுறைப்படுத்தலாம். ஆனாலும் தவிர்க்க முடியாத சொற்களும் உள்ளன. குறிப்பாக பெயர்ச் சொற்கள் எ.கா. பாரன்ஹீட், செல்சியஸ், நைட்ரஜன் இவ்வகைச் சொற்கள் பெரும்பாலும் வேதியியல், மருந்தியல் தொடர்பானவை. தூய்மையைக் காப்பதில் இடர்ப்பாடுகள் ஏற்படுவதும் உண்டு. அது பேச்சுவழக்கு.

**பேச்சு வழக்கு / எழுத்துவழக்கு**

எழுத்து வழக்கில் தூய்மையைக் காப்பாற்றுவதில் அதிகத் தொல்லை இல்லை. ஆனால் பேச்சு வழக்கில் இது சாத்தியப்படுமோ என்பது கேள்விக்குறியே. ஏனெனில் இரு மொழிகள் கலப்பு என்பது இயல்பாக இருக்கிறது. மேலும் இன்று தொலைக்காட்சி மற்றும் ஊடகங்கள் இந்த இரு மொழிக்கலப்பை ஊக்குவிப்பதால் மொழித்தூய்மை பாதிக்கப்படுகிறது. இதில் கவனம் செலுத்தினால் பேச்சு வழக்கிலும் கூடுமானவரை தூய்மையைக் காப்பாற்ற முடியும்.

**முடிவு :**

மொழியைப் பயன்படுத்துபவர் தம் மொழியின் இயல்பை அறிந்து பலதுறைகளிலும் கவனத்துடன் இயல்பு கெடாது பயன்படுத்தினால் ஓரளவு அதன் தூய்மையைக் காக்கலாம். அதற்கு ஓரளவு விதி விலக்கும் உண்டு.

**துணை நூற்கள் :**


1. முனைவர்இராம.சுந்தரம், பொருள் புதிது வளம் புதிது 1999.
2. அம்பி, மருத்துவத் தமிழ் முன்னோடி டாக்டர் கிறீன் – 1945.
3. டாக்டர், சு. நரேந்திரன், உலகத் தமிழியல் ஆய்வு வளர்ச்சிக் கருத்தரங்க ஆய்வுமாலை தொகுதி இரண்டு – 2003.
4. அ.கி. பரந்தாமனார், நல்ல தமிழ் எழுத வேண்டுமா – 2003.

5. டாக்டர், சு. நரேந்திரன், இருமொழி வழக்கு இருந்தே தீரும் 8வது உலகத்தமிழ் மாநாடு ஆய்வுக் கட்டுரை – 1995.

6. ஒ.பாலகிருஷ்ணன், அறிவியல் தமிழ்க்கோவை பாரதியார் பல்கலைக்கழகம் – 1986.

7. ச. மகாதேவன், தமிழியலின் எதிர்காலம் பாகம் –1 தமிழியல் ஆய்வு மாநாடு – 2006.

8. இரா. பாவேந்தன், தமிழில் கலைச் சொல்லியல், முனைவர் ஆய்வேடு – 2003.



கருத்தரங்கம் சிறக்கவும்,
பயனுறவும் வாழ்த்துவோர்

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

# 2. அறிவியல் நோக்கில் மொழித்தூய்மை

முனைவர் மணவை முஸ்தபா,
இயக்குநர், அறிவியல் தமிழ் அறக்கட்டளை,
தலைவர், தமிழ்நாடு அறிவியல் தமிழ் மன்றம்.

மொழியப்படுவது மொழியாகும். ஒவ்வொரு இனத்தின் நாகரிக அளவுகோலாக அமைவதும் அவர்தம் மொழியேயாகும்.

மனிதப் பட்டறிவின் வெளிப்பாடே மொழியும், பண்பாடும், கலையும் என்பது மானிடவியல் வரலாறு உணர்த்தும் உண்மை.

மந்தமாருதம் தென்றல் வீசும் மாலை நேரத்தில் வண்ணத் தோகையினை விரித்தாடும் மயிலின் ஆட்டத்தைக் கண்ட மனிதன், தானும் அதைப்போல ஆடவேண்டுமென வேட்கை கொண்டான், நடனக்கலை பிறந்தது. குயிலின் குரலினிமையைக் கேட்டு சிந்தை குளிர்ந்த ஆதிமனிதன், தானும் குயிலைப்போல் இன்னொலி எழுப்ப விழைந்தான் இசைக்கலை எழுந்தது.

அதே போன்று, ஆதிமனிதன் தனக்குள் உருவான உள்ளுணர்வுகளை ஓசைவழி ஒலி எழுப்பிப் பிறர்க்கு உணர்த்த முற்பட்டான், மொழி உருவாகியது. தன் உணர்வுகளை, உணர்வு வழியே வெளிப்பட்ட சிந்தனைகளை, கருத்துக்களைப் பதிவு செய்ய விழைந்தான். எழுத்துக்கலை தோன்றியது. இவ்வாறு மனிதகுலப் பட்டறிவின் வெளிப்பாடாக உருவாகி வளரத் தொடங்கியதே நாகரிகம், கலை, பண்பாடு அவற்றின் பதிவுச் சாதனமான மொழி, எழுத்து, இலக்கியம் முதலான அனைத்தும்.

மொழியானது ஒலி வடிவில் உருவாகி, பின் அவ்வொலி எழுத்துருப் பெற, எழுத்துக்கள் சொற்களாக சொற்றொடர்களாக அமைந்து, மொழி முழுமையடைகிறது.

மொழி என்பது மனித மன உணர்வு, சிந்தனையின் வெளிப்பாடான கருத்துரு, இவற்றின் முழு வடிவமாக அமைவது.

எனவேதான், தனி மனித வெளிப்பாடாக மட்டுமல்லாது, ஓர் இனத்தின் மன வளர்ச்சி, சிந்தனைப்போக்கு, முன்னேற்ற நிலை ஆகியவற்றின் ஒட்டுமொத்த அளவுகோலாக அவ்வினத்தின் மொழி கருதப்படுகிறது.

தனித்தனி குடும்பத்தினராக, இனத்தவராக, வாழ்ந்த மக்கள் தேவையின் காரணமாக இன்னொரு பகுதியினர் அல்லது இனத்தவரோடு கலந்துறவாட நேர்கின்றபோது, ஒரு பகுதியினர் அல்லது இனத்தவர் பயன்படுத்திய சொல், மற்றொரு பகுதியினரிடையே பரவி நிலைபெறும் சூழல் உருவாகியது. இவ்வாறு, உணர்வுப் பரிமாற்றத்தின் விளைவாக சொல் மற்றும் மொழிப் பரிமாற்றம் ஏற்படுவ்து தவிர்க்க முடியாததாகும்.

இதன் விளைவாக அன்று முதல் இன்றுவரை ஒவ்வொரு இனமொழியும் பிற இனமொழிச் சொற்கலவையுடையதாக அமைய நேர்கிறது. அப்போது ஒருசில மொழிகள் அவ்வாறு வந்து சேரும் பிற மொழிச் சொற்களை, அப்படியே ஏற்றுக் கொள்ளாது, அது எந்த மொழியில் வந்து சேர்கிறதோ அந்த மொழியின் இயல்பு மற்றும் இலக்கண விதிகட்கிணங்க மாற்ற, திருத்தங்கள் பெற்று, எந்த மொழியில் வந்து கலக்கிறதோ அந்த மொழியின் மூலச் சொற்களைப் போன்ற தோற்றத்தைப் பெற்றுவிட நேர்கிறது.

இந்த அடிப்படையில்தான் தொல்காப்பிய இலக்கணம், வேற்று மொழிச் சொற்கள் தமிழில் கலக்கநேரின், தமிழ் எழுத்து ஒலிப்பிலக்கணத்துக்கேற்ப ஒலிமாற்றம் பெற்று இணைவது நலம் என விதிக்கிறது.

> 'வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
> எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே'

என்ற சூத்திரத்தின் வாயிலாகத் தெளிவுறுத்துகிறார். இத்தொல்காப்பிய விதிமுறையிலிருந்து, பிறமொழிச் சொற்கள் தமிழில் வந்து கலப்பது முற்றாகத் தவிர்க்கவியலாதது என்பது தெளிவாகிறது. அவ்வாறு வந்து கலக்கும் பிறமொழிச் சொற்களை எவ்வகையில் ஏற்க வேண்டும் என்பதற்கான விதியும் வகுத்துக் கூறியுள்ளார்.

எனவே, எந்த மொழியிலும் மொழித்தூய்மை என்பது

ஒருவகையில் கானல்நீராகவே உள்ளதெனலாம். இன்னும் தெளிவாகச் சொல்லவேண்டுமென்றால், 'தூயமொழி' என்று உலகில் எந்த மொழியும் இல்லை என்றே கூற வேண்டும். பல்வேறு மொழி பேசும் மக்களுக்கிடையே நிகழும் உறவுகளின் தாக்கத்தால் இத்தகைய மொழிக்கலப்பு நிகழ்வுறுவது தவிர்க்கவியலா ஒன்றேயாகும். எனினும், பல்வேறு இலக்கணக் கட்டுப்பாடு போன்றவைகளால் அவற்றின் அளவு இயன்றவரைக் குறைக்கப்படுகிறது.

இன்னும் சற்று ஆழமாகச் சிந்தித்துப் பார்ப்போமேயானால் பல்வேறு மொழி பேசும் மக்களின் பேச்சு வழக்கு மொழியே காலப்போக்கில் திருத்தமடைந்து எழுத்து வழக்கு மொழியாக வடிவெடுத்து இலக்கியத்தில் இடம்பெறுகிறது. இலக்கியம் கண்டதற்கே இலக்கணம் என்பது மொழியியலார் முடிவு.

ஆயினும், ஓர் இன மொழியின் கலப்பிலா தூய, மூலச் சொற்களே அவ்வினத்தின் உண்மையான பண்பாட்டை, கலையை, பழக்க வழக்கங்களோடு கூடிய நாகரிகத்தை உலகுக்குப் பறைசாற்றும் காலக்கண்ணாடியாகும்.

ஆனால், பிற மொழிச் சொற்களை சமயச் சார்பு, ஆட்சி அதிகாரம் போன்ற காரணங்களால் நாம் ஏற்றுப் பயன்படுத்தும்போது, அது நம் நாகரிக நலத்திற்கு நாம் வைக்கும் ஒருவகை வேட்டாக அமைவதும் உண்டு. சான்றாக, இந்து சமய வேதமொழி எனக் கருதப்படும் சம்ஸ்கிருத மொழிச்சொற்களை அதிக அளவு பயன்படுத்தும் நிலை. அன்றாட வாழ்வில் பயன்படுத்தப்படும் அத்தகைய சம்ஸ்கிருதச் சொற்களில் 'க்ஷவரம்' என்பதும் ஒன்று. இதை, தொல்காப்பிய ஒலிப்பிலக்கணப்படி 'சவரம்' என்று கூறுவோரும் எழுதுவோரும் உண்டு. இச்சொல் அதிக அளவு புழக்கத்தில் இருப்பதால் அச்சம்ஸ்கிருதச் சொல்லைக் குறிக்கும் தமிழ்ச் சொற்களான வழித்தல், மழித்தல், சிரைத்தல் போன்ற சொற்கள் வழக்கிழக்க நேர்ந்தது. அதன் விளைவு 'சம்ஸ்கிருத மொழியைக் கையாளும் ஆரியர்கள் தமிழகம் வருவதற்கு முன் தமிழக மக்களுக்கு 'க்ஷவரம்' செய்து கொள்ளும் பழக்கமே இல்லை போலும்!' என்பன போன்ற அரைவேக்காட்டு ஆய்வுகள் செய்ய நேர்கின்றன. இதனால்

தமிழர்தம் நாகரிகமே ஒரு வகையில் கொச்சைப்படுத்தப்பட நேர்கிறது.

எனவே, மொழித்தூய்மை பேணல், தமிழ் இன நலன் காக்க நாம் மேற்கொள்ளும் தலையாய செயல் என்ற உணர்வு மேலோங்கியதால், தனித்தமிழ் இயக்கம் தமிழகத்தில் உருவாகி நிலை பெற்றது. தமிழ்ச் சொல் வளம் காக்க தமிழர்தம் பண்பாட்டுச் சிறப்பை, கலை, நாகரிக உயர்வை, தமிழர் வாழ்வியல் மேம்பாட்டைப் பாதுகாக்க மொழித் தூய்மை இன்றியமையாதது எனக் கருதப்படுகிறது. தனித்தமிழ் இயக்கம் தமிழ் மறுமலர்ச்சிக்கும் பாதுகாப்பு உணர்வுக்கும் மாபெரும் உந்துதல் என்பதை மறுப்பதற்கில்லை.

இவ்வாறு இன நாகரிக உரைகல்லாக விளங்கும் மொழியை, சொற்களை இயன்றவரை கலப்பில்லாது காக்க வேண்டும் என்ற உணர்வு தமிழர்களிடம் மட்டும் தலைதூக்கி நிலைபெற்றுள்ளதாக யாரும் நினைத்துவிடக் கூடாது. இத்தகைய மொழித்தூய்மை காக்கும் இயக்கங்கள் உலகெங்கும் உண்டு என்பதை நாம் நினைவிற் கொள்ளவேண்டும்.

இன்று உலகளாவிய மொழியாக இருக்கும் ஆங்கிலம் ஒரு பிறவிக் கலப்பு மொழியாகும். சுருங்கச் சொன்னால் வெங்காயத்தின் மேல் தோலை உரித்துக்கொண்டே சென்றால் இறுதியாக ஊசி போன்ற ஒரு சிறு காம்பே கிடைக்கும் என்பார்கள். அதைப்போலவே இன்றைய ஆங்கிலத்தில் கலந்துள்ள பிறமொழிச் சொற்களையெல்லாம் நீக்கினால் இறுதியாக இங்கிலாந்தில் ஆதிகாலத்தில் வாழ்ந்த சாக்சானியர்கள் எனும் ஆதிவாசிகளின் மொழிதான் மிஞ்சும். ஆனால், அவ்வாறு ஆங்கிலத்தில் லத்தீன் மற்றும் ஃபிரெஞ்ச் சொற்கள் கலந்து உருமாற்றத்தோடு நிலைபெறுவதால் ஆங்கிலம் தன்னியல்பு இழந்த மொழியாக இருக்க - வழங்க நேரிடுகிறது என்பதனால் 1918 ஆம் ஆண்டு முதல் 'தூய ஆங்கில மொழி இயக்கம்' (Society for pure English) தொடங்கப்பட்டு இன்றுவரை முனைப்புடன் செயல்பட்டு வருகிறது.

தவிர்க்கவியலா நிலையில் ஆங்கிலத்தோடு பிறமொழிச் சொற்கள் பயன்படுத்த நேரின் அச்சொற்களை சாய்வெழுத்தாகப் பயன்படுத்தும் முறை இன்றும் நடைமுறையில் ஆங்கிலத்தில் இருந்து

வருகிறது.

ஜெர்மன் மொழியில் ஃபிரெஞ்ச் மொழிச் சொற்களும் ஆங்கிலச் சொற்களும் கலப்பதால் ஜெர்மன் மொழியின் தனித்தன்மை வெகுவாக, பாதிக்கப்படுவதை உணர்ந்த ஜெர்மன் அரசே அவ்விரு மொழிச்சொற்களும் ஜெர்மன் மொழியில் கலப்பதை சட்டபூர்வமாகத் தடைசெய்துள்ளது. மீறுவோர் அபராதம் விதிப்பதன் மூலம் தண்டிக்கப்படுகின்றனர்.

அதே போனறு இங்கிலாந்தோடு இணைந்திருந்த அயர்லாந்தின் ஐரிஷ் மொழியில் ஆங்கில ஆட்சி காரணமாக நிறைய ஆங்கிலச் சொற்கள் கலக்கவே, ஆங்கிலத்தின் துணையின்றி ஐரிஷ் மொழியால் இயங்க முடியாது என்ற நிலை உருவாவதை அறவே விரும்பாத அயர்லாந்து மக்கள் மேற்கொண்ட கடும் போராட்டத்திற்குப் பிறகு ஆங்கிலம் கலவாத ஐரிஷ் மொழியை மீட்டெடுத்து, ஆங்கிலத்திற்கு இணையாக வழங்கும் நிலையை உருவாக்கியுள்ளனர். அதே போல, ரஷ்யமொழி, போலிஷ் மொழியில் கலக்க ஆரம்பிக்கவே, அதை ஆரம்பம் முதலே கடுமையாக எதிர்த்து போலிஷ் மொழியின் தனித்துவத்தைக் காத்தனர். அதே நிலையில் தூய துருக்கி மொழி இயக்கமும் இந்தியாவில் பாரசீக, அரபு, சம்ஸ்கிருத மொழிகளின் கூட்டிணைவால் உருவான, பிறவிக் கலப்பு மொழியான உருது மொழிகூட, தன் தனித்துவத்தைக் காக்கும் வகையில் தூய உருது மொழி இயக்கம் ஒன்று உருவாக்கப்பட்டு வலுவாக இயங்கி வருகிறது.

இதே நோக்கிலும் போக்கிலும் இந்து சமய அடிப்படையில் சம்ஸ்கிருதமும் பல்வேறு மொழி பேசிய ஆட்சியாளர்களின் ஆட்சித் தாக்கத்தால் அரபி, பாரசீகம் முதலாக தெலுங்கு ஈறாக ஆட்சி மொழிச் சொற்களும் தமிழில் கலந்து, தமிழின் தூய்மையை, தனித்தன்மையைப் பாழ்படுத்தி வந்தன. இன்றும் பாழ்படுத்தி வருகின்றன.

இதன் விளைவு என்ன?

பொருட்செறிவும் இலக்கியத் தரமும் கொண்ட தமிழ்ச் சொற்கள் பிறமொழிச் சொற்கலப்பால் காலப்போக்கில் செல்வாக்கிழந்து

மறைய நேர்கின்றன. இதனால் தமிழ்மொழி தன் தனித்துவத்தை இழக்கிறது. தமிழ்க் கலை, பண்பாடு, நாகரிகம் மாசுடையதாக மாற நேர்கின்றது. இவ்விழிநிலையைத் தடுத்துக் காப்பது தமிழனின் தலையாய கடமையாகும்.

இது, இலக்கியத் தமிழைப் பொறுத்தவரை இயலக்கூடியதேயாகும். ஆனால், காலத்தின் இன்றியமையாத் தேவையாக உருவெடுத்துள்ள அறிவியலைப் பொறுத்தவரை நம் நோக்கும் போக்கும் சற்று நெகிழ்ந்த நிலையில் செயலாக்கம் பெறுவது அவசியமாகும்.

இலக்கியப் படைப்பு என்பதில் உச்சநிலை பெறுவது உணர்வுப்பூர்வமான சிந்தனை. அதே சமயம் அறிவியலைப் பொறுத்தவரை உச்சநிலை பெறுவது அறிவுப்பூர்வமான சிந்தனை. அறிவியலைப் பொறுத்தமட்டில் உணர்ச்சிப் போக்குகளைக் காட்டிலும் அறிவுத் தெளிவுக்கே முதலிடம்.

எனவேதான் அறிவியல் தமிழைப் பொறுத்தவரை, அறிவியல் எழுத்தாளர்கள் இலக்கியவாணர்களைப் போன்று எழுத்திலக்கண விதிமுறைகளைப் பின்பற்றுவது அவசியமா? தமிழ் ஒலிப்பிலக்கணம் மட்டுமல்லாது, தமிழ்ச் சொல்லுக்கு முன்னால் வராத எழுத்து, பின்னால் வரக்கூடாத எழுத்து என்ற வரைமுறைகள் பின்பற்றப்படுவது அவசியமா? என்பன போன்ற கேள்விக் கணைகள் அடிக்கடி தொடுக்கப்படுகின்றன.

இதற்கெல்லாம் முத்தாய்ப்பான ஒரே பதில் இலக்கியப் படைப்பு முறையைக் கருத்திற்கொண்டு, எழுத்திலக்கண விதிமுறைகளை வகுத்தது போன்று, அறிவியல் கருத்துக்களைச் சிதைவில்லாமல் உள்ளதை உள்ளபடி உணர்த்தும் வகையில், அறிவியல் தமிழ் புத்திலக்கணம் ஒன்றை முழுமையாக நிறைவு செய்ய வழிவகுப்பதாயமையும்.

'அறிவியல் தமிழ்' என்பது இரு சொற்களின் இணைவாகும். இதில் முதல் நிலை பெறுவது 'அறிவியல்' ஆகும். எனவே, அறிவியல் தமிழைப் பொறுத்தவரை அறிவியலுக்கே முதன்மை நிலை. அந்த அறிவியலை எடுத்துச் சொல்லும் மொழி எனும் கருவியே தமிழ்.

எனவே, இங்கு தமிழுக்கு இரண்டாம் நிலையே அமைகிறது.

மேலை நாட்டினர் உருவாக்கிய அறிவியல் கண்டுபிடிப்புகளுக்கு அவர்தம் மொழியிலேயே பெயரிடப்பட்டு வழங்கப்படுகிறது. அவற்றை அறிய மட்டுமே நம் தமிழ்மொழி தற்போது பயன்படுத்தப்படுகிறது. அறிவியல் கண்டுபிடிப்புகளின் பெயர் முதல், அவற்றின் செயல்பாடுவரை அனைத்தையும் தமிழ்மொழிவழி அறியும்போதுதான் சில மொழிச்சிக்கல்கள் மேலோங்குகின்றன. அவற்றில் ஒன்று ஆங்கில அறிவியல் துறைப் பெயர்களை, கண்டுபிடிப்புகளுக்கான கலைச்சொற்களை ஒலிபெயர்ப்பாகச் சொல்ல விழைகிறபோது, கிரந்த எழுத்துக்களின் துணையின்றிச் செய்வது இடர்ப்பாடாக அமைகிறது.

சான்றாக, 'பிஸிக்ஸ்' என்பதை மொழிபெயர்ப்பாகச் சொல்லும்போது 'இயற்பியல்' என எளிதாகச் சொல்லி விடமுடியும். ஆனால் அப்பெயரை அப்படியே மொழிபெயர்க்காமல் ஒலிபெயர்ப்பாகச் சொல்லவேண்டுமானால் தொல்காப்பிய ஒலிப்பிலக்கணப்படி 'பிசுக்கிசு' என்று தான் எழுத வேண்டும். அவ்வாறே 'கெமிஸ்ட்ரி' என்பதை ஒலிபெயர்ப்பாக 'கெமிகட்ரி' என்றுதான் சொல்ல வேண்டும். ஆங்கில அறிவியல் சொற்களை இவ்வாறெல்லாம் சிதைப்பது சரியாகுமா? எனத் தெரியவில்லை. 'பங்கஜம்' எனும் சமஸ்கிருதப் பெயரை, தொல்காப்பிய ஒலிப்பிலக்கணப்படி 'பங்கயம்' எனக் கூறுவது இலக்கியத்திற்குச் சரியாகவும் சுவையாகவும் இருக்கலாம், ஆனால், அறிவியலுக்கு?

இச்சிக்கலை எளிதாகத் தீர்த்துவிட முடியும். 'ஸ்' எனும் கிரந்த எழுத்தைப் பயன்படுத்துவதன்மூலம் ஒலிச்சிதைவின்றி' கெமிஸ்ட்ரி', 'பிஸிக்ஸ்' என்றெல்லாம் ஒலிப்புச் சிதைவில்லாமல், உரிய ஒலிப்புடன் சொல்லமுடியும். இதற்குத் தடையாயமைவது என்ன?

சம்ஸ்கிருத எழுத்தாகிய கிரந்த எழுத்தைத் தமிழோடு இணைத்துப் பயன்படுத்தினால் தமிழின் தூய்மை கெட்டுவிடாதா? என்ற ஐயம் உரத்த குரலில் எழுப்பப்படுகிறது.

இதற்கான உரிய பதிலைப் பெறுவதற்குமுன் 'கிரந்த' எழுத்துக்கள் சம்ஸ்கிருத எழுத்துக்கள் தானா? என்பதை நாம் தெளிவுபடுத்திக் கொள்ள வேண்டும்.

'கிரந்தம்' என்றாலே 'நூல்' என்பது பொருளாகும். இந்து வைதிக சமயம் தமிழகத்தில் அழுந்தக் காலூன்றி நிலைத்து நின்ற காலத்தில் இந்து சமய வடமொழி வேதக் கருத்துக்களை உரிய சொல் வடிவோடு தமிழில் உச்சரிக்கவோ, எழுத்து வடிவில் பதிவு செய்யவோ, தமிழில் சம்ஸ்கிருத ஒலிவடிவ எழுத்துக்கள் இல்லாததால், அச்சொற்களின் பொருளாழத்தைத் துல்லியமாகத் தமிழில் உணர்த்தி, தமிழ் மக்களிடையே நிலைநிறுத்த இயலவில்லை. இதற்குத் தடையாக இருந்தது தமிழ் ஒலிப்பு முறையும் பிற மொழி எழுத்து, அல்லது சொல் ஒலிப்பைத் தமிழில் எவ்வாறு ஒலிப்பது என்பதற்கான ஒலிப்பிலக்கணமுமாகும். சம்ஸ்கிருத எழுத்துக்களின் துல்லியமான உச்சரிப்பு ஒலியை வெளிப்படுத்தக் கூடிய எழுத்து தமிழில் இல்லை. இவ்வாறு சில ஒலி இல்லாக் குறையை, இடர்ப்பாட்டை நீக்க மேற்கொள்ளப்பட்ட மொழியாய்வு இறுதியில் 'கிரந்த' எழுத்து உருவாக்கத்தில் போய் முடிந்தது. வடமொழி உச்சரிப்பைக் கூடுதல், குறைவின்றி உள்ளது உள்ளவாறே, துல்லியமாக ஒலிக்க வழியாயமைந்த எழுத்து வடிவமே 'கிரந்த எழுத்துக்கள்' கிரந்த எழுத்து வரி வடிவத்துக்கும் தேவநாகரி எழுத்து வடிவான சம்ஸ்கிருத மொழி எழுத்து வடிவுக்கும் எந்தத் தொடர்பும் அறவே இல்லை. கிரந்த எழுத்து வடிவம் தமிழ் வட்டெழுத்து வடிவ முறையை அடித்தளமாகக் கொண்டு தமிழ்ப் புலவர்களும் வடமொழி வித்வான்களும் கொண்ட வல்லுநர் குழுவால் காஞ்சி மாநகரில் ஏழாம் நூற்றாண்டில் உருவாக்கப்பட்ட, தமிழ் வட்டெழுத்து வடிவை அடிப்படையாகக் கொண்ட எழுத்து வடிவங்களாகும். ஆனால், புதிதாக உருவாக்கப்பட்ட இக்கிரந்த வடிவ எழுத்து முறையை தமிழ் முற்றாகப் புறக்கணித்துவிட்டது. இவ்வெழுத்து முறைகள் ஒருசில கோயில்களோடு நின்றுவிட்டன. இருப்பினும் ஜ, ஷ, ஸ, போன்ற ஒருசில எழுத்து வடிவங்களை பட்டும்படாமலும் வைத்துக்கொண்டுள்ளது. தமிழின் ஒலிக்குறைபாட்டை, காலத்திற்கேற்ப தேவைப்பட்ட ஒலிப்பை வெளிப்படுத்த, எப்போதாவது, தேவைப்படும்போது பயன்படுத்திக் கொள்ளும் நோக்கமே அதற்குக்

காரணம். இந்த கிரந்த எழுத்துக்களும் தமிழிலும் மலையாளத்திலும் மட்டும் பயன்படுத்தப்படுகிறதேயன்றி கன்னடம், தெலுங்கு உட்பட வேறு எந்த இந்திய மொழியிலும் பயன்படுத்தப்படுவதில்லை. சம்ஸ்கிருத தேவநாகரி எழுத்து வடிவ் முறைக்கும் கிரந்த எழுத்து வடிவ முறைக்கும் எந்தத் தொடர்பும் அறவே இல்லை. எனவே, அறிவியல் தமிழைப் பொறுத்தவரை இடப்பெயர் போன்றவற்றைச் சுட்டும் வகையில் பிறமொழிச் சொற்களை ஒலிக்குறைபாடின்றி உள்ளது உள்ளபடி ஒலிப்பை முழுமையாகப் பெறும் வகையில் பயன்படுத்துவதில் எந்தத் தவறும் இல்லை. கிரந்த எழுத்துக்களைப் பயன்படுத்திக் கொள்வதன் மூலம் அச்சொல் முழுமையாகப் பொருள் உணர்த்துவதோடு, இன்றைய நிலையில் பெருங்குறையாயமைந்துள்ள தமிழின் ஒலிக்குறைபாட்டை முற்றாக நீக்கிய மனநிறைவும் நமக்கேற்படும்.

இடப்பெயர், பொருட்பெயர் என்ற வரையறை இல்லாது கிரந்த எழுத்துக்களைத் தாராளமாகக் கையாண்டதன் விளைவாக ஓரளவு ஒலிக்குறைபாடு நீங்கிய போதிலும் ஏராளமான தமிழ்ச் சொற்கள் கொஞ்சங்கொஞ்சமாக வழக்கிழந்து மறைய நேர்ந்தது என்பதை மறுக்கவோ, எளிதில் மறைக்கவோ, முடியாது. தமிழ்ச் சொற்களுக்கு இணையான சம்ஸ்கிருதச் சொற்கள் கிரந்த எழுத்தின் உறுதுணையோடு சரியான உச்சரிப்புடன் வெளிப்பட்டபோது, பக்தியின் காரணமாக தேவமொழியான அச்சொற்களை ஏற்றுப் பயன்படுத்தினால், இறையருள் எளிதாகக் கிடைக்கும் என்ற நினைப்பில், மூலத் தமிழ்ச் சொல்லை மறந்து, அதையொட்டிய சம்ஸ்கிருதச் சொல்லை, கிரந்த எழுத்தொலியோடு ஏற்று, போற்றினான் தமிழன். 'மலர்' எனும் சொல்லை விடுத்து, பக்தியுணர்வு பொங்க 'புஷ்ப' அஞ்சலி செலுத்துவதிலே பக்திப் பரவசம் கொண்டான். இன்றையச் சூழலில் அதே தமிழன் தமிழ்ப் பற்றுமிக்கவனாகத் தன்னைக் காட்டிக் கொள்ளும் பாங்கில் 'புட்பம்' எனக்கூறி மகிழ முற்பட்டான். இங்கு அவன் நோக்கம் தன் மொழிப்பற்றை வெளிச்சமிடுவதாகும். இதனால் 'மலர்' இன்னும் அவன் நினைவில் முழுமையாக நிழலாடவில்லையோ எனத் தோன்றுகிறது. மறைமலையடிகளார், தமிழ்த் தென்றல் திரு.வி.க. தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா போன்றோரின் முனைப்பினால் சம்ஸ்கிருதச் சொற்கள் அன்றாட வாழ்விலிருந்து ஓரளவு விடை பெறவும்

நல்ல தமிழ்ச் சொற்கள், தனித்தமிழ்ச் சொற்கள் வெளிப்படலும் ஏதுவாயின.

தமிழ்ப்பற்று ஒரு காலகட்டத்தில் காட்டாற்று வெள்ளமெனப் பொங்கிப் பொழிந்தது. அத்தமிழுணர்வு திட்டமிட்ட நிலையில், முறைப்படுத்தாமையினால் அவ்வுணர்வு இந்தி எதிர்ப்புணர்வாகத் திசை திருப்பப்பட்டது. இந்தி மொழித் திணிப்பிலிருந்து தமிழைக் காக்கப் பாதுகாப்பு வேலியாக ஆங்கிலத்தைக் கருதினார்கள். தமிழ் எனும் பயிரைக் காக்கும் முயற்சி என்ற முறையில் ஆங்கில வேலிமீது காட்டிய அக்கறையில் ஒருசிறு பங்குகூட, காக்க வேண்டிய தமிழ்ப் பயிரின் வளர்ச்சியில் காட்டாததால் தமிழ்ப் பயிர் வாடி, வதங்கி அழிவை நோக்கிச் செல்ல நேரிட்டது. இதற்கு வழியமைக்கும் வகையில் தமிழை 'தமிங்கிலம்' ஆக்க செய்தித்துறை ஊடகங்களிடையே கடுமையான போட்டி, இத்தகைய இடர்ப்பாடான நிலையில் அனைத்துமட்ட அரும்கவனிப்பால் தழைத்தோங்கும் ஆங்கிலம் 'வேலியே பயிரை மேய்ந்தது' என்ற பழமொழிக்கு இலக்கியமாகவும் இலக்கணமாகவும் ஆனதோடு, காக்க வேண்டிய தமிழ்மீது ஆதிக்கம் செலுத்தும் மொழியாகவும் ஆங்கிலம் தன்னை ஆக்கிக் கொண்டது.

இனி அறிவியல் தமிழுக்கு வருவோம். அறிவியலைப் பொறுத்தவரை ஆங்கிலம் அதன் மூல மொழியாக நம்மைப் பொறுத்தமட்டில் அமைந்திருப்பதால் ஆங்கிலத்தின் மூலமே அறிவியலைத் திட்பநுட்பமாக அறியவியலும் என்ற உள்ளுணர்வு எல்லா மட்டத்திலும் ஆழ வேரூன்றிய நிலையில், தாய்மொழித் தமிழ் தடுமாற்றத்திற்காளாகும் நிலை உருவாகியுள்ளதாகக் கருதும் நிலை ஏற்பட்டுள்ளது.

உண்மையில், இது தமிழனுக்கு ஏற்பட்ட தடுமாற்றமே தவிர, தமிழுக்கு ஏற்பட்டதல்ல. ஆற்றல்மிக்க அறிவியல் மொழியாக மூவாயிரம் ஆண்டுகட்கு முன்பே முகிழ்த்தெழுந்த தமிழின் ஆணிவேர் அறிவியல் தமிழாகும். அறிவியல் தமிழ்தான் தமிழின் முதல் தமிழ், மூத்த தமிழ்.

'எந்த மொழியாக இருந்தாலும் காலத்தின் போக்குக்கும் தேவைக்கும் ஏற்பத் தன்னைத் தகவமைத்துக்கொள்ளும் தன்மையுள்ள மொழியே என்றென்றுமாக வாழும் பெற்றியினைப் பெறமுடியும்' என்ற மொழியியல் கோட்பாட்டிற்கிணங்க, சமயத்தாக்கம் ஏதும் இல்லாத சங்கத்துக்கு முந்தைய காலத்தில் அறிவியல் தமிழாகவும், சங்கத் தமிழ் சமுதாயத் தமிழாகவும், வைதிக சமயம் தமிழகத்தில் அழுந்தக் காலூன்றிய காலத்தில் சைவத் தமிழாகவும் வைணவத் தமிழாகவும் வைதிக சமயத்தை எதிர்த்து சமணம் வந்தபின், சமணத் தமிழாகவும், சமணத்தை எதிர்த்து பௌத்தம் வந்தபோது பௌத்தத் தமிழாகவும் பின்னர் வெளிநாட்டிலிருந்து கிருஸ்தவம் வந்த பின்னர் கிருத்துவத் தமிழாகவும் இஸ்லாம் வந்தபின் இசுலாமியத் தமிழாகவும் ஆங்கிலேயர் வரவால் சிறுகதை, புதினம், திறனாய்வு முதலானவை கொண்ட புதுமைத் தமிழாகவும் தன்னை உருமாற்றிக் கொள்ளத் தமிழ் தயங்கியதே இல்லை.

அதே வேளையில் அறிவியலின் துணையின்றி அரைசென்டிமீட்டர் வாழ்வைக்கூட நகர்த்த முடியாத இன்றைய அறிவியல் காலகட்டத்திற்கு ஈடு கொடுக்கும் முறையில் அறிவியல் தமிழாக வளர வேண்டியது, வளர்த்தெடுக்க வேண்டியது ஒருவகைக் காலக்கட்டாயம் ஆகும். அதற்கேற்பத் தமிழ் அறிவியல் தமிழாக உருமாறத் தலைப்பட்டு இன்று சீரும் சிறப்புமாக வளர முனைந்துள்ளது.

வேறு எந்த இந்திய மொழியிலும் இல்லாத அளவுக்கு எட்டு அறிவியல், தொழில்நுட்ப, மருத்துவக் களஞ்சிய அகராதிகள் தமிழில் வெளிவந்துள்ளன. அவற்றில் மூன்றேமுக்கால் இலட்சம் புதிய கலைச் சொற்கள் இடம் பெற்றுள்ளன. அறிவியல் தமிழுக்கான முதல் தேவை, அதில் அதிக அளவில் பயன்படுத்தப்படும் கலைச்சொற்களாகும். இக்கலைச் சொல் உருவாக்கத்துக்கு அடிப்படையாக அமையவல்லவை வேர்ச்சொற்களாகும். 'உலகத்து மொழிகளிலேயே மிக அதிகமான வேர்ச் சொற்களையுடைய மொழி தமிழ்' என்றார் மொழியியல் தந்தை எனப் போற்றப்படும் டாக்டர் எமினோ அவர்கள்.

இன்று, துறைசார் நண்பர்களோடு இணைந்து ஆறரை இலட்சம் கலைச் சொற்களை ஐம்பது ஆண்டுகளில் உருவாக்க முடிந்ததென்றால்

அதற்கு எங்கள் திறமை மட்டுமே காரணம் இல்லை. தேவைப்பட்ட வேர்ச்சொற்கள் தமிழில் எளிதாகக் கிடைத்ததேயாகும். எப்படிப்பட்ட அறிவியல் நுட்பச் செய்திகளையும் தமிழில் திட்ப, நுட்பமாக, பொருட்செறிவுடன் கூற முடியும். சான்றாக, ஜீனோம் (Genome) என்பது அண்மையில் உருவாக்கப்பட்ட அறிவியல் கலைச் சொல்லாகும். ஒரு மரபு வழிப்பட்ட உயிரணுவிலிருந்து ஓர் உயிரையே முழு உருவுடன் பரிணமிக்க வைக்கும் அறிவியல் வழிமுறையே 'ஜீனோம்' என ஆங்கிலத்தில் அழைக்கப்படுகிறது. இதைத் தமிழில் 'மரபு உயிர்மம்' என்று கூறலாம். இதனைக் 'குளோனிங்' (Cloning) முறை என்றும் கூறுவர். இதனைத் தமிழில் 'படியாக்கம்' எனக் கூறலாம். இவ்வாறு அறிவியல், தொழில்நுட்ப, மருத்துவக் கலைச் சொற்கள் எதனையும் தமிழில் உருவாக்க முடியும் என்பது ஐம்பதாண்டு கால அறிவியல் கலைச் சொல்லாக்கப் பணி மூலம் காண்பிக்கப்பட்டுள்ளது.

இன்னும் சொல்லப்போனால் ஆங்கிலத்தைவிட திட்ப, நுட்பமாகத் தமிழில் எந்தக் கலைச்சொல்லையும் உருவாக்கிச் சொல்ல முடியும். ஏனெனில், தமிழ் அடிப்படையில் ஓர் அறிவியல் மொழியாக, அறிவியலைச் சொல்வதற்கென்றே உருவான மொழியாக அமைந்திருப்பதுதான்.

கிரந்த எழுத்துக்களின் துணைகொண்டு இடப்பெயர், பொருட்பெயர்களைச் சுட்டத் தயங்க வேண்டியதில்லை. மேலும் கிரந்த எழுத்துக்களின் துணையோடு ஆங்கிலக் கலைச்சொற்களை ஒலிபெயர்ப்பாகச் சொல்லுவதைவிட தமிழில் உருவான கலைச்சொற்களோடு கூறுவதே எல்லா வகையிலும் பொருத்தமுடையதாகும். மற்றபடி எந்தச் சொல்லுக்கும் கிரந்த எழுத்தைப் பயன்படுத்துவதைத் தவிர்ப்பது நல்லது. ஏனெனில், இயன்றளவு மொழித்தூய்மை காப்பது நம் அடையாளமான பண்பாட்டையும் நாகரிகத்தையும் கட்டிக் காப்பதற்கொப்பதாகும்.



# 1. மொழியியல் நோக்கு : மொழித்தூய்மை

முனைவர். மா. நயினார்
இணைப் பேராசிரியர்,
தமிழ்த்துறை,
பல்கலைக்கழகக் கல்லூரி,
திருவனந்தபுரம்.

மொழி:

மனிதகுலத்தின் மிகப்பெரிய கண்டுபிடிப்புகளில் ஒன்று மொழி. மனிதனைப் பிற உயிரினங்களிடமிருந்து வேறுபடுத்திக் காட்டும் அவனது ஆறாவது அறிவின் வளர்ச்சியும் வெளிப்பாடும் மொழியின் அடிப்படையில்தான் இயங்குகின்றன. மனிதன் தன்னையும் தன் தேவைகளையும் பிறருக்கு உணர்த்த நினைத்ததன் விளைவாக உருக்கொண்டதே மொழி. மொழி கருவாகி - உயிர்ப்பெற்று எத்தனையோ நூற்றாண்டுகளைத் தாண்டித்தான் இன்றைய நிலையை அடைந்திருக்க வேண்டும். மொழியின் தோற்றம் குறித்த கொள்கைகள் பலவாகும். சைகை மொழியிலிருந்து வாய்மொழியாகவும், வாய்மொழியிலிருந்து வரைமொழியாகவும் வளர்ச்சிபெற்றுதான் மொழியமைப்பு என்ற கொள்கை பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. நதிமூலம் ரிஷிமூலத்தை அறிய முயற்சிப்பதைப் போன்றதுதான் மொழிமூலத்தை அறிய முனைவதும் எனலாம்.

பல்வேறு இனம் சார்ந்த-இடம் சார்ந்த மக்களின் பண்படாத மொழிக்கூறுகளின் ஒரு கூட்டமைப்பில் ஒரு பொதுமொழியே பின்னர் இடத்திற்கும் இனத்திற்கும் ஏற்றவாறு கிளைமொழிகளாக வேறுபட்டுத் தனித்தனிமொழிகளாக மாறியிருக்கலாம். இது எந்த ஒரு மொழியாக இருந்தாலும் அம்மொழியின் இயல்பு என்றே கூறவேண்டும். மூலத்திராவிட ஆதிமொழியிலிருந்து கன்னடம், தெலுங்கு, மலையாளம் போன்ற மொழிகள் இவ்வாறே தோன்றின. குறிப்பிட்ட ஒரு பகுதியில் நெடுநாள் தங்கி நிலையாக வாழாமல் நாடோடிகளாக வாழ்ந்து திரிந்த மனிதன் ஓரிடத்தில் நிலையாக வாழத்தொடங்கியபோது குடும்பம் உருவானது; குடும்பங்கள் சமூகமாக மாறியது. சமூக வாழ்க்கையே

மனிதகுலத்தின் பண்பட்ட வாழ்க்கைக்கு வித்திட்டது. பண்பாடு அவனது வாழ்க்கையில் மட்டுமல்ல அவன் வழங்கிய மொழியிலும் ஓர் ஒழுங்கமைப்பை ஏற்படுத்தியது. வாழ்வியல் மேம்பாட்டால் மொழி பண்பட்டது: பண்பட்ட மொழியால் வாழ்க்கை மேம்பட்டது. மனிதனால் மொழி உருவானது: மொழியால் மனிதன் உருவமைக்கப்பட்டான். இன்று மொழியும் வாழ்க்கையும் இரண்டறக்கலந்த ஒன்றாகவே மாறிவிட்டது. இந்நிலையில் மொழியை, மனிதன் என்னும் கணினியின் செயல்பாட்டிற்கான மென்பொருள் என்றே கூறலாம்.

'மொழி கருத்துப் பரிமாற்றத்திற்கான ஒரு கருவி மட்டுமே' என்ற எண்ணம் நீண்ட காலமாகவே நிலைபெற்று வருகின்றது. இது மொழியின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் பண்பாட்டையும் சரிவரப் புரிந்து கொள்ளாதவர்களின் - எதையும் ஆக்கப்பூர்வமாகவும் அறிவியல்பூர்வமாகவும் பார்க்கத் தெரியாதவர்களின்-எந்த ஒன்றையும் அதிக ஈடுபாட்டோடு அணுகத் தெரியாதவர்களின் சிந்தையில் பிறந்த தவறான எண்ணம் என்றே சொல்ல வேண்டும். இத் தவறான எண்ணமே ஒரு மொழி சீர்குலைந்து போவதற்கும், அது தன் தனித் தன்மையை இழப்பதற்கும் காரணம் ஆகின்றது. மொழி கருத்துப் பரிமாற்றத்திற்கான வெறும் ஒரு கருவி மட்டுமல்ல: அதற்கும் ஓர் ஆன்மா உண்டு. மொழியின் பல்வேறு பண்புகளிலும் பயன்பாடுகளிலும் ஒன்று மட்டுமே கருத்துப்பரிமாற்றம்.

"வாழ்வின் சகலத்துடனும் மனிதன் மொழி வழியே உறவு கொள்ளுகிறான். மொழியின் அமைப்பே பிரபஞ்ச அமைப்பு என்பர். மொழி மனிதனின் சிந்தனையுடன் சகவாழ்வு கொண்டது. அவனுடைய இருப்பை உருவாக்கம் செய்கின்றது. அவனுக்குள் பிடிகொள்ளுகிற கருத்துக்கள், கருத்தியல்கள் எல்லாம் அப்படியே மூளையில் போய் ஒட்டுவதில்லை. குறியீடுகளாக, மொழிவழியாக இது நிகழ்கிறது. மனித உருவாக்கம் என்பதே மொழியின் உருவாக்கத்தால்தான் நடைபெறும்"[1] என்பதை உணர்ந்தாக வேண்டும்.

மொழி, வளர்ச்சியடைந்து இலக்கிய வளமும் பெற்று ஒரு நிலையை எட்டும்போது, அதற்கு ஒரு கட்டுப்பாட்டு விதி அமைத்தாக வேண்டும். இல்லையென்றால் வளர்ச்சி என்ற பெயரில் அது திசைமாறிச் சென்றுவிடும். காலந்தோறும் தோன்றிய மொழி-இலக்கிய வல்லுநர்கள் மொழிக்குக் கரை கட்டுவாரானார்கள். அவர்களே இலக்கண மேதைகள்.

ஆற்றுவெள்ளம் பெருக்கெடுக்கும் போது கரைகள் இடிந்து அகலப்படலாம். மொழி வளர்ச்சியடையும்போதும் அதன் கட்டுப்பாடுகளில் சில மாற்றங்கள் ஏற்படலாம். இது காலத்தால் தவிர்க்க முடியாத ஒன்று. தொல்காப்பியத்திற்குப்பின் நன்னூல் முதலான இலக்கணங்கள் தோன்றுவதற்கு இதுதானே காரணம்.

ஒரு மொழிக்கு ஓர் இலக்கணம் தோன்றும் வரையிலும் அது எழுதப்படாத ஒரு சுய கட்டுப்பாட்டிற்குள் இயங்கியிருத்தல் வேண்டும். இதனால் பல சூழ்நிலைகளிலும் அம்மொழியானது கட்டுப்பாடுகளுக்கும் வரையறைகளுக்கும் உட்படாமல் பலராலும் பலநிலைகளிலும் வழங்கப்பட்டிருக்கலாம். ஆயின் இலக்கணம் ஒன்று எழுதப்பட்டு அது சான்றோர்களின் அங்கீகாரத்தையும் பொதுமக்களின் ஒப்புதலையும் பெற்றுவிட்டால், அவ்விலக்கணம் வகுக்கும் மொழிக் கட்டுப்பாடுகளுக்கு அனைவரும் உட்பட்டுத்தான் ஆகவேண்டும். ஒரு மொழியின் நிலைபேற்றிற்கு அது மிகவும் தேவை. மாறுதல் என்பது காலத்தின் கட்டாயமாக நிகழ்ந்து கொள்ளும். அதுவும் விதி முறைகளுக்கு உட்படுத்தியே ஏற்றுக் கொள்ளப்படும். "ஒரு மொழி தன் வரம்புகளை, இயன்ற மட்டிலும் தூய்மையாய்ப் பேணாவிட்டால் வழக்கிழந்து அழிந்து திரிந்து போகிற அபாயம் இருக்கிறது"[2] எவ்வாறு உயிர் நிலைபெற உடல் தூய்மையும், அறம் நிலைபெற உள்ளத் தூய்மையும் தேவைப்படுகின்றதோ அதைப்போன்றே ஒரு மொழி நிலைபெற வேண்டுமானால் மொழித்தூய்மையும் இன்றியமையாததாகின்றது.

வடமொழிக்கலப்பு:

ஒரு மொழியின் தூய்மை கெடுவதற்குக் காரணங்கள் பல இருந்தாலும் அவற்றுள் முக்கியமானது பிறமொழிக் கலப்புத்தான். நமக்குத் தெரிந்தவரை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே, அதாவது சங்க காலந்தொட்டே வடமொழிச் சொற்கள் தமிழில் கலக்கத் தொடங்கிவிட்டன. ஆற்றல்மிக்க ஆரியர்களின் வருகையும் அரசவை வரை அவர்களுக்கிருந்த செல்வாக்குமே இதற்குக் காரணம். சங்க காலத்திலேயே வடமொழி ஊடுருவல் ஆரம்பித்துவிட்டது என்பதற்குத் தமிழுக்குக் கிடைத்துள்ள முதல் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தில் இடம் பெறும்

'வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே'

என்னும் நூற்பா சான்றாக அமைகின்றது. அளவுகடந்த வடமொழி ஊடுருவலைத் தவிர்ப்பதற்கே தொல்காப்பியனார் இந்நூற்பாவை அமைத்தார்.

ஒரு மொழி வளர்ச்சியடைவது பரிணாம வளர்ச்சியாலும் கடன் வாங்குவதாலும்தான் என வரலாற்று மொழியியல் அறிஞர்கள் பலர் குறிப்பிட்டுள்ளனர்.

"ஒரு மொழி மற்றொரு மொழியுடன் தொடர்பு கொள்ளும் போது, ஒரு மொழியிலுள்ள சொற்கள் மற்றொரு மொழியில் கலத்தல் இயல்பாகும். மொழித்தொடர்பு என்பது மொழிவரலாற்றில் தவிர்க்க முடியாத ஒன்றாகும். 'கடன் வாங்கப்பட்ட சொற்கள் (Borrowed words) இல்லாத மொழியே பெரும்பாலும் இல்லை. ஏனென்றால் எந்த நாடும் தனித்து வாழ முடியாது. மற்ற நாட்டுடன் தொடர்பு கொள்ளும் போது மொழித் தொடர்புக்கு வழிகோலுகிறது' என மொழியியல் பேரறிஞர் ஆட்டோ யெஸ்பர்சன் கூறுவது இங்குக் குறிப்பிடத்தக்கது"[3]

ஒரு மொழி பிறமொழிகளிலிருந்து சொற்களைப் பெற்றுக் கொள்வதைக் கடன்வாங்கல் (Borrowed words) என்கின்றோம். சொற்களைத் தரும் மொழியை 'Donar language' என்றும், சொற்களைப் பெறும் மொழியை 'Borrowing language" என்றும் கூறுகின்றனர். "வேற்று மொழிச் செல்வாக்கால் சொந்த மொழியில் சொற்களை இடம்பெயர்த்து அமைத்துக் கொள்வதை மொழியியலார் 'Loan shift' எனக் கூறுவர் (விமானம்-வானவூர்தி). பிறமொழிகளிலே சில சொற்றொடர்கள் குறிக்கும் கருத்தைச் சொந்த மொழியிலுள்ள சில சொற்களைக் கூட்டிச் சொற்றொடராக்கி அதே கருத்தை வெளிப்படுத்தும் முயற்சியும் மொழியிலே நடைபெறுவதுண்டு. அருவி என்ற சொல் தமிழிலே இருப்பினும் 'Water falls' என்ற சொல்லுக்கீடாக 'நீர் வீழ்ச்சி' என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றோம். இதனை மொழியியலாளர் 'Loan translation' என்பர். பிறமொழிச் சொல்லின் ஒரு பகுதியை மட்டும் பெற்றுச் சொந்தமொழிச் சொல் ஒன்றின் பகுதியோடு ஒட்டி, ஒட்டிய இருபகுதிகளையும் ஒரு சொல்லாகப் பயன்படுத்துவது உண்டு

(தச நான்கு), மொழியியலார் இதனைக் கலப்புக்கடன் (Loan Blend) என்பர்."[4]

தமிழகம் அவ்வப்போது பல்வேறு ஆட்சியாளர்களின் ஆதிக்கத்திற்கே உட்பட்டிருந்த காரணத்தால் இந்தி, மராத்தி, போர்ச்சுகீஸ், டச்சு, பிரெஞ்சு, ஆங்கிலம் போன்ற மொழிகளைச் சார்ந்த சொற்கள் தமிழில் கலந்தன. மேலும் கருநாடகம், ஆந்திரம், கேரளம் ஆகிய மாநிலங்களை எல்லைப் பகுதிகளாகக் கொண்டிருப்பதால் கன்னடம், தெலுங்கு, மலையாளச் சொற்களும் சிறிய அளவில் தமிழுக்கு வந்து சேர்ந்தன. இவை தவிர சிங்களம், சீனம், அரேபியம், பாரசீகம் ஆகிய மொழிச் சொற்களும் தமிழில் கலந்தன.

ஆங்கிலக் கலப்பு:

இன்று அளவுக்கு அதிகமாக ஆங்கிலச் சொற்கள் தமிழில் வந்து கலக்கின்றன. பெரும்பாலும் ஊடகங்களின் வழியாகத்தான் வந்து சேர்கின்றன. ஆட்சித்துறையிலும், கல்வித்துறையிலும் ஓரளவுக்குத் தூய தமிழைப் பயன்படுத்தத் தொடங்கிவிட்டோம் என்றாலும் மக்கட் தொடர்புச் சாதனங்கள் மொழிநிலையில் பாமரமக்களைத் திசை திருப்பிக் கொண்டு செல்கின்றன. அன்று வடமொழி பெற்றிருந்த இடத்தை இன்று ஆங்கிலம் பெற்றுள்ளது.

ஆங்கிலம் இன்று ஆட்சிமொழி, நீதிமொழி, கல்விமொழி, அறிவுமொழி அனைத்துமாக விளங்குகிறது. இதில் வல்லவர்கள் எல்லா வலிமையும் வாய்ந்தவர்கள். தமிழோ வெறும் இலக்கிய மொழி, பேச்சு மொழி, அதை மட்டும் பேசுபவர்கள் ஏழைகள்: அதிகார வலிமையோ அறிவு வலிமையோ இல்லாதவர்கள். இவ்வாறு நினைக்கின்றான் சராசரித் தமிழன். 'ஆங்கிலத்தில் பேசுவதால் மட்டுமே மதிப்பும் மரியாதையும் பெறமுடியும்: ஆங்கிலம் கலந்து பேசுவதுதான் நனி நாகரிகம்.' இதுபோன்ற தவறான எண்ணங்கள் படித்தவர்கள் மத்தியில் மட்டுமன்றி பாமரமக்களிடையேயும் பரவலாகிவிட்டன. "தான் பேசும் தமிழைவிட வேறுமொழி தனக்கு முன்னேற்றத்தையும் தகுதியையும் தருவதாகத் தோன்றும் போது அதைப் பிடித்துக்கொள்ளத் தமிழன் முயலும் முயற்சியின் வெளிப்பாடுதான் இன்றைய ஆங்கில மோகம்"[5] என்கிறார் முனைவர் கி. நாச்சிமுத்து அவர்கள்.

கடன் வாங்கல்:

தர்மத்தின் மொழி, தத்துவச் சிந்தனைகளின் மொழி, இசையின் மொழி, இலக்கியத்தின் மொழி, பக்தியின் மொழி, பாசத்தின் மொழி, காதலின் மொழி, வணிகத்தின் மொழி என்றெல்லாம் சில மொழிகளுக்கு நாம் அடை கொடுத்துவிட்டோம். இதனால் அந்தந்தத் துறைகளைப்பற்றிச் சிந்திக்கும்போது அந்தந்த மொழிகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து அந்தந்த மொழித் தொடர்களையே பயன்படுத்துகின்றோம். ஒரு மொழியில் பிறமொழிச் சொற்கள் கலப்பதற்கான முக்கிய காரணங்களுள் இதுவும் ஒன்று. "ஒரு துறையில் ஒரு மொழி சிறப்புப் பெற்றிருந்தால் அத்துறையைக் கற்கும் போது அம்மொழிச் சொற்களைக் கடன் வாங்குகின்றோம்"[6]. ஆனால் பக்தியையும் பரவசத்தையும் காதலையும் தத்துவத்தையும் அறிவியலையும் வெளிப்படுத்தும் ஆற்றல் பண்பட்ட எல்லா மொழிகளுக்கும் உண்டு என்பதுதான் உண்மை, பிறமொழிக் கலப்பு குறித்து, குறிப்பாக வடமொழிக் கலப்பு குறித்தும், அவ்வாறு கலப்பதற்காகக் கூறப்பட்ட காரணங்கள் குறித்தும் தமிழ்ச் சான்றோர்கள் பண்டுதொட்டே சில கருத்துக்களைக் கொண்டிருந்தனர்.

சிலவற்றைச் சில சூழ்நிலைகளில் வெளிப்படுத்துவதற்கான சொற்கள் தமிழில் இல்லை என்பதால் அத்தகைய சூழ்நிலைகளில் பிறமொழிச் சொற்களைக் கடன்வாங்கும் கட்டாயம் ஏற்படுவதாகச் சிலர் கூறி வைத்தனர். ஆனால் எதையும் எந்தச் சூழ்நிலையிலும் வெளிப்படுத்தும் ஆற்றல் தமிழுக்கு உண்டு என்பது இப்போது நிறுவப்பட்டுவிட்டது. தமிழின் சிறப்புப் பற்றியும் ஆற்றல் பற்றியும் வி.கோ. சூரிய நாராயண சாஸ்திரியார் அவர்கள் பதிவு செய்திருக்கும் கருத்துக்களையும் இங்குச் சுட்டிக் காட்டியாக வேண்டும்.

"வடமொழி, இலத்தீன், கிரீக்கு முதலியன போலத் தமிழ் மொழியும் 'உயர் தனிச் செம்மொழி' யாமாறு சிறிது காட்டுவாம். தான் வழங்கும் நாட்டின் கணுள்ள பலமொழிகட்குத் தலைமையும் அவற்றினும் மிக்க மேதகுவுடைமையுமுள்ள மொழியே உயர்மொழி. தெலுங்கு முதலியவற்றிற்கெல்லாம் தலைமையும் அவற்றினும் மிக்க மேதகவும் உடைமையால் தமிழ் உயர் மொழியே யென்க."

"திருந்திய பண்புஞ் சீர்த்த நாகரிகமும், பொருந்திய தூய்மொழி

புகல் செம்மொழியாம்' என்பது இலக்கணம். இம் மொழிநூலிலக்கணம் தமிழ்மொழியின் கண்ணும் அமைந்திருத்தல் தேற்றம். கருதிய பொருளைக் கேட்டான் தெள்ளிதினுணர வல்லதாய்ப் பழையன கழிந்து புதியன புகுந்து திருத்தமெய்தி நிற்றலே திருந்திய பண்பெனப்படுவது. இது தமிழ்மொழியின்கண் முற்றும் அமைந்திருத்தல் காண்க. நாட்டின் நாகரிக முயற்சிக்கேற்பச் சொற்களும் ஏற்பட்டு மொழிக்கும் நாகரிக நலம் விளைவித்தல் வேண்டும். அவ்வாறு சொற்களேற்படுமிடத்துப் பிறமொழிச் சொற்களின்றித் தன் சொற்களே மிகுதல் வேண்டும். இவையும் தமிழ் மொழிக்குப் பொருந்துவனவாம். ஆகவே தமிழ் தூயமொழியுமாம். எனவே தமிழ் செம்மொழி யென்பது திண்ணம்"[7] என்னும் சாஸ்திரியாரின் கருத்துக்கள் கோடிட்டுக் காட்டப்பட வேண்டியவை. இவ்வாறு தமிழ் உயர்மொழி, தனிமொழி, செம்மொழி என்பதற்கான விளக்கத்தைத் தமது 'தமிழ் மொழியின் வரலாறு' என்ற நூலில் எழுதிவைத்துள்ளார் சாஸ்திரியார். ஒருமொழி வாழவேண்டுமாயின் - வளர வேண்டுமாயின் - வளம்பெற வேண்டுமாயின் அது பிறமொழிச் சொற்களைக் கடன்வாங்க இடங்கொடுக்க வேண்டும் என்ற கருத்து அன்றுதொட்டே இருந்து வருகின்றது. ஒரு மொழியில் அமைந்த அகராதியின் கனம் நாளுக்குநாள் அதிகரித்துக்கொண்டே செல்லவேண்டும் என்றும், அதுதான் ஒரு மொழி வளர்கின்றது என்பதற்கான அறிகுறியென்றும் சிலர் கருத்துத் தெரிவிக்கின்றனர். அகராதிகளின் பக்கங்கள் பெருகுவதில் தவறில்லைதான். ஆனால் அந்தப் பெருக்கம் அன்னியச் சொற்களின் ஆக்கிரமிப்பால் நிகழ்ந்துவிடக் கூடாது என்பதில் எச்சரிக்கை தேவை.

"ஒரு மொழி கடன் தர வேறொரு மொழி கடன் ஏற்று மொழிக்கலப்பு உண்டாகிறது. மொழிகளைப் பொறுத்தமட்டில் பெற்ற கடனைத் திருப்பிக் கொடுக்கும் பொறுப்பும் இல்லை. கடன் கொடுக்கும் மொழி கடன் கொடுப்பதால் இழப்பதற்கு ஒன்றுமில்லை. ஆனால் இடம் பெறும் மொழி சிறிது மாற்றம் அடைவதுண்டு. மொழிக்கலப்புக்கு கௌரவ நோக்கமும் (Prestige motive) நிறைவுபடுத்த விரும்பும் மனப்பான்மையும் (need filling motive) காரணமாகும்"[8] எனும் புதிய மொழியியல் சித்தாந்தம் உருவெடுத்துள்ளது.

பிறமொழிச் சொற்களை நீக்கித் தமிழைத் தூய்மைப்படுத்தும் முயற்சி எழுந்தபோது, சில சொற்கள் பிறமொழிச் சொற்களாக

இருந்தாலும் அவை தமிழ்மக்களின் இதயத்தில் பதிந்து இரத்தத்தோடு கலந்து விட்டதால் அவற்றைத் திடீரென மாற்ற நினைப்பது இயலாதது என்ற நியாயத்தைச் சிலர் முன்வைத்தனர். ஆனால் காலம் அவர்களது நியாயங்களை அநியாயங்களாக்கிவிட்டன. பேருந்துநிலையம், பணிமனை, ஆட்சியர் அலுவலகம், வாரியம், தொகுப்புவீடு, அகவிலைப்படி, நீதிமன்றம் போன்று எத்தனையோ சொற்கள் 'ஊறித்திளைத்த' சொற்களை வெளியேற்றிவிட்டு உள்ளத்துக்குள் புகுந்துவிட்டதை நாம் கண்டுள்ளோம். உழைப்பும் ஆர்வமும் பொறுமையும் இருந்தால் எதையும் சாதிக்க முடியும்.

மொழித் தூய்மையைப்பற்றிப் பேசும்போது அது அன்னிய மொழிகளுக்கு எதிரான ஒரு கலகக் குரலாகச் சிலர் பிரச்சாரம் செய்கின்றனர். உண்மை அதுவல்ல. "நாம் வணங்கும் கடவுளை எம் தாய்மொழியில் தொழவேண்டுமென்றால் அது வடமொழிக்கு எதிராகின்றது. எம் தாய்மொழியில் எமக்குப் பொருள் புரியும் இசை வேண்டுமென்றால் அது தெலுங்குக்கு எதிராகிறது. எம் தாய்மொழியில் மாநிலத்தில் ஆட்சி நடைபெற வேண்டுமென்றால் அது இந்திக்கு எதிராகிறது. எம் தாய்மொழியில் கல்வி வேண்டுமென்றால் அது ஆங்கிலத்திற்கு எதிர் என்கிறார்கள்."[9] என்பர். வா. செ. குழந்தைசாமி.

தமிழ்மொழி ஆபத்துக்களை எதிர்கொண்ட போதெல்லாம் தமிழுக்காகக் குரல் கொடுத்தவர்கள் பலராவர். அவர்களுள் பிற்காலத்தில் வி.கோ. சூரிய நாராயண சாஸ்திரியார் மறைமலை அடிகள், மகாகவி பாரதியார், ஆறுமுக நாவலர், பாவேந்தர் பாரதிதாசன், தேவநேயப் பாவாணர், பெருஞ்சித்திரனார், ஈ.வெ.ரா. பெரியார், அறிஞர் அண்ணாதுரை, கலைஞர் கருணாநிதி போன்றோர் குறிப்பிடத் தக்கவர்கள். இவர்களைத் தவிர தாய்மொழித் தமிழுக்காக உயிர்த் தியாகம் செய்தவர்கள் எண்ணிறந்தவர்கள்.

1967 இல் தி.மு.க. அரசு ஆட்சிக்கு வந்தபின் தனித்தமிழ் இயக்கச் சிந்தனைகள் தமிழகத்தில் ஆக்கம் பெற்றன. 'Madras Secretariat Building' அரசு தலைமைச் செயலகமாக மாறியது. 'சத்யமேவ ஜயதே' 'வாய்மையே வெல்லும்' எனத் தமிழாக்கம் பெற்றது. பின்னர் 'Madras State' தமிழ்நாடாக மாறியது. ஆட்சித்துறைச் சொற்கள் தமிழ்ப்படுத்தப்பட்டன. 'வடமொழி, ஆங்கிலம் போன்ற பிறமொழிச் சொற்களின் உதவியின்றித் தமிழால் தனித்து நிலைபெற முடியாது'

என்று வாதாடிக் கொண்டிருந்தவர்களின் வாயை அடைக்கவும், தமிழ் தனித்து இயங்கும் ஆற்றல் வாய்ந்தது என்னும் உண்மையை வெளிப்படுத்தவும், பிறமொழிச் சொற்களுக்கு இணையான தூயதமிழ்ச் சொற்களின் அகராதிகள் துணை நின்றன.

மறைமலை அடிகளாரின் தூயதமிழ்க் கொள்கைக்குத் தமிழ்த்தாத்தா உ.வே.சா., பேராசிரியர் எஸ்.வையாபுரிப்பிள்ளை போன்றோர்கள் ஆதரவு காட்டவில்லை. வடமொழிச் சொற்களை நீக்கித் தமிழைத் தூய்மைப்படுத்தும் இயக்கம் தேவையற்றதும் விரும்பத்தகாததுமாகும் என்று அவர்கள் கருத்துத் தெரிவித்தனர். தமிழுக்குத் தொண்டுசெய்யும் பெரியோர்கள் தமிழைவிட அதிகமாக வடமொழியில் ஈடுபாடு கொண்டிருந்ததை கி.ஆ.பெ. விசுவநாதம் போன்ற அறிஞர் பெருமக்கள் கடுமையாக எதிர்த்தனர்.

'அடிகளாரின் தனித்தமிழ் இயக்கத்திற்கு விடுதலைப்போராட்ட வீரர்களும் தமிழறிஞர்களுமான சுப்பிரமணிய சிவா, சிதம்பரம்பிள்ளை போன்றோர்களின் ஆதரவு இருந்தது. தமிழ் பேச்சிலும் எழுத்திலும் வடமொழி ஆதிக்கத்தை முற்றிலும் நீக்கவேண்டும் என அவர்கள் குரல் கொடுத்தனர். தனித்தமிழில் கட்டுரை எழுதுகின்றவர்களுக்கு ஐந்துரூபாய் பரிசு வழங்குவதாகவும் அவர்கள் அறிக்கை விடுத்தனராம்.'[10] இன்று தமிழ்த் திரைப்படங்களுக்குத் தமிழ்ப் பெயர் சூட்டினால் சன்மானம் வழங்கப்படும் என்ற நிலைக்கு நாம் வளர்ந்துவிட்டோம்!

ஒரு மொழியின் வளர்ச்சி என்பது வேற்றுமொழி ஆதிக்கத்திலிருந்து மொழியைக் காப்பதிலும் மக்கள் மனத்தில் மொழியின் முதன்மையை உணரவைப்பதிலும் அடங்கும் எனக் கூறியவர் ஆறுமுக நாவலர். தமிழ் மொழிக்கும் தமிழ்மொழி வளர்ச்சிக்கும் தமிழ்க் கல்வி முறைக்கும் பத்தொன்பதாம் நூற்றாண்டில் புத்துயிர் அளித்த பெருமையும் அன்னாருக்கு உண்டு. மலேசிய-சிங்கப்பூர் நாடுகளில் தமிழர் எழுச்சியையும் தமிழ் எழுச்சியையும் உருவாக்கியவர் தமிழவேள் கோ. சாரங்கபாணி. 'தமிழ் முரசு' என்ற ஏட்டைத் (1935) தொடங்கிவைத்துத் தமிழ்மொழி வளர்ச்சிக்குப் பாடுபட்டவர் அவர்.

ஆங்கிலேயர்கள் தமிழகத்தைவிட்டு நீங்குவதால் மட்டும் தமிழ்நாடு விடுதலை அடைந்துவிடாது: வடமொழி தமிழகத்தைவிட்டு

நீங்கினால் மட்டுமே தமிழகம் உண்மையான விடுதலையைப் பெறும் என்று கூறியவர் தேவநேயப் பாவாணர். வடமொழியாளர்கள் சொந்தம் கொண்டாடிய சொற்கள் பலவற்றிற்கும் தமிழ்வேர் காணமுயன்ற அன்னாரின் தமிழ்ச்சொல் ஆய்வு பாராட்டப்படவேண்டியது. டாக்டர். ரா.பி. சேதுப்பிள்ளை போன்றவர்கள் தூய தமிழின் அழகைத் தங்கள் எழுத்துக்களின் வாயிலாக வரைந்து காட்டித் தமிழ்மொழியின் ஆற்றலை வெளிப்படுத்தினர். தமிழ்மொழியின் வளர்ச்சிக்கும் வளமைக்கும் தூய்மைக்கும் திராவிட அரசியல் இயக்கங்களின் பங்களிப்பு மகத்தானதாகும். தமிழில் எழுத்துச் சீர்திருத்தத்தை ஏற்படுத்தியதோடு தூயதமிழ் இயக்கத்தை பாமரமக்களின் மத்தியிலும் கொண்டு சென்றவர் பெரியார் ஈ.வெ.ரா. அறிஞர் அண்ணா, கலைஞர் கருணாநிதி போன்றவர்கள் தங்கள் பேச்சாற்றலால் தமிழ் மக்களிடையே ஒருவிதமான தூயதமிழ் விழிப்புணர்வை ஏற்படுத்தினர். திரு.வி.க., மு.வ. போன்ற அருந்தமிழ் அறிஞர்கள் தங்கள் எளிமையான எழுத்து மொழியால் செம்மொழிக்குச் சிறப்புச் செய்தனர்.

தனித்தமிழ்-எதிர்ப்பு:

பிற்காலத்தில் பின் நவீனத்துவ இலக்கியக் கோட்பாடும், தலித் இலக்கியப் போக்கும் முக்கியமாகப் பேசப்பட்டபோது அவ்வியக்கங்களைச் சார்ந்தவர்கள் மறைமலை அடிகளாரின் தனித்தமிழ் வாதத்தைக் கடுமையாகத் தாக்கினர்.

''வேளாளத்தினூடாக தமிழுக்குள் புகுந்த வைதீகக் கருத்தாக்கங்களை முற்றிலுமாய் நீக்காமல் வெறுமனே வடமொழிச் சொற்களை நீக்கி எழுதுதல் மட்டுமே போதும் எனக் கருதிக் கொண்டு தமிழின் பன்மைத் தன்மைகளைப் புறக்கணிக்கும் யாரும் வேளாளர்களின் கோமணங்களாகவே விளங்க முடியும்''[11] என எழுதினார் அ.மார்க்ஸ் அவர்கள். வடமொழிச் சொற்களை மட்டுமன்றி வடமொழியாளர்கள் தமிழ்ப் பண்பாட்டில் புகுத்திய அரசியல், மதம், கலை, இலக்கியம் சார்ந்த தத்துவார்த்தங்களையும் புறக்கணித்தால் மட்டுமே தமிழகம் ஆரிய ஆதிக்கத்திலிருந்து வெளியேற முடியும் என இவர்கள் நம்பினர். தமிழ்மொழி ஒருமைத் தன்மைகொண்ட ஒரு மொழி அல்ல, அது செந்தமிழ், கொடுந்தமிழ், மலைத்தமிழ், மலேசியத் தோட்டத் தொழிலாளர்களின் கூலித்தமிழ் முதலான பன்மைத் தன்மைகளைக் கொண்டது. மொழித் தூய்மை, தனித் தமிழ் என்றெல்லாம்

சொல்லிக்கொண்டு தாங்கள் வகுத்த வழியே அதைக் கொண்டு செல்ல முனைவதை இவர்கள் எதிர்த்தனர். எந்த ஒன்றிலும் பொதுமையை நிராகரித்த இவர்கள் மொழியையும் அவ்வாறே கண்டனர். "பன்மைத் தன்மையை ஏற்காத எந்தத் தத்துவமும் எல்லா மக்களுக்குமான விடுதலையைத் தந்துவிட முடியாது"[12] என்பதையும் சுட்டிக் காட்டினர்.

ஆரிய மொழிக்கெதிராகக் கலகத்தை ஏற்படுத்திய தமிழ்த் தேசிய இயக்கமானது 'தனித்தமிழ்' என்ற கருத்தியலை உட்கொண்டது. பிராமணரல்லாத உயர் சாதியினரின் மீட்புவாதத்தின் கூக்குரலே தனித்தமிழ் என்பது டாக்டர். க. சிவத்தம்பி அவர்களின் எண்ணம். 'தனித்தமிழ் இயக்கத்தின் அரசியல் பின்னணியை இவர் ஆய்வு செய்துள்ளார்.

மறைமலையடிகளால் தோற்றுவிக்கப்பட்ட தனித்தமிழ் இயக்கம் பழைமையைப் பேணுவது, படைப்பிலக்கியத்திற்கு எதிரி இடது சாரி முகம் காட்டும் வலதுசாரி குணமுடையது. தனித்தமிழ் என்பது 'அரசியல் கலந்த சொற்பிரயோகம்'. 'தமிழும் வடமொழியும் சமபங்கு கலந்து எழுதும் மணிப்பிரவாள நடைபோன்ற செயற்கைத் தன்மை பூண்டதே தனித்தமிழ்'[13] என்று ராஜ் கௌதமன் கூறுகின்றார். தனித்தமிழ் என்பது அடிப்படையில் மொழியின் சிந்தனைச் சார்புக்கு ஊனம் உண்டாக்குவது. தாய்மொழிப்பற்று என்பது வேறு, தனித்தமிழ் வேறு என்பதும் அவர்தம் கருத்தாகும்.

தமிழ்ப்படுத்தப்பட்ட சில சொற்கள் ஆரியச் சொல்லைவிடவும் அந்நியப் பட்டிருப்பதாகக் கூறும் ராஜ்கௌதமன், சமுதாயம் என்ற சொல்லை குமுகாயம் என மாற்றியதைத் தமது கருத்துக்கு ஆதாரமாகக் காட்டுகின்றார். ஆனால் இந்த அந்நியப்படுதல்கள் ஒரு குறுகிய காலத்திற்குள் நீங்கிவிடும் என்பதை அவர் புரிந்துகொள்ளவில்லை. இதற்குச் சான்றாகப் புதிதாகத் தமிழில் தோன்றிப் புழக்கத்திற்கு வந்து மக்கள் மத்தியில் நிலைபெற்ற எத்தனையோ சொற்களைக் காட்டலாம்.

மொழி, பண்பாடு, இலக்கிய மரபு என்பனவெல்லாம் அவை தோன்றிய சமூகத்தின் இயற்கை வெளிப்பாடுகளல்ல. அவை கற்பிதம் செய்யப்பட்டவை, கட்டமைக்கப்பட்டவை, அரசியல் பின்புலம் கொண்டவை என்றெல்லாம் பின்நவீனத்துவவாதிகள் எழுதுவதைப்

படிக்கும் போது இவர்கள் மொழியமைப்பையும் கட்டுடைத்துச் சீர்குலையச் செய்துவிடுவார்களோ என்ற அச்சம்தான் ஏற்படுகின்றது. மொழி-சாதி, இனம், பண்பாடு ஆகியவற்றோடு நெருங்கிய உறவு கொண்டதுதான். அதற்காக மொழிவளர்ச்சிக்காக மேற்கொள்ளப்படும் எத்தகைய ஆக்கப்பூர்வமான செயல்பாடுகளையும் சாதி, இனக் கண்களோடு பார்த்து விதண்டாவாதம் எழுப்புவது வளர்ச்சியைத் தடைப்படுத்தத்தான் செய்யும். அது மொழிக்கு மட்டுமல்ல எல்லாவற்றிற்கும் பொருந்தும்.

**எளிய மொழி நடை:**

மொழித் தூய்மை என்பது பழைமையைக் கட்டிக் காப்பது அல்ல, புதுமையை வெறுப்பதும் அல்ல. 'பழையன கழிதலும் புதியன புகுதலும்' தமிழில் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு கொள்கைதானே. மொழித்தூய்மை என்னும் கொள்கையை முழக்கிக் கொண்டு, தமிழை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் கொண்டு செல்லும் முயற்சி எங்கிருந்து எழுந்தாலும் அதை முறியடித்தே ஆக வேண்டும். அத்தகைய ஒரு மொழியமைப்பை மாறிவரும் சமுதாயம் ஏற்றுக் கொள்ளாது. மொழியைத் தூய்மைப்படுத்தும் ஆர்வத்தோடு மொழியை எளிமைப்படுத்தும் எண்ணமும் இணைந்து செல்லவேண்டும். அப்போதுதான் மொழிவாழும்.

**கலைச் சொல்லாக்கம்:**

இது அறிவியல் உலகம். இன்றைய அறிவியலின் அசுரத்தனமான வளர்ச்சிக்கு ஈடுகொடுக்கத் தமிழால் இயலுமா என்பதைப் பலரும் கேள்விக்குறியாக்கியுள்ளனர். சீன, ஜப்பானிய மொழிகளால் அறிவியலை முழுமையாகத் தங்கள் மொழியிலேயே உள்வாங்க முடியுமென்றால் தமிழாலும் முடியும் என்பதில் ஐயப்பாட்டுக்கு இடமில்லை. தமிழில் அறிவியல் கலைச் சொற்கள் பற்றிப் பலரும் கவலைப்படுகின்றனர். "அறிவியல் மற்றும் தொழில் நுட்பச் சொற்கள் தமிழில் குறைவே. காரணம் அவற்றைப் புழங்கும் சூழல் இங்கு இல்லை"[14] என்கிறார் ஜெயமோகன். ஆனால் எத்தகைய கலைச்சொல்லாக்கத்திற்கும் இடங்கொடுக்கும் ஆற்றல் தமிழுக்குண்டு என்பதைக் கழிந்தகால அனுபவங்கள் தெளிவுபடுத்துகின்றன.

ஒரு குழுவாகச் செயல்பட்டுக் கலைச் சொல்லாக்கத்தை

உடனுக்குடன் செவ்வனே செய்யமுடியும். புதுச் சொல்லாக்கங்களுக்கு முனையும் போதும் கலைச்சொல்லாக்கத்தில் ஈடுபடும்போதும் பழந்தமிழ்ச் செல்வத்திலிருந்து அவற்றை உருவாக்க முயற்சிக்கவேண்டும். இயன்றவரைத் தமிழ்ச்சொற்களின் வேர்களைத் தேட வேண்டும். தமிழ் அந்த அளவுக்குச் சொல்வளம் பெற்ற ஒரு மொழியாகும். அறிவியல் கலைச் சொற்கள் கூடுமானவரை தனிச்சொற்களாக இருத்தல் நல்லது. ஒரு பொருள், கருத்து. கொள்கை அல்லது தத்துவத்தின் அமைப்பு, பண்பு, பயன், நோக்கம் ஆகியவற்றின் அடிப்படையில் கலைச்சொற்களை உருவாக்க வேண்டும். நேரடி மொழிபெயர்ப்பை இயன்றவரை தவிர்ப்பது நல்லது. புதுச் சொல் படைக்கும்போது எளிமை (Simplicity) வழக்கு முதன்மை (Currency), ஆக்கத்திறன் (Productivity) சொல் தெளிவு (Transparancy) முதலியவற்றை மனதில் கொள்ள வேண்டுமென மொழியியலார் கூறுவர். குறிப்பிட்ட ஒரு பொருளுக்கு அல்லது தத்துவத்திற்கு ஒன்றிற்கு மேற்பட்ட கலைச்சொற்கள் தோன்றும்போது அவரவர் விருப்பப்படிச் சொற்களைப் பயன்படுத்தாமல் பொருத்தமான-எளிமையான-ஏற்றுக்கொள்ளத்தக்க ஒரு சொல்லுக்கு அங்கீகாரம் தந்து, அதையே அனைவரும் பயன்படுத்தும் நிலைக்குக் கொண்டு வரவேண்டும். இதற்காக அரசு அங்கீகாரம் பெற்ற குழுக்கள் கொண்டுவரும் எல்லாச் சொற்களையும் அப்படியே ஏற்றுக் கொள்ளவேண்டும் என்ற கட்டாயம் கூடாது. அதைவிட நல்ல சொற்களை, பொருத்தமான சொற்களை வேறு யாரேனும் உருவாக்கம் செய்தால் அவற்றையும் பொதுமைப்படுத்தி ஏற்றுக் கொள்ளும் மனப்பக்குவம் ஏற்படவேண்டும்.

பிற மொழிகளைப்போல் அல்லாமல் தமிழ் மொழியில் எழுத்து மொழிக்கும் பேச்சு மொழிக்கும் இடையே அகலமாக இடைவெளியுண்டு. செந்தமிழ், கொடுந்தமிழ், வட்டாரக் கிளைமொழி (Regional Dialect), சமூகக் கிளைமொழி (Social dialect), பொதுக் கிளை மொழி (Standard dialect), புலம் பெயர்ந்த தமிழ் என்றெல்லாம் பன்மைத் தன்மை கொண்ட ஒரு மொழி தமிழ்மொழி. இப்பன்மைத் தன்மை மொழித் தூய்மைக்குப் பெரும் முட்டுக்கட்டையாகவே இருக்கும். ஆயினும் இவற்றையெல்லாம் ஒருங்கிணைத்துக் கொண்டு பொதுவான ஒரு நல்ல பேச்சு மொழியைப் (Standard Spoken language) புழக்கத்திற்குக் கொண்டு வரவேண்டும். இதற்காக முனையும்போது சாதி, மத, இன, வட்டார ஏற்றத்தாழ்வுகளைக்

கருத்தில் கொள்ளாதிருக்க வேண்டும். தற்பொழுது வானொலி, தொலைக்காட்சி, பத்திரிகைகள், திரைப்படங்கள் போன்ற ஊடகங்களின் வழியாகப் பொதுக் கிளைமொழி அல்லது பொதுவான ஒரு நல்ல பேச்சு மொழி உருவாகி வருவதாகக் கூறுகின்றனர். அது அனைத்துக் கிளைமொழிகளின் பொதுப் பண்பைக் கொண்டிருப்பதாகவும் மொழியியலாளர்கள் கண்டறிந்துள்ளனர்.

### வட்டார வழக்கு இலக்கியங்கள்:

மொழித் தூய்மைக்குச் சவாலாக இருக்கும் இன்னொன்று வட்டாரவழக்கு இலக்கிய வகையாகும். இலக்கியம் எதார்த்தமாகவும் உயிரோட்டம் உடையதாகவும் இருக்கவேண்டும் என்ற எண்ணத்தில் படைப்பிலக்கியங்கள் பலவும் பேச்சு வழக்கிலும் அந்தந்த வட்டார வழக்கிலுமாக அமைகின்றன.

மொழித்தூய்மை படைப்பிலக்கியங்களின் வளர்ச்சிக்குத் தடையாக இருக்கக்கூடாது: படைப்பாளிகளின் கைகளையும் கட்டிவிடக் கூடாது. இந்நிலையில் மொழித் தூய்மைக்காகப் பாடுபடுகின்றவர்கள் வட்டார வழக்கு இலக்கியங்களை எச்சரிக்கையாகவே அணுகவேண்டும். ''பேச்சுமொழி சாதாரணமாக முன்னகரும் எழுத்துமொழி அப்படி நகராது. எழுதப்பட்ட ஆக்கம் அதுவரையிலான செவ்வியல் மரபின் பகுதி ஆகிவிடுகிறது. அந்தப் பின்புலத்தை உதறி அது நகராது: நகரவும் கூடாது. அதைப் பேச்சுமொழி நோக்கி நகர்த்துவதே படைப்பாளிகள் செய்யும் பங்களிப்பு. அதாவது செவ்வியலை மொத்தமாக இழுத்துப் பேச்சுமொழி பக்கத்துக்குக் கொண்டு வருவது''[15] என ஜெயமோகன் கூறுவது சிந்தனைக்குரியது. அவரே ''பேச்சுமொழிபற்றி நாம் அதிகமாகக் கவலைப்பட வேண்டியதில்லை. அது அறிந்தும் அறியாததுமான பல்லாயிரம் சக்திகளால் இயக்கப்படும் ஒரு பெரும் போக்கு. அது வரலாற்றின் நிழல். உண்மையிலேயே தமிழ் அழிவது வரலாற்றின் விதி என்றால் நாம் மொழிச் சீர்திருத்தங்கள் மூலம் அதைக் கட்டுப்படுத்திவிட முடியாது. நம்மால் செய்யமுடிவது செம்மொழியைச் சீராக வைத்திருத்தலே''[16] என்று கூறுவதும் குறிப்பிடத்தக்கது.

### தவறான உச்சரிப்பு:

மொழித்தூய்மையின் முன்னேற்றத்தைப் பின்னோக்கி இழுக்கும்

இன்னொரு மொழி அவலம் தான் தவறான உச்சரிப்பு. ஊடகங்களில், குறிப்பாகத் தொலைக்காட்சி நிகழ்ச்சிகளில் தமிழ் கொலைசெய்யப்படுகிறது என்று யாராவது கூறினால் அது முழுக்க முழுக்க உண்மையென்றே சொல்லவேண்டும். பேசுகின்றவர்கள் ஆங்கிலச் சொற்களை அதிகமாகக் கலப்பது மட்டுமன்றி ஆங்கில உச்சரிப்பு முறையிலேயே தமிழையும் உச்சரிக்கின்றனர். 'தாய்மொழி தமிழாக இருந்தாலும் நன்றாகப் பேசவராது' என்று கூறிக் கொள்வதை இவர்கள் பெருமையாகக் கருதுகின்றனர். செய்தி வாசிக்கின்றவர்கள் கூட ண-ன, ற-ர, ல-ள-ழ எழுத்துக்களை வேறுபாடு இல்லாமல் உச்சரிப்பது எரிச்சலைத்தான் ஊட்டுகிறது. தமிழை ஆங்கிலம் போல் பேசுவதும், தமிழ்ச் சொற்களைத் தவறாக உச்சரிப்பதும் தவிர்க்கப்படவேண்டியவை, மொழி உச்சரிப்பு சரியாக அமையாமல் அவரவர் விருப்பப்படியே பேசத் தொடங்குவதால் மரூஉச் சொற்களும் திசைச் சொற்களும் அதிகரிக்கும். இவை அதிகரிக்கும்போது தனிக்கிளைமொழிகள் தோன்றும். அக்கிளைமொழிகளே நூற்றாண்டுகளைத் தாண்டும்போது தனிமொழிகளாக உருவெடுக்கும். நம்மால் படைக்கப்பட்டது தான் மொழி ஆயினும் ஒரு நிலையை அடைந்துவிட்டால் அது நம் கட்டுப்பாட்டுக்குள் முழுமையாக அடங்குவதில்லை. அதன் இச்சைப்படியே செல்லும். அது மொழியின் இயல்பு.

"பாஷை திரிந்து வேறுபடுவதெல்லாம் தன்னியல்பாகவே யாம். ஒருவனாலுந் தான் விரும்பியபடி தான் பேசும் பாஷையை மாற்றமுடியாது. மக்களறிவின்றியே பாஷை முதிர்ந்து கொண்டே செல்லும், பல்லாண்டுகள் கழிந்த பின்னரே முதிர்ச்சிக் குறிகள் தோன்றும் பாஷையின் ஒழுகலாற்றை மாற்றுதல் எவரானும் முடியாததாம். ஆதலால் தமிழ்பாஷையின் ஒழுகலாறு இன்னதென்று உய்த்துணர்ந்து கொண்டு, ஆற்று வெள்ளத்தின் வேகத்துடன் செல்வான் போல அவ்வொழுகலாற்றினையொட்டி அதனோடியைந்து தமிழ்ப் புலவரும் தம் பாஷையைச் சீர்திருத்திக் கொள்ள வேண்டும்"[17] என்றார் சாஸ்திரியார்.

தீர்வு:

மொழியைப் பற்றி இவ்வாறெல்லாம் கூறினாலும், மொழியை அதன் விருப்பப்படியே விட்டுவிடுவது என்பது ஒரு விதத்தில் மொழிக்குச் செய்யும் கெடுதல் ஆகும். "தொழில்மயமாதலினால் இந்தியச்

சிறுதொழில்கள் நசித்ததுபோல இன்றையத் தேசியச் சூழல், உலகமயமாதல் சூழல் ஆகியவற்றால் உலகில் பல மொழிகள் விரைவில் அழிந்துவிடும் வாய்ப்புகள் உள்ளன."[18] என்றெல்லாம் மொழியியல் அறிஞர்கள் எச்சரிக்கை விடுவதைக் கவனித்தாக வேண்டும். வெறும் அரசியல் சட்டங்களாலோ அவசர முடிவுகளாலோ, சூரியன் மறைந்து எழுவதற்குள் மொழியைத் தூய்மைப்படுத்திவிட முனைவது விபரீதமான முடிவுகளை ஏற்படுத்திவிடும். ஆர்வம் நல்லதுதான் அத்துடன் ஆக்கப் பூர்வமான சிந்தனையும் பொறுமையும் இருந்தால் இன்னும் நல்லது.

- கல்வித்துறை, ஆட்சித்துறை, நீதித்துறை, அறிவியல் தொழில் நுட்பம், மக்கள் தகவல் தொடர்புத் துறை போன்றவற்றில் இடம்பெறும் கலைச் சொற்களுக்குரிய சொற்களை உருவாக்குதல்.
- சமூகத்தின் தேவைக்குத் தக்கவாறு மொழியில் புதுமையாக்கத்தை (Modernigation) ஏற்படுத்திக் கொள்ளுதல்.
- சமூகச் செயல்பாட்டிற்குத் தக்கவாறு சொற்களை உருவாக்கி அவற்றை நிலைபேறாக்கம் (Standardisation) செய்து மொழிப் பயன்பாட்டில் ஈடுபடுத்துதல்.
- எளிய மொழிபெயர்ப்பு (Simple Translation) மூலமாகக் கலைச் சொற்களை உருவாக்கி அவற்றைப் பயன் பாட்டிற்குக் கொண்டுவரத்தக்க வகையில் (Propogation) செய்தல்.
- புதிய சொற்களை உருவாக்குதல் (Coinage of Newterms) அவற்றை அன்றாட மொழிப் பயன்பாட்டில் ஈடுபடுத்தித் தமிழ் மொழியின் சொற்கோவைப் பெருக்கத்தை விரிவுபடுத்தல் (Expansion of Tamil Lexicon)[19]

என்ற பாவேந்தரின் கருத்துக்களை ஈண்டு செயற்படுத்துதல் ஏற்புடையதாகும் எனலாம். எல்லாவற்றிற்கும் மேலாக, நாம் தமிழர்கள் நம் தாய்மொழி தமிழ் என்று சொல்வதில் நமக்கிருக்கும் தாழ்வு மனப்பான்மையை நீக்க வேண்டும். மொழித்தூய்மை, பிறமொழி

ஆதிக்கத்தைக் களைதல், தமிழின் தனித்தன்மையைக் காத்தல் ஆகிய மும்மந்திரங்களையும் தமிழ்மொழி வளர்ச்சிக்கான மூலமந்திரங்களாகக் கொள்வோம்.

வாழ்க தமிழ்! வளர்க தமிழ்!

## பின்குறிப்புகள்

1. ராஜ்கௌதமன், எண்பதுகளில் தமிழ்க் கலாச்சாரம், 1998, ப.15
2. நாச்சிமுத்து. கி, தமிழ் செம்மொழி, வாழும்மொழி உலகமொழி, தமிழியல் ஆய்வுகள், 1999, ப.46
3. சக்திவேல். சு, தமிழ்மொழி வரலாறு, 2002, ப.271.
4. மேலது, ப. 272
5. நாச்சிமுத்து. கி, 'ஆங்கிலமயமாதல்', ஓங்குதமிழ் (15-1-93) ப. 43.
6. சக்திவேல். சு, தமிழ்மொழி வரலாறு, 2002, ப:271
7. சுப்ரமண்யன். நு, வி.கோ. சூரியநாராயண சாஸ்திரி, 1981, பக்: 98-99.
8. சக்திவேல். சு, தமிழ்மொழி வரலாறு, 2002, ப: 272.
9. குழந்தைசாமி. வா.செ, உலகச் செவ்வியல் மொழிகளின் வரிசையில் தமிழ், 2005, ப. 84.
10. Sumathi Ramaswamy, Passions of the Tongue, 1997, p.149.
11. மார்க்ஸ். அ, பின் நவீனத்துவம், 1996, ப. 103.
12. மேலது, பக் 149.
13. ராஜ்கௌதமன், எண்பதுகளில் தமிழ்க் கலாச்சாரம், 1992, பக்: 11-13.
14. ஜெயமோகன், 'தமிழ் நவீன பயன்பாட்டுக்கு உதவுகிறதா?', தொனி-2002, ப:16
15. மேலது, ப: 14.
16. மேலது, ப: 17.

17. சுப்ரமணியன். நு, வி.கோ. சூரிய நாராயண சாஸ்திரி 1981, பக்: 150-151

18. நாச்சிமுத்து. கி, 'தமிழ் செம்மொழி, வாழும்மொழி, உலகமொழி', தமிழியல் ஆய்வுகள், 1999, ப: 45.

19. தயாளன். வே, 'பாவேந்தர் பாரதிதாசன் மொழிச் சிந்தனைகள்' ஆய்வுக்கோவை (இலக்கணவியல்), 2004, ப: 132.



# 2. மொழித்தூய்மை - மொழியியல் நோக்கு

முனைவர் ஆ. கார்த்திகேயன்
தலைவர், அயல்நாட்டுக் கல்வித்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

**I மொழித்தூய்மை : தமிழ் மரபு:**

பிறமொழிச் சொற்களைக் கலவாமல் ஒருவர் தம் மொழிக்கேயுரிய சொற்களைப் பயன்படுத்திப் பேசுவதும் எழுதுவதும் மொழித்தூய்மை எனப்படுகிறது. கழிவு நீரால் நன்னீரும், நச்சுப் புகையால் காற்று மண்டலமும் மாசுபடுவது போல பிறமொழிச் சொற்களால் மொழி மாசுபடுகிறது. பிறமொழிச் சொற்கள் நம் மொழியின் இன்னோசையையும், தூய்மையையும் கெடுத்தன. அதனால்தான் "நமது செந்தமிழ் மொழியில் ஆரியம், ஆங்கிலம் முதலான பிறமொழிச் சொற்களைக் கலவாமல், நம்மாற் கூடியவரையில் முயன்று அதனைத் தூயதாக வழங்கல் வேண்டும்" என்று மறைமலையடிகள் (1921, பக் - 113) வலியுறுத்துகிறார். பேச்சு மொழியும் கொச்சை வழக்கு என்று கருதப்பட்டது. எழுதவும் இலக்கியம் படைக்கவும் தகுதியற்றது என்று நம்பப்பட்டு விலக்கிவைக்கப்பட்டது. எனவே பேச்சு வழக்கும் தூய்மையற்றதாகவே கருதப்பட்டது. பேச்சு மொழியைப் பயன்படுத்திப் புதினம் படைக்கத் துணிந்த வ.வே.சு. ஐயர் 'அரசமரத்திற்குப் பண்டிதர் பேசும் மொழி தெரியாது, படிக்காத பாமரர் பேசும் மொழிதான் தெரியும், எனவே அதற்குத் தெரிந்த மொழியிலேயே அது கதையைக் கூறுகிறது' என்று குளத்தங்கரை அரசமரம் என்ற கதையில் முன்னுரையில் கூறுகிறார். இது ஓர் அனுமதி கேட்பது போலவே அமைந்துள்ளது. பேச்சு மொழியைப் பயன்படுத்தத் தடை இருந்ததையும் சுட்டுகிறது.

ஏற்றல்-எதிர்த்தல்-தடுத்தல்:

பிறமொழிச் சொற்களை அறவே நீக்கமுடியாது. மொழியில் ஒரு சிறிதேனும் பிறமொழிச் சொற்கள் இருந்தே தீரும். முற்காலத்தில் வழங்கிய மொழிகளின் சொற்கள் சிலவும், பிற்காலத்தில் நடைபெறும் மொழிகளின் சொற்கள் சிலவும் தமிழ்மொழியின் கண்ணே காணப்படுதல்

இயற்கையாம் என்று அடிகளார் மேலும் விளக்குவார். இயல்பாய், இயற்கையாய்க் கலக்கும் சொற்களை ஏற்றுக்கொள்ளலாம். தவிர்க்க முடியாமல் தமிழில் வந்து கலக்கும் அயல்மொழிச் சொற்கள் 'தமிழோடொத்துத் தமிழினுருவத்தைப் பெற்று இயல்பாக வழங்க வேண்டும். வடசொற் கிளவி வடவெழுத்துக்களை நீக்கித் தமிழ் எழுத்துக்களால் எழுதப்படவேண்டும். இது தொல்காப்பிய மரபேயாகும். தமிழிலக்கியங்களில் காலந்தோறும் வந்து கலந்த வடசொற்கள் வடவெழுத்துக்களை நீக்கியே எழுதப்பட்டன. பாகதமாய்ச் சிதைந்து வந்த 'கண்ணன்' போன்ற சொற்களும் தமிழில் கலந்துள்ளன. சங்க இலக்கியங்களில் குறைவாக இருந்த இத்தகைய சொற்கள் பக்திப் பனுவல்களில் மிகுதியாய்க் கலந்துள்ளன. திருவாசகத்தில் திருப்பள்ளியெழுச்சி பதிகத்தில் கீழ்க்காணும் சொற்கள் கலந்துள்ளன.

| | |
|---|---|
| உதயம் | கருணை |
| சூரியன் | நயனம் |
| ஆனந்தம் | இருக்கு |
| பூதங்கள் | கீதங்கள் |
| பந்தனை | கமலங்கள் |
| மது | பூமி |

இத்தகைய சொற்களை ஏற்கலாம். ஏனெனில் அவை பழங்காலத்திலேயே புகுந்துவிட்டவை. இயல்புக்கு மிகுதியாக, இயற்கைக்கு மாறாக வலிந்து பிறமொழிக் கலப்பைப் புகுத்துகின்ற போக்கை அறிஞர்கள் எதிர்க்கின்றனர். வடமொழிச் சொற்களைத் "தமிழ் மொழிக்குப் பொருந்த திரிபுபடுத்தாமல் அம்மொழியில் உள்ளபடியே" எழுதும் போக்கை எதிர்த்தனர். இது அருவருப்பையும் வருத்தத்தையும் விளைவிக்கின்றன. (மறைமலையடிகள்: 1921, 110). பிறமொழிச் சொற் கலப்பு பெருங்குற்றம் எனவும், பெற்ற தாயைக் கொலை செய்வதற்குச் சமம் என்றும் வர்ணிக்கப்பட்டது. 'அந்நிய மொழிகளில் பேசுவதும் எழுதுவதும் அறிவுடைமைக்கு அழகென்றும், தாய் மொழியைப் புறக்கணிப்பது தவறன்றென்றும் அறிவாளர்' கருதியதால் (சேதுப்பிள்ளை, 1948, ப. 238) பெருவாரியாகக் கலப்பு ஏற்பட்டது.

பிறமொழிச் சொற்கள் தமிழில் கலவாதவாறு தடுப்பது எவ்வாறு என்றும் மொழித்தூய்மை போற்றிய அறிஞர்கள் சிந்தித்துள்ளனர்.

தமிழாசிரியர்கள் வடசொற் கலவாமல் தமிழ் பயிற்றுவிக்க வேண்டும். தமிழ்ச் சொற்களையும் வடசொற்களையும் பகுத்துணர்ந்து மாணவர்களுக்கு உணர்த்தவேண்டும். சொற்பொழிவாற்றுவோர் சிறிதும் வடசொல் கலவாமலும், ஆங்கிலம் கலவாமலும் பேசவேண்டும்.

"கட்டுரை எழுதுவோரும், நூலியற்றுவோரும், பதிப்போரும், உரை எழுதுவோரும், பாடப் புத்தகங்கள் எழுதுவோரும், முடங்கல் எழுதுவோரும் பிறமொழிச் சொற்களைக் கலவாமல் எழுத வேண்டும். பிறமொழி நூற்பொருளைத் தமிழில் மொழிபெயர்க்குங்கால் அம்மொழிச் சொற்களுக்கேற்ற தமிழ்ச் சொற்களை ஆராய்ந்தெழுதுதல் வேண்டும். எனவே மொழிபெயர்ப்பாளர்க்கு இருமொழித் தேர்ச்சியும் இன்றியமையாதது பிறமொழி நூற்பொருளைத் தமிழில் எழுதும்போது ஏற்ற தனித்தமிழ்ச் சொற்களைக் கண்டறிந்து அமைத்தல் வேண்டும். தனிச்சொற்கள் கிடைக்காவிட்டால் தொடர் மொழிகளாகவேனும் புதிய சொற்களையாக்கியேனும் அமைத்தல் வேண்டும். வடசொற்களை நீக்கித் தனித்தமிழில் எழுதுவது போலவே ஜ, ஷ, ஸ, எழுத்துக்களையும் நீக்கி எழுத வேண்டும். (சோம சுந்தரம் பிள்ளை, 1941, பக் 241-250)

மொழிக்கு என்னென்ன கேடுகள் விளையும் என்பது குறித்தும் எண்ணங்களை வெளியிட்டுள்ளனர். வடவெழுத்துக்களைத் தமிழில் கலப்பதால் தமிழ் எழுத்துக்கள் இலக்கணத்திற்கு மாறாக மிகுகின்றன. இவற்றையும் சேர்த்து இனிச் சூத்திரம் செய்தல் வேண்டும். எழுத்துக்களையும் சொற்களையும் மிகுதியாகக் கலப்பதற்கேற்ப வடமொழி இலக்கணம் தமிழில் புகுதலோடு சிலபுதிய இலக்கண முறைகளையும் அமைக்க வேண்டியிருக்கிறது. மொழிக் கலப்பு தொடர்ந்து நடைபெறுமாயின் மொழி அழிந்துவிடுமென்றும், மொழிக்கு ஏற்படும் தீங்கு தமிழர்க்கு ஏற்படும் தீங்கேயென்றும் வாதிடுவர். மொழி கேடுறுமாயின் தமிழர்களின் நாகரிகமும், கொள்கைகளும் சீரும் சிறப்பும் கேடுறும் என்றும் தனித்தமிழ் ஆர்வலர் கூறுகின்றனர். (சோமசுந்தரம் பிள்ளை (1941, ப. 247)

### போற்றலும் தூற்றலும்:

ஒரு சாரார் வடமொழியை உயர்ந்ததென்றும் தமிழ்மொழியைத் தாழ்ந்ததென்றும் கருதி வடமொழிச் சொற்களைத் தமிழில் புகுத்த

விழைந்த காரணத்தால் தமிழறிஞர்கள் தமிழ் மொழியே இனிமையானது, தொன்மையானது, வடமொழியின் துணையின்றித் தனித்து நடைபெறும் ஆற்றல் பெற்றது என்றெல்லாம் உயர்த்தியும் புகழ்ந்தும் கூறும் நிலை ஏற்பட்டது. வடமொழி, வடவர், வடபுலம் ஆகியவற்றைத் தாழ்த்தி தூற்றி, குறைகூற முற்பட்டனர்.

தூய தமிழுக்கான ஓர் இயக்கம் அண்மைக் காலத்தில் தோன்றியது. ஆனாலும் தென்னாடு-வடநாடு தென்மொழி-வடமொழி, தமிழர்-ஆரியர் என்ற முரண்பட்ட நிலையிலான ஆழமான பதிவுகள் தமிழிலக்கியத்தில் ஏராளம். கம்பராமாயணத்திலிருந்து ஓர் எடுத்துக்காட்டு: "வடதிசையிலிருந்து வானர வீரர்கள் இலங்கையை நாடிச் செல்கின்றார்கள். தென் தமிழ்நாட்டில் அமைந்த அகன்ற பொதிய மலையில் அகத்திய முனிவன் அமர்ந்திருக்கின்றான். அம்முனிவன் அமிழ்தினுமினிய தமிழ்மொழியை ஆதரித்து வளர்க்குமிடம் அதுவாகலின், வானரங்களே! அம்மலையை வணங்கி அப்பாற் செல்க" என்று கம்பர் கூறுகிறார். (ரா. பி. சேதுப்பிள்ளை, 1948). வடதிசையிலிருந்து வந்த வானரங்களை நோக்கிக் கம்பர் கூறிய கருத்து தமிழ்மொழிமீது அவர்க்கிருந்த அன்பைப் புலப்படுத்துகிறது. 'தென்பால் உகந்தாடும் தில்லைச் சிற்றம்பலவன்' என்று மணிவாசகர் தென்னாட்டைப் புகழ்ந்து பாடுகிறார். இன்னொரு எடுத்துக்காட்டு, "கோடன் என்னும் பெயருடைய குயவன் ஒருவன் நக்கீரரின் முன்னிலையில் தமிழ் மொழியைத் தீயதெனப் பழித்தும், ஆரிய மொழியை நல்லதெனப் புகழ்ந்தும் பேசினான். அதனால் கோபங்கொண்ட நக்கீரர் அவனுடைய தகாத செயலுக்காக அவனை இறந்துபோகும்படிச் சபித்தார். கோபம் ஆறி அமைதி அடைந்த பிறகு, அவனுக்கு அவர் மீண்டும், உயிர்ப்பிச்சை அளித்தார். அதன் வாயிலாக வாழவும் சாகவும் செய்யும் தெய்வீக ஆற்றல் தமிழ்மொழிக்கு உண்டு என்பதை அவனுக்குக் காட்டித் தமிழ்மொழியைப் போற்றிப் பயிலுமாறு அவனை மாற்றினார் என்று ஒரு கதை வழங்குகிறது (தொல். பொருளதிகாரம் 490-ஆம் சூத்திர உரையில் பேராசிரியர் மந்திரம் என்பதை விளக்குவதற்கு மேற்கோளாக இக்கதையை விளக்குகிறார் (துரை அரங்கசாமி, 1960, ப. 372) தமிழ்மொழி ஞாயிற்றுக்கு இணையானது, தன்னேரில்லாதது என்று தண்டியலங்காரம் புகழும். ஆரியர் என்ற சொல்லுக்குச் சங்ககாலத்தில் இருந்த சில பொருள்களுள் 'யானை பழக்குவோர்' மிலேச்சர் என்ற பொருள்களும் உள்ளன. இவையாவும்

தமிழ் - வடமொழிக்கிடையே நிலவிய மொழி உறவுக்கு அடிப்படைகளாகும். இதனடிப்படையில்தான் மொழித் தூய்மை செல்நெறி அமைந்தது.

இனி, மொழியியல் மொழித்தூய்மை குறித்தும், பிற மொழிச் சொற்கலப்பு குறித்தும் கூறும் செய்திகளை மேற்கண்ட செய்திகளோடு ஒப்பிட்டுக் காணலாம்.

## II தற்காலமொழியியல் : பண்புகள் :

மொழியியல் மனிதன் பேசும் இயற்கை மொழிகளை ஆய்வு செய்வதில் அக்கறை காட்டிய ஒரு துறையாகும். இவ்வுலகில் மனிதர்களால் சில ஆயிரம் மொழிகள் பேசப்படுகின்றன. அவை ஒவ்வொன்றும் தனித்தனி மொழிகள். எல்லா மொழிகளுக்கும் பொதுவாக இருக்கின்ற பண்புகளைக் கண்டறிவதில் மொழியியல் ஆர்வம் காட்டுகிறது. தேனீக்கள் மொழி, உடல்மொழி, கணிதமொழி போன்ற செயற்கை மொழிகள் உள்ளன. செயற்கை மொழிகளின் அமைப்பிற்கும் மனிதன் பேசும் இயற்கை மொழிக்கும் உள்ள வேறுபாடுதான் என்னென்ன என்பதைத் தெரிந்து கொள்வதுதான் மொழியியல். மொழியியலைப் பற்றி விமர்சிக்கும் சிலருக்கு இந்த உண்மை தெரியுமா என்பது சந்தேகம். தனிமொழிகளை ஆராய்ந்தே மொழிகளுக்கிடையேயுள்ள பொதுப்பண்புகளை அறிந்து கொள்ள முடியும். ஒரு மொழியை ஆராய்ந்து எழுதப்படும் இலக்கணத்தை விவரணை இலக்கணம் என்பர். பொதுப்பண்புகளை ஆராயும் மொழியியலைப் பொதுமொழியியல் என்று கூறுவர்.

மொழியியல் மொழியை உள்ளது உள்ளவாறு விவரிப்பதாகும். மொழியின் விதிகளைக் கண்டறிந்து சொல்வதுதானே தவிர மொழியை இப்படித்தான் பயன்படுத்த வேண்டும்! அதுதான் சரியான விதி என்றெல்லாம் மொழியின் மீது திணிக்கமுடியாது. மருத்துவ நோயாளிக்கு "இதைச் சாப்பிடு, அதைச் சாப்பிடாதே" என்று கூறுவது போல மொழியியல் எதையும் கூறாது. சமுதாய மொழியியலில் மொழித் திட்டமிடுதல் பற்றி விரிவாக ஆராயப்பெறும். மொழியைத் தரப்படுத்துவதால் கல்விப் பயன்கள் ஏற்படும், அலுவலகப் பயன்கள் மிகலாம், உலகில் பல மொழிகள் தரப்படுத்தப்பட்டுள்ளன. அரசாங்கமும் மொழித் திட்டமிடுவதில் உதவிகள் செய்துள்ளது.

தற்கால மொழியியலின் தந்தையான சசூர் இரண்டுவிதமான அணுகுமுறைகளை மொழியியலில் அறிமுகப்படுத்தினார்.

1. வர்ணனை அணுகுமுறை (Synchronic Approach)
2. வரலாற்று அணுகுமுறை ( Diachronic Approach)

ஒரு சமகால மொழியை ஆராய்ந்து இலக்கணம் எழுதுவது வர்ணனை இலக்கணம் எனப்படும். வரலாற்று ரீதியாக மொழிகள் அடைந்துவரும் மாற்றங்களை முன்நிறுத்தி இலக்கணம் வரைவது வரலாற்று மொழியியல் எனப்படும். சங்ககால மொழியைச் சங்க இலக்கியங்களைப் பகுத்து விவரிப்பது வர்ணனை இலக்கணம் எனலாம். சங்ககாலத் தமிழின் மொழிக்கூறுகளையும், இடைக்காலத் தமிழின் மொழிக்கூறுகளையும் ஒப்பீட்டு மொழிநிலையில் - அதாவது வாக்கிய அமைப்பு, சொல்லமைப்பு, பொருள், ஒலி அமைப்பு, சொற்றொகுதி ஆகியவற்றில் ஏற்பட்ட மாற்றங்களை விவரிப்பது வரலாற்று இலக்கணமாகும். வர்ணனை இலக்கணம் எழுதுவதற்கு வரலாற்று இலக்கணம் தேவையில்லை. ஆனால் வரலாற்று இலக்கணம் எழுதுவதற்கு வர்ணனை இலக்கணங்கள் தேவை. வரலாற்று மொழியியல் மொழித் தொடர்பு குறித்து விரிவாகப் பேசும்.

மொழித் தொடர்பும் கடன் வாங்குதலும்:

மொழிகளுக்கிடையிலும் கிளைமொழிகளுக்கிடையிலும் எப்பொழுதும் ஏதாவதொரு விதத்தில் தொடர்பு கண்டிப்பாக இருக்கும். ஏனெனில் மொழிகளும் கிளை மொழிகளும் அடுத்தடுத்துப் பேசப்படுகின்றன. சில மொழிகளுக்கிடையில் நெருக்கமான தொடர்பு இருக்கும். வேறு சிலவற்றுள் மிதமான தொடர்பு இருக்கும். தொடர்பின் தன்மை வேண்டுமானால் மாறுபடலாமேயொழிய தொடர்பு இல்லாமல் இருக்காது. மொழித்தொடர்கள் சாதாரண விளைவு சொற்களைக் கடன் வாங்குதலாகும் (Linguistic borrowing). தனிச் சொற்களையோ சொற்குழுக்களையோ ஏற்றுக் கொள்ளுதலாகும். சொற்களை அதிக அளவில் கடன் வாங்குவதினால் புதிய இலக்கணக் கூறுகளும் கடன் வாங்கப் பெறலாம். கடன் வாங்கப்பட்ட இலக்கணக் கூறுகள் மொழியின் பிற சொற்களுடன் சேர்ந்து இலக்கணத்திலும் மாற்றங்களை ஏற்படுத்தலாம்.

| | | |
|---|---|---|
| எ:கா: | தொகுப்பாளர் | தொகுப்பாளினி |
| | கவிஞர் | கவிதாயினி |

சொற்கள் கடன் வாங்கப்படுவதினால் புதிய ஒலிகள் மொழியில் அறிமுகப்படுத்தப்படும். ஏற்கனவே இருக்கிற ஒலிகள் புதிய சூழலில் பயன்படுத்தவேண்டிய நிலை ஏற்படுகிறது. ஆதலால் ஒலியமைப்பிலும் மாற்றங்கள் ஏற்படும்.

கடன் சொற்கள் பெரும்பாலும் அயல்மொழிகளிலிருந்தே பெறப்படுகின்றன. தமிழ் மொழியோடு தொடக்கக் காலத்தில் சமஸ்கிருதம், பாலி, பிராகிருதம் ஆகிய மொழிகள் தொடர்பு கொண்டன. பின்னர் அரபு, பாரசீகம், உருது, போர்ச்சுகீசு, பிரெஞ்சு, ஆங்கிலம் போன்ற அயல்மொழிகள் தொடர்பு கொண்டன. குடும்ப உறவுடைய மொழிகளிலிருந்தும் கடன் வாங்கப்படலாம். இவை தவிர ஒரே மொழி தனது மூதாதையர் (Ancestor) மொழியிலிருந்தும், கிளைமொழிகளிலிருந்தும் கடன் பெறலாம் என்று மொழியியல் அறிஞர்கள் கருதுகின்றனர்.

| | | |
|---|---|---|
| வேந்தர் | - | chancellor |
| மேதகு | - | excellancy |

தானைத்தலைவர்
எண்பேராயம்
ஐம்பெருங்குழு

ஆகிய சொற்கள் பழந்தமிழ்ச் சொற்கள். இவை தற்காலத் தமிழில் புதிய பொருளில் பயன்படுத்தப்படுகின்றன. ஒரு கிளைமொழியிலிருந்தும் சொற்கள் கடனாகப் பெறப்படலாம் என்று கூறினோம்.

எ-கா : வழமை
அவதானிப்பு
பாரிய (முயற்சி)

இச்சொற்கள் இலங்கைத் தமிழில் காணப்படுவன. இவை தமிழகத்திலும். சிலரது எழுத்துக்களில் காணமுடிகின்றன. மூதாதையர் மொழியிலிருந்தும் கிளைமொழிகளிலிருந்தும் பெறப்படும் சொற்கள் எதிர்ப்பைப் பெறுவதில்லை.

**தன்மயமாதல்: (Nativization):**

சொற்களைக் கடன் வாங்கும் மொழியின் அமைப்பிற்கேற்ப மாற்றிப் பயன்படுத்துவது ஒருவகை. விஷம் என்பது விடம் எனவும், விஷயம் என்பது விடயம் எனவும், பங்கஜம் என்பது பங்கயம் எனவும் மாற்றிக் கொள்வது. (Phonological Natioization) அயல்மொழிச் சொற்கள் எளிதாக உச்சரிப்பதற்கேற்பவும் அயல்மொழி ஒலிகள் ஒரு மொழியில் நுழைவதைத் தடுக்கவும் இம்மாற்றங்கள் மேற்கொள்ளப்படுகின்றன. அயல்மொழிச் சொற்களை ஒட்டுமொத்தமாகத் தவிர்த்து விட்டு சொந்த மொழிச் சொற்களைக் கொண்டு தன்மயமாதல் நடைபெறலாம். வேந்தர் என்ற சொல்லை chancellor என்ற பொருளில் பயன்படுத்தப்படுவதையும் சுனாமி என்ற சொல்லுக்குத் தோன்றிய ஆழிப்பேரலை என்ற சொல்லையும் கவனிக்க. இவ்வாறு சொல்லுருவாக்கத்தை 'loan shift' என்று கூறுவர். சுனாமி என்ற சொல்லுக்குத் 'துறைமுக அலை' என்று ஜப்பான் மொழியில் பொருள். ஆங்கிலத்தில் 'நிலநடுக்கத்தின் விளைவால் தோன்றிய அலை' என்று பொருள்.

அயல்மொழிச் சொல்லையும் பொருளையும் ஒரு சேர மொழி பெயர்த்துச் சொற்கள் உருவாக்குதல் இன்னொரு வகை. இதனைக் கடன் மொழிபெயர்ப்பு (loan translation or calques) என்பர். கீழ்க்காணும் எடுத்துக்காட்டுக்களைக் கவனிக்க:

| | | |
|---|---|---|
| Semi-final | - | அரை இறுதி |
| Final round | - | இறுதிச் சுற்று |
| Handcuff | - | கைவிலங்கு |
| Value added Tax | - | மதிப்பு கூட்டு வரி |

இம்முறையில் அயல் மொழிக் கூறுகள் மொழியில் நுழைவதில்லை.

**கடன் வாங்கும் காரணம்:**

தேவை காரணமாகச் சொற்கள் கடன் வாங்கப் படுகின்றன. தொழில் நுட்பம், சமயக் கருத்துக்கள், வெளிநாட்டு இடப்பெயர்கள் ஆகியவற்றைக் குறிக்கச் சொற்கள் கடன் வாங்கப்படலாம். ஒருமொழியை உயர்ந்த மொழி என்று கருதுவதாலும், அம்மொழியைப்

பயன்படுத்துவதால் மதிப்புக் கிடைக்கும் என்று நம்புவதாலும் கடன் பெறுதல் நடைபெறுகிறது. இக்காரணத்தினால் சில அடிப்படையான சொற்களும் தேவையில்லாத சொற்களும் கலந்துவிடுகின்றன. பெருமை காரணமாகப் (Prestige) பெறப்படும் கடன் சொற்களைத் தடுக்கவே மொழித் தேசியம் (Linguistic Nationalism) தோன்றுகிறது. தூய மொழி இயக்கமும் தோன்றுகிறது.

மொழித் தேசியமும் தூய்மையும்:

கடன் சொற்களை அவ்வாறே ஏற்றுக் கொள்வது (adoption) அல்லது சொற்களை நீக்கி அதன் பொருளைப் புதிய சொற்களை உருவாக்கி உணர்த்துவது (adaptation) என்பதை முன்பே குறிப்பிட்டோம். இரண்டாவது வகையை மொழித் தேசியம் என்பர். உலகில் பலமொழிகளில் தம் மொழியிலுள்ள கடன் சொற்களைக் களைகிற முயற்சியும் சொந்த மொழியின் சொற்களைக் கொண்டு புதிய சொற்களை உருவாக்குகிற முயற்சியும் நீண்ட காலமாகவே நடைபெற்று வருகின்றன. 16-ஆம் நூற்றாண்டிலிருந்து 19-ஆம் நூற்றாண்டு வரை ஐஸ்லாந்து (Iceland) மொழியில் ஏராளமாகக் கடன் சொற்கள் பெறப்பட்டனவாம். டேனிஷ், ஸ்வீடிஸ், நார்வே போன்ற மொழிகளிலிருந்து பெறப்பட்ட கடன் சொற்கள் படிப்படியாகக் களையப்பட்டன. தூய சொற்கள் உருவாக்கப்பட்டன. இந்த மொழி உணர்வு அந்நாட்டில் இன்றும் போற்றப்படுகிறது. ஜெர்மன் நாட்டில் 1648-க்கு முன்பு முப்பது ஆண்டுகள் நடைபெற்ற போர் முடிந்தபோது ஏராளமான பிரெஞ்சு மொழிச்சொற்கள் புகுந்தன. போர்க் காலத்தில் பிரெஞ்சு மொழிச் சொற்கள் பெருமையான மொழியாகக் கருதப்பட்டது. போர் முடிந்த பிறகு ஜெர்மன் நாட்டில் ஒவ்வொரு ஊரிலும் இயக்கங்கள் (clubs) தூய்மைப் போக்கினை வலியுறுத்திக் கடன் சொற்களுக்கு இணையான தனிமொழிச் சொற்கள் உருவாக்கப்பட்டன. இதுபோல பல நாடுகளில் மொழித் தேசிய உணர்வு தோன்றி ஓரளவிற்கு வெற்றி பெற்றுள்ளன. வேறு சில நாடுகளில் அயல்மொழிச் சொற்கள் நீக்க முடியாத நிலையும் காணப்படுகின்றது.

தமிழ்மொழியைப் பொறுத்தவரையில் கற்றோர் பேசும் தமிழிலும், தனியார் தொலைக் காட்சி நிகழ்ச்சிகளிலும் ஆங்கில மொழிச் சொற்கள் ஏராளமாகத் தேவையில்லாமல் கலந்து பேசப்படுகின்றன. தமிழ்மொழியின் இசையோட்டம் (Intonation) புறக்கணிக்கப்படுகின்றது. புதிய

இசையோட்டத்துடன் தமிழ் வாக்கியங்கள் உச்சரிக்கப்படுகின்றன. இதற்குக் காரணம் ஆங்கிலம் உயர்ந்த மொழி என்ற தவறான கருத்து நிலவுதலேயாகும். நமது மொழியில் உள்ள அடிப்படையான சொற்கள் கூடத் தவிர்க்கப்படுகின்றன. இத்தகைய நிலையை எதிர்கொள்ளத் தூய தமிழ் இயக்கம் தேவையே. அறிவியல், மருத்துவம், பொறியியல் போன்ற துறைசார்ந்த நூல்களில் கலைச்சொற்கள் தேவைக்கேற்பப் பயன்படுத்திக் கொள்வதில் தவறில்லை. ஆனால் தரமொழியில், பாடநூல்கள் போன்றவற்றில் பயன்படுத்தும் மொழியில் தூய்மை அவசியம் தேவையாகும்.

### துணைநூல்கள்


❖ அருணாசலம் பிள்ளை, அ. ''செந்தமிழ் நாடு'', மு. கதிரேசச் செட்டியார் அறுபதாம் ஆண்டு நிறைவு விழா மணிவிழா மலர், (1941)

❖ இராமமூர்த்தி, எல், மொழியும் அதிகாரமும், அகரம், தஞ்சாவூர் (2005)

❖ கார்த்திகேயன். ஆ, தமிழ் பிராகிருத உறவுகள், அகரம், தஞ்சாவூர் (2005)

❖ சேதுப்பிள்ளை, ரா.பி. தமிழ் இன்பம், பழனியப்பா பிரதர்ஸ், சென்னை (1997)

❖ சோமசுந்தர பாரதியார், ச. ''தமிழில் அயலவர் தொடர்பு'', அழகு, நாவலர் புத்தக நிலையம், (1955)

❖ சோமசுந்தரம் பிள்ளை, ''தமிழாசிரியரும் பிறமொழி கலந்து கற்பித்தலும்'', மு. கதிரேசச் செட்டியார் அறுபதாம் ஆண்டு நிறைவு விழா மணிவிழா மலர், (1941)

❖ திருவாசகம், கழக வெளியீடு, காசு பிள்ளை உரை, டி.டி.கே. சாலை, சென்னை (1991)

❖ துரை அரங்கசாமி, மொ.அ. சங்ககாலச் சிறப்புப் பெயர்கள், பாரிநிலையம், சென்னை-1. (1960)

❖ நடராசன், தி.சு. தமிழின் பண்பாட்டு வெளிகள், நியூ

செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை - 98 (2006)

❖ பரந்தாமனார் அ.கி., நல்ல தமிழ் எழுதவேண்டுமா? பாரிநிலையம் சென்னை-1 (1984)

❖ மறைமலை அடிகள், அறிவுரைக்கொத்து, பாரிநிலையம், சென்னை-1, (1921, ஒன்பதாம் பதிப்பு-1979).

❖ Hock, Hans Henrich, Principles of Historical Linguistics, Mouton de Gruyter. 1986.

❖ Lyons, John. Language and Linguistics, Cambridge University Press. 1981.



# 1. தனித்தமிழியல் நோக்கு : மொழித்தூய்மை

முனைவர் கு. திருமாறன்,
முதல்வர்,
ந.மு. வேங்கடசாமி நாட்டார்
திருவருட் கல்லூரி,
தஞ்சாவூர்.

முன்னுரை:

உலகமயம், கட்டிலாப் பொருளியல், நுகர்வியம் முதலியவற்றால் அமெரிக்காவும் பிற வல்லரசுகளும் தங்களின் பொருளியல் நலன்களுக்காக ஏனைய நாடுகளை, குறிப்பாக மூன்றாம் உலகநாடுகளைத் தங்களின் அடிமை நாடுகளாக்கிக் கொண்டிருக்கும் காலச்சூழல் இது. ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளையும் இலத்தீன் - அமெரிக்க நாடுகளையும் வல்லரசு நாடுகளின் பெருநிறுவனங்கள் தங்களின் வேட்டைக் காடாக்கிக் கொண்டிருக்கின்றன. பொருளியல் சுரண்டல் என்ற அளவில் அமையாமல் இவை உருவாக்கியுள்ள நுகர்வியப் பண்பாடு இறையாண்மையுடைய நாடுகளையும் அந்நாடுகளில் வாழும் தேசிய இனங்களையும் பண்பாட்டு நிலையிலும் அடிமை கொள்ளப்பார்க்கின்றன. இதனால் உலகின் பல்வேறு தேசிய இனமக்கள் தங்களின் தனித்தன்மைகளை, குமுக விழுமியங்களை, பண்பாட்டுச் சீர்மைகளை, மொழி மரபுகளை இழந்து வருவதோடு தங்கள் தேசிய இனவாழ்விற்கு அடிப்படையான மொழி, பண்பாட்டு அடையாளங்களையே இழந்து விடும் நிலைக்கு ஆளாகியுள்ளனர். இந்தியாவில் தமிழகத்தில்தான் இந்தப் போக்கு மேலோங்கியுள்ளது. தமிழர்கள் தங்கள் தாய்மொழியான தமிழைப் படிக்காமல் பிறமொழிகளைப் படித்தல், படித்தவர்களும், பணக்காரர்களும் தமிழில் பேசாமல் ஆங்கிலத்தில் பேசுதல், தமிழ் வழியில் படிப்பவர்களையும் தமிழில் பேசுபவர்களையும் இழிவானவர்களாக எண்ணுதல், தமிழில் பேசினாலும் ஆங்கிலச் சொற்களை மிகுதியும் கலந்து பேசுதல் முதலிய இயல்புகள் தமிழர்களிடத்தில் மிகுதியாகவுள்ளன. 'பயன்பாட்டில் இல்லாத எதுவும் முதலில் சிதையும், பின் தன்னிலை இழக்கும், இறுதியில் அழியும்' என்பது அறிவியல் உண்மை. இது மொழிக்கும் பொருந்தும். பிற மொழிகளின் மேலாண்மையினாலும் தங்கள்

தாய்மொழியில் பேசுவோர் எண்ணிக்கை குறைவதாலும் உலகில் சில மொழிகள் அழிந்து விட்டன, சில அழிந்து வருகின்றன.

'வரலாற்றின் நெடுகிலும் மொழிகள் அழிந்து போயுள்ளன. ஆனால் இப்பொழுது உலகை அச்சுறுத்துவது போன்ற மொழிகளின் பேரழிவை நாம் இதற்குமுன் எப்போதும் எதிர்கொண்டதில்லை. இப்போது கற்பனவற்றுள் பெரும்பகுதி எதிர்காலத் தலைமுறையினர்க்குக் கிட்டாது என்ற அவல உண்மையை மொழி வல்லுநர்களாகிய நாம் இதற்கு முன் எதிர்கொண்டதில்லை. நம் கண்முன்னரே பல இன மக்களின் பண்பாட்டு மரபுகள் நொறுங்கிக் கொண்டுள்ளன. இதனை அருகிலிருந்து கண்டுகொண்டே ஏதும் செய்யாமல் வாளா இருந்தோம் என்ற பழிக்கு நாம் ஆளாக விரும்புகிறோமா' என 'அருகி வரும் மொழி நிதியக்குழு' (Endangered Language Funds Committee) குறிப்பிடுகிறது.[1]

இத்தகைய காலச்சூழலில் மொழித்தூய்மை இயக்கம் குறித்த நேரிய, விரிவான புரிதலுக்குத் துணை செய்யும் நோக்கில் இவ்வாய்வுரை அமைகின்றது.

மொழித் தூய் மை:

தனித்தமிழியலாரின் மொழித்தூய்மைக் கருதுகோள்களை அறிவதற்கு முன் 'மொழித்தூய்மை' என்பதன் பொருள் யாது அல்லது அது எவ்வாறு புரிந்துகொள்ளப் பெற்றுள்ளது என்பதை அறிதல் நலம்.

மொழியைத் தூய்மைப்படுத்த - குறிப்பாகப் பிறமொழிச் சொற்களை நீக்க - அவ்வப்போது மேற்கொண்ட முயற்சிகளே தூய்மையம் (Purism) எனப்படுகிறது.[2]

பிறமொழிக் கடன்பேறுகள், பிறமொழிச் சொற்கள் ஆகியவற்றை இலக்கிய மொழியிலிருந்து நீக்கும் முயற்சிகள், மொழிக்குப் புறம்பான சொற்கூறுகள், இலக்கணக் கூறுகள் ஆகியன ஊடுருவாமல் தடுக்கும் முயற்சிகள் ஆகியனவே தூய்மையம் எனப்படும்.[3]

தூய்மையம் என்பது மொழியை வளப்படுத்துவதற்குத் தன்மொழி வாயில்களைத் திறத்தலும் பிறமொழி வாயில்களை

அடைத்தலும் எனலாம்.[4]

மொழித்தூய்மை முயற்சிகள் மொழிவளர்ச்சிப்போக்கில் ஏதேனும் ஒரு காலக்கட்டத்தில் பெரும்பாலும் எழுத்துவழக்குள்ள எல்லா மொழிகளிலும் நிகழ்ந்துள்ளன. இத்தகைய முயற்சிகள் தோன்றி வளர அகவியற் காரணிகளோ புறவியற் காரணிகளோ தூண்டலாக அமையலாம். அகவியற்காரணி என்பது மொழியின் அமைப்பாகும். புறவியற்காரணி குமுகாய, பண்பாட்டு, அரசியல், வரலாற்று அடிப்படையில் அமைவன.

**மொழித்தூய்மைச் சிந்தனை தோன்றுதற்குரிய அடிப்படைகள்:**

மொழித்தூய்மைச் சிந்தனை அல்லது கோட்பாடு தோன்றச் சில அடிப்படைகள் அல்லது காரணிகள் இருக்க வேண்டும் என வெக்சுலர் என்ற மொழியியலார் கருதுகிறார்.

அவை,

1. மொழி எழுத்து வழக்குடையதாக இருக்க வேண்டும்.
2. குமுகாய அமைப்பில் மாற்றம் நிகழ வேண்டும்.
3. புதிய செயற்பாடுகளை மொழி வெளியிடும் வண்ணம் புதுமைச்சூழல் நிலவ வேண்டும்.
4. மொழியின் தனித்தன்மை அழிந்துபடுமோ என்ற அச்சம் நிலவ வேண்டும்.
5. தங்கள் மொழிமீதும் பண்பாட்டின்மீதும் மக்கள் பெருமித உணர்வு கொண்டிருக்க வேண்டும்.[5]

**மொழிக்கலப்பும் எதிர்ப்பும்:**

மனித நாகரிக வளர்ச்சிப்போக்கில் ஒரு மொழி பேசும் மக்கள் பிறிதொரு மொழி பேசும் மக்களோடு தொடர்பு கொண்டனர். அரசியல், சமயம், வணிகம் முதலிய காரணங்களுள் ஏதேனும் ஒன்றால் அல்லது சிலவற்றால் அத்தொடர்பு ஏற்பட்டிருக்கலாம். அவ்வாறு இருவேறு மொழிகளைப் பேசும் மக்கள் கூடிப்பழகியதால் மொழிகளிடையே கலப்பு ஏற்பட்டது எனலாம். குமுகக் கலப்பால் புதிய பொருள்கள்

அல்லது புதிய கருத்துகள் ஒரு மொழியினருக்கு அறிமுகமாவதன் விளைவால் அப்பொருள்கள் அல்லது அக்கருத்துக்களைப் பெறும் குமுகத்தினர் அவற்றைக் குறிக்க வழங்கும் சொற்களைக் கடன்பெறல் நிகழ்கிறது. உலகின் எல்லா மொழிகளிலும் இக்கடன்பேறு நிகழ்ந்துள்ளது. மொழிக்கூறுகளைப் பிறமொழிகளிலிருந்து கடன் வாங்கித் தீரவேண்டிய தேவை ஒரு மொழியின் தேவையன்று. மாறாக அம்மொழியைப் பேசும் மக்கள் கூட்டத்தின் தேவையாகும். இத்தகைய கடன்பேறு தவிர்க்க இயலாத ஒன்று.

ஆனால் தேவை கருதி நிகழும் கடன்பேறு காலப்போக்கில் சமய, அரசியல் வல்லாண்மைகளால் தாய்மொழிச் சொற்கள் புறந்தள்ளப் பெற்றப் பிற மொழிகள் மேலாண்மையின் ஒரு கூறாக அமைந்துவிடுகிறது. தங்கள் மொழியின்மீது பற்றோ மொழிப்பெருமிதமோ இல்லாத மக்கள் பிறமொழிச் சொற்களை வரையறையின்றிக் கலந்து பேசுகின்றனர். தாய்மொழிச் சொற்களைப் பயன்படுத்துவதால் தாழ்நிலையில் இருப்பதாகக் கருதுதல், ஆளும் வகுப்பாரின் மொழியில் பேசுவதாலும் அம்மொழிச் சொற்களைப் பயன்படுத்துவதாலும் தாங்கள் மேம்பட்டவர்களாகக் கருதப்படுவோம் என்ற போலிமை எண்ணம், சமய உணர்வு காரணமாகத் தங்கள் தாய்மொழியல்லாத இன்னொரு மொழியை உயர்வானதாகவும் வழிபடும் கடவுளுக்கு உகந்ததாகவும் எண்ணும் மதமயக்கம், புதுமை வேட்கை, தம்மொடு வாழும் பிறரை விடக் கல்வியறிவில் மேலானவர்களாகக் காட்டிக்கொள்ள விழையும் குமுக மேட்டிமை நோக்கு முதலிய காரணங்களால் ஒரு மொழியில் பிறமொழிச் சொற்பயன்பாடு அல்லது கலப்பு எல்லை கடந்து போகும்போது அவ்வினைக்கு எதிர்வினையாக மொழித்தூய்மை முயற்சிகள் தோன்றுவது இயல்பானதாகவும் காலத்தின் கட்டாயமாகவும் அமைகின்றது. கல்விப் பரவலுக்காகவும், வணிக உறவுகளுக்காகவும் புதுமையாக்கத்திற்காகவும் தவிர்க்கவியலாத, தேவையான ஒன்றாக அமையும் மொழிக்கலப்பு ஆளும் வகுப்பாரின் வல்லாண்மைக் கருவியின் ஒரு கூறாகி ஆளப்படும் மக்களின் போலிமை மயக்காலும் அடிமையுணர்வாலும், 'மொழிக்கலப்பு, கடன்பெறு மொழியின் அடையாளம் தெரியாதவாறு அதனைச் சிதைத்து விடுகிறது, அதனால் தங்கள் மொழி அழிந்துபடும்' என்ற அச்சம் அம்மொழி பேசுவோரிடம் - பெரும்பாலோரிடம் இல்லாவிட்டால் - சிறுபான்மையினரிடமாவது

தோன்றும் சூழலில் தூய மொழிச் சிந்தனைகள் தோன்றித் தூயமொழி முயற்சிகள் வலிமையாகச் செயல்படுகின்றன.

## உலகமொழிகளில் தூயமொழி இயக்கங்கள்:

தூயமொழி இயக்கம் தமிழ்மொழிக்கு மட்டுமே உரிய ஒன்றன்று. உலகில் பல்வேறு மொழிகளில் அவற்றின் வளர்ச்சிப் போக்கில் ஏதேனும் ஒரு காலக்கட்டத்தில் தூயமொழி முயற்சிகள் தோன்றியுள்ளன. மலையாளம், கன்னடம், தெலுங்கு முதலிய திராவிட மொழிகளிலும் இந்தி, குசராத்தி, பஞ்சாபி, வங்காளி, திரிபுரி முதலிய பிற இந்திய மொழிகளிலும் தூயமொழி முயற்சிகள் தோன்றியுள்ளன. அரபு, சிங்களம், சீனம் முதலிய ஆசிய மொழிகளிலும் தூயமொழி முயற்சிகள் நிகழ்ந்துள்ளன. கொரிய மொழியைப் பொறுத்தவரையில் தென்கொரிய மறுமலர்ச்சி இயக்கத்தைத் தொடங்கிய தென்கொரிய ஆட்சித்தலைவர் விளம்பரங்கள் பாடநூல்கள் முதலியவற்றில் பிற மொழிச் சொற்கலப்பிற்குத் தடைவிதித்தார்.[6] சர். சான் செக் (Sir John Cheke) என்ற அறிஞர் ஆங்கிலத்தில் இலத்தீன் கிரேக்கக் கடன்பேற்றினைக் கடுமையாக எதிர்த்து, இயன்ற இடங்களில் எல்லாம் ஆங்கிலச் சொற்களைத் தேடிப் பயன்படுத்தினார். அவரைப் போன்றே வேறு சிலரும் 'பழைய வேர்ச் சொல்லடியாகப் புதுச்சொல் புனைந்தும் வழக்கிறந்த சொற்களை மீட்டும் ஆங்கிலத்தை வளர்க்கலாம் என நம்பினர்'[7] செர்மனியில் இலத்தீன் கிரேக்க மொழிச் சொற்கலப்பை மார்ட்டின் லூதர், லீப்னிசு (Gohfred Wilhelm Leibmiz), தொமாசியசு (Christian Thomasias) முதலியோர் எதிர்த்தனர்.[8] 'தாய்மொழியைத் தூய்மையுடனும் வலிமையுடனும் வளர்க்க வேண்டும் என்ற நோக்குடைய செருமனி மொழித்தூய்மை இயக்க ஆதரவாளராகக் கார்ல்மார்க்சு இருந்தார் என்பதும் 'மொழியின் செம்மைக்கும் தூய்மைக்கும் அவர் மிகுந்த முதன்மை கொடுத்தார்' என்பதும் குறிப்பிடத்தக்கன.

உருசிய இலக்கிய மொழியின் தந்தையாகவும் வழிகாட்டியாகவும் போற்றப்படும் உலோனமா னொசோவ் என்ற மொழியியல் அறிஞர் உருசிய மொழி 'தனக்குரிய உள்ளார்ந்த வளங்களில் இருந்துதான் வளர்ச்சிப்பெற வேண்டும். அயன்மையான அனைத்தையும் நீக்கி மொழியைத் தூய்மைப்படுத்த வேண்டும்' என்று கூறியதோடு அதற்கான முயற்சிகளையும் மேற்கொண்டார். பெலின்சுகி,

அலெக்சாண்டர் புசுகின், இலியோடால்சுடாய் முதலிய உருசிய எழுத்தாளர்கள் தூயமொழிக் கோட்பாட்டை ஆதரித்துள்ளனர். புகழ் மிக்க உருசிய இலக்கியரான மாக்சிம் கார்க்கி மொழித் தூய்மைக்காகப் போராடுவது பண்பாட்டுக் கருவிக்கான போராட்டம் என்று கருதினார். உலகின் மாபெரும் புரட்சியாளரான இலெனின் பிறமொழிக்கலப்பை மிகக் கடுமையாக எதிர்த்ததோடு, பிறமொழிக் கலப்பால் ஏற்படும் 'உருசிய மொழிச் சிதைப்பிற்கு எதிராகப் போர் தொடுக்க இது உரிய நேரமல்லவா?' என்று கேட்டுப் பிறமொழிக் கலப்பிற்கு எதிராகப் போர் தொடுக்குமாறு வலியுறுத்தினார்.[9] துருக்கி மொழி, பல்கேரிய மொழி, மாசிடோனிய மொழி, செர்பிய மொழி போர்ச்சுகீசு மொழி, இத்தாலிய மொழி முதலியவற்றில் அவ்வப்போது மொழித்தூய்மை முயற்சிகள் தோன்றியுள்ளன. எனினும் பிரெஞ்சு மொழியில் தான் 'முயற்சிகள்' என்ற நிலையைத் தாண்டி அமைப்புகள் வழியாக மொழித்தூய்மைக்கான செயற்பாடுகள் மேற்கொள்ளப் பெற்றன. 1635இல் பிரெஞ்சு மொழிக்கழகம் என்ற ஓர் ஆணையம் உருவாக்கப் பெற்றது. பிரெஞ்சுக் குடியரசுத் தலைவராக இருந்த டீகால் அறிவுரையின் பேரில் பிறமொழிச் சொற்களைக் களைந்து புதிய பிரெஞ்சுச் சொற்களை உருவாக்கி பிரெஞ்சு மொழிச் சொல்வளத்தை மேம்படுத்தப் பல்வேறு குழுக்கள் அமைக்கப்பெற்றன.[10]

ஆங்கிலச் சொற்களை அரசு அலுவலக மடல்களில் பயன்படுத்தக் கூடாது எனவும் அரசின் மொழித்துறை ஆணைய உறுப்பினர்கள் படைத்துத் தரும் பிரெஞ்சு மொழிச் சொற்களைத்தான் பயன்படுத்த வேண்டும் என்றும் பிரெஞ்சு அரசு ஆணை பிறப்பித்துள்ளது.[11] இவ்வாறு அரசின் ஆதரவோடு பிரான்சில் தூயமொழி இயக்கம் செயற்பட்டு வருகிறது.

பிரெஞ்சு மொழிக்கு அடுத்த நிலையில் தமிழ்மொழியில் தான் மொழிக்கலப்பிற்கு எதிரான தூயமொழி முயற்சி ஓர் இயக்கமாக மலர்ந்தது. ஒரு குமுக, அரசியல் இயக்கத்துக்குரிய உந்தாற்றலோடு இருபதாம் நூற்றாண்டில் செயற்பட்டது. அரசின் பெரிய அளவிலான ஆதரவின்றித் தனித்தமிழ் அமைப்புகள் பிறக்கலப்பிற்கு எதிராகவும் தமிழ்மொழியில் தூயமொழிச் சொற்களின் பயன்பாட்டை வலியுறுத்தியும், தொடர்ந்து செயற்பட்டு வருகின்றன.

## தமிழில் பிறமொழிக்கலப்பும், வல்லாண்மையும்:

கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலேயே மெசபடோமியா எகிப்து முதலிய நாடுகளுடன் தமிழர்கள் வணிகம் செய்தனர்.[12] அவ்வணிக உறவுகள் அயலவர் ஊடுருவலுக்கு இடம் தருவனவாய் அமையவில்லை. வடஇந்தியாவுக்கும் தமிழகத்திற்கும் வேதக்காலம் தொட்டு உறவுகள் இருந்தன. இராமாயணக் காலத்திற்குப் பின்னர் ஆரியர்கள் மிகுந்த எண்ணிக்கையில் தமிழகம் வந்தனர். தொல்காப்பியருக்கு முன்னரே ஆரியர்களின் தாக்கம் குறிப்பிடத்தக்க அளவு இருந்திருக்க வேண்டும். இதன் தாக்கம் மொழியிலும் நிகழ்ந்தது. எனினும் தமிழ்க்குமுகத்தில் சமஸ்கிருத ஊடுருவலும் தாக்கமும் அருகியே இருந்தன. கி.பி. மூன்றாம் நூற்றாண்டுவரை இந்நிலை தொடர்ந்தது.

களப்பிரர் காலத்திலேயே தமிழுக்கு இருந்த உயர்நிலை குறையத் தொடங்கியது. பல்லவர் காலத்தில் தொடக்கத்தில் பிராகிருதமும் பின்னர் சமஸ்கிருதமும் ஆட்சியாளரின் ஆதரவு பெற்றுத் தமிழின்மீது மேலாண்மை செலுத்தத் தொடங்கின.

பல்லவர் காலத்தில் தமிழர்களின் மொழி, இனத் தனித்தன்மை சீர்குலைந்தது. ஆரியப் பண்பாட்டின் தாக்கத்தால் தமிழர்கள் கடன்கொண்ட போலிமையான அயன்மை விழுமியங்களில் தங்களை இழந்தனர். வடக்குமொழிகளிலிருந்து செயற்கையாகவும் திட்டமிட்டும் பெற்ற சொற்களால் தமிழ் பாழ்படுத்தப் பெற்றது. அரசின் செலவில் சமஸ்கிருதம் ஆதரிக்கப் பெற்றது.

ஆட்சியாளரின் தமிழ்ப் புறக்கணிப்பிற்கு எதிர்க்குரல்களும் இக்காலத்தில் எழுந்தன. நாயன்மார்களும் ஆழ்வார்களும் தமிழ் வடமொழிக்கு நிகரானது எனவும், தமிழும் தெய்வமொழியே எனவும் பாடி தமிழின் பெருமைகளை உரத்து முழங்கினர். இவர்களின் பாக்கள் 'வடக்கு நோக்கிய அடிமை நோக்கிற்கு எதிராகத் தமிழ் மொழியின் வளமான பண்பாட்டை அரசியற் படுத்தின'[13] என்பார் அறிஞர் குணா.

தமிழ்ப் பேரரசர்களான பிற்காலச் சோழர் ஆட்சிக் காலத்திலும் வடமொழி வாணர்களின் மேலாண்மையும் வடமொழியின்

வல்லாண்மையும் மிகுந்தனவேஅன்றிச் சற்றும் குறையவில்லை. "வடமொழி தொடர்ந்து பெற்ற செல்வாக்கால் தமிழில் வடசொற்கலப்பு மிகுந்தது. பதினோராம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மணிப்பிரவாள நடை என வழங்கப்பட்ட புதிய நடைப்போக்கு தமிழகத்தில் தோன்றியது."[14]

வடசொற்களை அம்மொழிச் சிறப்பெழுத்துக்களை நீக்கித் தமிழ்எழுத்துக்களில் எழுதவேண்டும் என்ற தொல்காப்பிய விதிக்கு முரணாகப் பிறமொழிச் சொற்களைக் கிரந்த எழுத்துக்களில் எழுதும்நிலை தோன்றிவிட்டது.

இப்போக்குகளின் விளைவாக வடமொழி தமிழைவிட உயர்வானதென்று தமிழறிஞர்களே கூறும் அவலநிலை தோன்றிவிட்டது. கம்பர், சேனாவரையர், வீரசோழிய ஆசிரியர் புத்தமித்திரனார், வீரசோழிய உரையாசிரியர் பெருந்தேவனார் போன்றோர் வடமொழியை உயர்த்தினர்.

கி.பி. 13ஆம் நூற்றாண்டு முதல் 18ஆம் நூற்றாண்டு வரையிலான காலத்தில் தமிழகத்தில் இசுலாமியர், நாயக்கர், மராட்டியர் என அயலவர் ஆட்சிகள் ஏற்பட்டன. பிறமொழியாளர் குடியேற்றம் நிகழ்ந்தது. 'கன்னடம், தெலுங்கு, இந்துஸ்தானி, அரபு, மராட்டிரம் என்றினைய மொழிகள் தமிழன்னையின் சிறப்பினைப் பகிர்ந்து கொண்ட காலம் இது'[15] இம்மொழிச் சொற்கள் மிகப்பல தமிழில் கலந்து நிலைபெற்றதன் விளைவாகத் தமிழின் சீர்மை மிகுதியும் குன்றியது.

பதினேழாம் நூற்றாண்டைச் சேர்ந்த சாமிநாத தேசிகரும் சுப்பிரமணிய தீட்சிதரும் தமிழுக்கும் வடமொழிக்கும் இலக்கணம் ஒன்றே எனக் கருதினர். அருணகிரி நாதர், தாயுமானவர் முதலிய புலவர்கள் முழுப்பாடலையே வடசொற்களால் அதுவும் கிரந்த எழுத்துக்களைக் கலந்து எழுதினர்.

19-ஆம் நூற்றாண்டிற்குள்ளேயே அறிவுப்பணி என்பது ஏறத்தாழப் பார்ப்பனரின் முற்றுரிமை ஆகிவிட்டது. சமஸ்கிருதக் கல்வியே கல்வி என்ற நிலையும் ஆகிவிட்டது. இதேநிலை இருபதாம் நூற்றாண்டு வரை தொடர்ந்தது.

இப்போக்கிற்கு எதிராகப் பதினாறாம் நூற்றாண்டில் பரஞ்சோதி முனிவரும், பதினேழாம் நூற்றாண்டில் கருணைப்பிரகாசரும், தமிழின்

தெய்வத்தன்மையைச் சுட்டித் தமிழின் உயர்வை நிலைநாட்ட முயன்றனர். பத்தொன்பதாம் நூற்றாண்டில் வள்ளலார் இராமலிங்க அடிகள் தமிழின் உயர்வையும் ஆரியத்தின் குறையையும் சுட்டினார். 'தமிழ்ப் பாஷையே அதிசுலபமாக சுத்த சிவானுபூதியைக் கொடுக்குமென்பதாம்'[16] எனத் தமிழின் பெருமை சுட்டும் வள்ளலாரின் கூற்றிலும் பெரும்பான்மை வடசொற்களால் இருப்பது அக்காலத்துச் சமஸ்கிருத ஊடுருவல் எத்துணை வலியதாய் இருந்தது என்பதைக் காட்டும்.

ஆங்கிலேயர் ஆட்சியில் 19ஆம் நூற்றாண்டில் ஆங்கிலம் ஆட்சி மொழியாகவும், கல்வி மொழியாகவும் ஆனது. இதன் விளைவாக சமஸ்கிருதத்தின் மேட்டிமை நிலையை ஆட்சி, கல்வி நிலைகளில் கைப்பற்றிக் கொண்டாலும் சமய நிலையில் சமஸ்கிருதத்தின் மேலாண்மை இருபதாம் நூற்றாண்டிலும் தொடர்ந்தது.

### இருபதாம் நூற்றாண்டில் குமுக, அரசியல் சூழல்:

இவ்வரலாற்றுப் பின்னணியில் இருபதாம் நூற்றாண்டில் தனித்தமிழியக்கம் தோன்றுவதற்குரிய சூழல்களைக் காணலாம்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றிய ஆரிய சமாசம், பிரம்மசமாசம் முதலிய மதவழிப்பட்ட பண்பாட்டு ஒருமைப்பாட்டு இயக்கங்கள் ஓரிந்தியக் கொள்கைக்கு வித்திட்டன. 1855ல் தொடங்கப்பெற்ற இந்தியத் தேசியப் பேராயமும் அரசியலில் முற்போக்கானதாகவும் குமுகப் பார்வையில் மிகப் பிற்போக்கானதாகவும் இருந்தது. 1916இல் உள்ளாட்சிக் கழகம் (Home Rule League) எனும் அமைப்பைத் தொடங்கிய அன்னிபெசன்டு 'ஆரிய சம்பத்து' பற்றி உரத்து முழங்கினார். இதை எதிர்த்தவர்கள், தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தைத் தோற்றுவித்தனர்.

சமய நோக்கில் தமிழ் பயின்று, தமிழின் இயல்பறிந்த பெர்சிவல், வின்சுலொ, கால்டுவெல், போப் முதலிய ஐரோப்பிய அறிஞர்கள் வெளியிட்ட கருத்துகள் தமிழரிடம் அவர்தம் மொழி, இனம் குறித்த பெருமித உணர்வைத் தூண்டின. 1856இல் இராபர்ட் கால்டுவெல் வெளியிட்ட 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' தமிழ்மொழி இயக்கத்திலும் தமிழர் இயக்கத்திலும் முகாமையான இடம் பெற்றது.

'திராவிட மொழிகள் அனைத்திலும், உயர்தனிச் செம்மொழியாய் நிலைபெற்று விளங்கும் தமிழ், தன்னிடையே இடம்பெற்றிருக்கும் சமஸ்கிருதச் சொற்களை அறவே ஒழித்துவிட்டு உயிர்வாழ்வதோடு அவற்றின் துணையை ஒரு சிறிதும் வேண்டாமல் வளம்பெற்று வளர்வதும் இயலும்'[17] என்ற கால்டுவெல்லின் கருத்துத் தனித்தமிழியக்கத் தோற்றத்திற்குப் பெருந்தூண்டலாக அமைந்தது.

இதே காலத்தில் அதுவரை அச்சேறாத பல தமிழ்நூல்கள் அச்சேறின. தமிழறிஞர்கள் பழந்தமிழ் இலக்கண இலக்கியங்களைத் தேடித் தொகுத்து வெளியிட்டனர். சி.வை. தாமோதரனாரும், உ.வே.சாமிநாதரும் தொல்காப்பியம், சங்க இலக்கியங்கள் ஆகியவற்றை வெளியிட்டனர். அப்பழந்தமிழ் நூல்கள் தமிழ்மொழி, நாகரிகம், பண்பாடு ஆகியன குறித்து அதுவரை அறிந்திராத புதிய ஒளியைப் பாய்ச்சின. சமஸ்கிருதச் சார்பில்லாத தமிழ் இலக்கியங்கள் கிறித்துவிற்கு முன்பே இருந்தன. அவை செம்மைசான்ற சீரிய இலக்கியங்கள் என்பதும் தமிழறிஞர்களுக்குக் கிளர்ச்சியூட்டின.

சங்க இலக்கிய வெளியீடும் ஐரோப்பிய அறிஞர்களின் தமிழ்மொழி, இனம் குறித்த கருத்துரைகளும் தமிழின் தனித்தன்மை, மேன்மை முதலியன குறித்த கருத்தியல்கள் தோன்றவும் அவை மொழிசார் இயக்கமாக மலரவும் நல்ல சூழலைத் தந்தன.

ஆங்கிலேயர் ஆட்சியில் பதவி பெறுதல் ஒன்றை குறிக்கோளாகக் கொண்டு கல்வி பயின்ற மேட்டுக்குடியினர் ஆங்கிலவழிக் கல்வி பயின்றதோடு ஆங்கிலம் ஒன்றையே கற்றுத் தாய்மொழியாகிய தமிழ்க்கல்வி தேவையன்று எனக்கருதி அதைப் புறக்கணித்தனர். 'பல்கலைக்கழகத்தில் தமிழை ஒரு மொழியாகப் படிக்க ஆங்கில அரசு வாய்ப்பளித்திருந்தது. அந்த வாய்ப்பையும் நீக்கிவிடச் சமஸ்கிருதப் பற்றாளர் ஆங்கில அரசிடத்தும் பல்கலைக்கழகத்தினிடத்தும் தமக்கிருந்த செல்வாக்கைப் பயன்படுத்தினர்'[18] எம்.எசு பூரணலிங்கனாரும், பரிதிமாற் கலைஞரும் இம்முயற்சியை முறியடித்தனர். இத்தகைய முயற்சிகள் தமிழர் உள்ளங்களில் சமஸ்கிருத எதிர்ப்புணர்வு தோன்றத் தூண்டலாயின.

இந்திய விடுதலை இயக்கம் முன்னேறிய காலக்கட்டத்தில் இந்தியத் தேசியத்தை உருவாக்கி வளர்க்கும் முயற்சிகள்

முனைப்பாயின. அதே சமயம் இந்தியா முழுமையும் மொழிவழித் தேசிய உணர்வுகளும் மலர்ந்தன. அதன் ஒரு பகுதியாக இந்திய விடுதலைப் போராளிகளான வ.உ. சிதம்பரனார், சுப்பிரமணிய சிவா, சுப்பிரமணிய பாரதியார், திரு.வி. கல்யாணசுந்தரனார் முதலியவர்கள் தமிழைக் காக்க வேண்டும் எனவும் தமிழர் மேம்பட வேண்டும் எனவும் எழுதினர். மேடைகளில் முழங்கினர். அதே காலக்கட்டத்தில் இந்தியத் தேசியத்தை ஏற்காது தமிழரின் தனித்தேசிய இனத்தன்மையை எடுத்துக் காட்டித் தமிழ்த்தேசிய உணர்வு வெளிப்படுத்தப் பெற்றது. பேராசிரியர் சுந்தரனார் இவ்வியக்கத்தின் முதல்வர் எனலாம். இத்தகைய மொழிவழித் தேசிய மலர்ச்சிக் காலம் தூயமொழி முயற்சிகள் தமிழில் தோன்றி வளர ஏற்றதாக அமைந்தது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலும் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் ஐரோப்பியர் தொடர்பாலும் ஆங்கிலக் கல்வியின் விளைவாலும் தமிழில் பல புதுமைகள் நிகழ்ந்தன. அறிவியல் தமிழ் நூல்கள், அகராதிகள், புதினம், சிறுகதை, நாடகம் முதலிய புதிய இலக்கிய வகைகள் முதலியன எழுதப் பெற்றன. தமிழில் பருவ இதழ்களும், நாளிதழ்களும் வெளியிடப் பெற்றன. இங்ஙனம் பல்வேறு துறைகளின் செயற்பாட்டுக்கு உரிய கருவியாகத் தமிழ் திகழ வேண்டியதாயிற்று. தமிழறிஞர்கள் புதுமையாக்கத்திற்கான தமிழின் தகுதிப்பாடு குறித்தும் தமிழின் பிறமொழிச் சொற்பயன்பாடு குறித்தும், புதுமையாக்கத்திற்கேற்பத் தமிழைச் செழுமைப்படுத்துதல் குறித்தும் எண்ணினர். கருத்துகளை வெளியிட்டனர். இப்புதுமையாக்கமும் தமிழின் தூயமொழி முயற்சிகள் தோன்ற ஒரு தளத்தை அமைத்துத் தந்தது.

**தனித்தமிழியக்கத் தோற்றமும் வளர்ச்சியும்:**

தொல்காப்பியர்கால முதல் பிறமொழிக் கலப்பைத் தவிர்க்கவும், ஒரு குறிப்பிட்ட வரம்பிற்குள் கட்டுப்படுத்தவும் முயற்சிகள் மேற்கொள்ளப் பெற்றன. எனினும் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தான் தமிழில் தூயமொழி முயற்சிகள் அரும்பி அறிஞர்கள் கடைப்பிடியாக மலர்ந்து பின்னர் இயக்கமாக வளர்ந்தது. இதில் தேவநேயப் பாவாணர் ஆகியோரின் முயற்சி குறிப்பிடத்தக்கது.

'தமிழ் தெய்வவணக்கம்' பாடிய மனோன்மணீயம் சுந்தரனாரின் தனித்தமிழியத்தைத் தோற்றுவித்த மறைமலையடிகளின் தமிழ்ப் பெருமிதச் சிந்தனைக்குத் தூண்டுகோலாக அமைந்தது. சூரியநாராயண சாத்திரியார் 'பரிதிமாற்கலைஞர்' என தூயதமிழ்ப் பெயர் பூண்டதும் குறிப்பிடத்தக்கது.

1908ஆம் ஆண்டில் விருதைச் சிவஞான யோகிகள் முயற்சியால் அமைந்த 'திருவிடர் கழக'த்தின் நோக்கம், குறிப்பு, கட்டளைகள் என்பனவெல்லாம் தனித்தமிழாக உள்ளன. அமைப்பு நிலை தனித்தனிழைப் பயன்படுத்தும் முயற்சியாக அது அமைந்தது.[19]

இந்திய விடுதலைப் போராளி சுப்பிரமணிய சிவா தான் நடத்தும் 'ஞானபானு' இதழில், 'உங்களால் தனித்தமிழில் எழுதமுடியுமா? முடியுமானால் முந்துங்கள், சமஸ்கிருதம் முதல் அந்நிய பாஷைச் சொற்களில் ஒன்றும் கலவாது தனித்தமிழில் நமது 'ஞானபானு'வில் எட்டுப்பக்கத்திற்குக் குறையாது தமிழ்பாஷையின் சிறப்பைப் பற்றியாவது திருவள்ளுவ நாயனாரின் சரித்திரத்தையாவது எழுதுவோருக்கு ரூபா ஐந்து இனாமளிப்பதாக தமிழபிமானியொருவர் முன்வந்திருக்கிறார். சமஸ்கிருதச் சொல்லாகிய கஜம் திரிந்து கயம் என்றாகியிருப்பது போன்ற திரிபுச் சொற்களும் உபயோகப்படுத்தலாகாது. சுருக்கத்தில், எந்தப் பாஷையின் சொற்களுக்கும் சம்பந்தமில்லாத தனித்தமிழ்ச் சொற்களே உபயோகப்படவேண்டும்'[20] என்று வெளியிட்ட விளம்பரமும், அவ்விளம்பரத்தை வெளியிடச் 'சுதேசமித்திரன்' உரிமையாளர் கட்டணம் கேட்டதும், சிவா தன் நோக்கம் குறித்துத் தெளிவுபடுத்தி மடல் எழுதியபின்னும் 'சுதேசமித்திரன்' இதழ் அதனை வெளியிடாததும் சுப்பிரமணிய சிவா, 'சுதேசமித்திரன்', 'இந்துநேசன்' ஆகிய இதழ்களின் மொழிநடையைக் கண்டித்து எழுதியதையும் ம.பொ.சிவஞானம், பெ.சு. மணி ஆகியோர் தங்கள் நூல்களில் விரிவாகத் தந்துள்ளனர்.[21]

கி.பி. 1916ஆம் ஆண்டில் ஒருநாள் இராமலிங்க அடிகளின் 'பெற்ற தாய் தனை மகமறந்தாலும்' என்ற பாடலைப் பாடுங்கால் 'உற்ற தேகத்தை உயிர் மறந்தாலும்' என்ற அடியைச் சொன்னபோது தன் மகள் நீலாம்பிகையை நோக்கி, 'அம்மா இப்போது நான் பாடின பாட்டை இராமலிங்க அடிகள் எவ்வளவு அழகாய்ப் பாடியிருக்கிறார்கள்! ஆனால் அப்பாட்டின் இரண்டாம் அடியிலுள்ள 'தேகம்' என்ற சமஸ்கிருதச் சொல்லை நீக்கி 'யாக்கை' என்னும் தனித்தமிழ்ச் சொல்லை

அமைத்துப் பாடியிருந்தால் இன்னும் எவ்வளவு நன்றாகயிருக்கும்! தமிழில் வடசொற்களைச் சேர்ப்பதால் தமிழ் தன் இனிமை இழந்து போவதோடு பல தமிழ்ச் சொற்களும் வழக்கில் இல்லாமல் போகின்றன' என்றார். அது கேட்ட நாள் முதல் மறைமலையடிகளும் நீலாம்பிகையாரும் தனித்தமிழிலேயே பேசவும் உறுகொண்டனர்.[22]

மறைமலையடிகள் இளமைப் பருவத்தில் ஆழ்ந்துகற்ற தமிழ்க்கல்வி, அவர் ஆசிரியர் சூளை சோமசுந்தர நாயகரின் அறிவுரை, பேராசிரியர் சுந்தரனார், பரிதிமாற்கலைஞர் ஆகியோரோடு கொண்ட தொடர்பு, அவர் மேற்கொண்ட சங்க இலக்கிய ஆய்வுகள் முதலியனவற்றின் தூண்டல்களாக அமைந்ததன் விளைவாகவே மறைமலையடிகளின் தனித்தமிழ்க் கடைப்பிடியும் தனித்தமிழியக்கமும் தோன்றியிருக்க வேண்டும்.

தனித்தமிழ்ப் பற்றுறுதியின் தொடர்ச்சியாக சுவாமி வேதாசலம் 'மறைமலையடிகள்' ஆனார். சமரச சன்மார்க்க சங்கம், 'பொதுநிலைக்கழகம்' ஆனது. ஞானசாகரம் இதழ் 'அறிவுக்கடல்' ஆயிற்று. அவர் மக்களின் பெயர்களும் தனித்தமிழாக மாற்றம் பெற்றன. மறைமலையடிகளும் நீலாம்பிகையாரும் எழுதும் படைப்புகள் அனைத்தையும் தனித்தமிழில் எழுதவும், சொற்பொழிவுகளைத் தனித்தமிழில் நிகழ்த்தவும் உறுதிபூண்டு செயற்பட்டனர். முன்பே வெளியிட்ட நூல்களையும் வடசொற்களை விலக்கித் தனித்தமிழாக்கி வெளியிடுவதை மரபாகக் கொண்டார் மறைமலையடிகள்.

மறைமலையடிகளார் தோற்றுவித்த இத்தனித்தமிழியக்கம் முதலில் சில தமிழறிஞர்களாலும் இந்தியத் தேசியத்தாராலும் எதிர்ப்புக்காளானது. ஆனால் பல தமிழறிஞர்களின் ஆதரவைப் பெற்றது. தொடக்கத்தில் தமிழறிஞர்கள், தமிழாசிரியர்கள் ஆதரவுடன் மட்டும் செயற்பட்ட தனித்தமிழியக்கம் தமிழ்த்தேசிய உணர்வு கொண்ட திராவிட இயக்கத்தவர் ஆதரவால் பொதுமக்களிடையே - குறிப்பாக இளைஞர்களிடையே பரவி தூயதமிழில் பேசுதல், எழுதுதல், தூயதமிழ்ப் பெயர் மாற்றம் செய்தல் என வளர்ந்தது.

தேவநேயப் பாவாணர் தலைமையில் 'உலகத் தமிழ்க்கழகம்' தோன்றி அமைப்பு நிலையில் தனித்தமிழியக்கம் விரைவாகவும் எழுச்சியுடனும் செயற்பட்டது. பெருஞ்சித்திரனாரின் 'தேன்மொழி'

இதழ் இவ்வகையில் பெரும்பாடாற்றியது. பின்னர் தமிழியக்கம், உலகத்தமிழின முன்னேற்றக் கழகம் முதலிய அமைப்புகள் தனித்தமிழ் பரப்பும், வளர்க்கும் நோக்கில் செயற்பட்டன. தமிழ்ச்சிட்டு, தமிழ் நிலம், தமிழம், மீட்போலை, வெல்லும் தூயதமிழ், தெளிதமிழ், நற்றமிழ், தமிழியக்கம் முதலிய தனித்தமிழ் இதழ்கள் விளங்கின.

இவ்வரலாற்றுப் பின்புலத்தில் தனித்தமிழியலாரின் தூயமொழி குறித்த நோக்கினை ஆராய்தல் 'மொழித்தூய்மை' பற்றிய தெளிவுபெறத் துணை செய்யும்.

தனித்தமிழியலாரின் மொழித்தூய்மைக் கொள்கை:

தனித்தமிழியக்கத் தந்தை எனப் போற்றப்பெறுவர் மறைமலையடிகள். அவர் தம் படைப்புக்களைத் தனித்தமிழில் எழுதுவதோடு அவற்றில் தனித்தமிழ்க் கொள்கையை வலியுறுத்தினார். விளக்கமாக விரித்தெழுதினார். அவரின் தமிழிற் பிறமொழிக் கலப்பு, தமிழ்மொழிச் சீர்திருத்தம், தனித்தமிழ் மாட்சி, தனித்தமிழும் கலப்புத்தமிழும் ஆகிய கட்டுரைகள் அவரது கொள்கை விளக்கங்களாக அமைந்தன. 'தமிழ் மக்கள் வழங்கிவந்த தமிழிற் பிறமொழிச் சொற்கள் சில வந்து கலக்கலானது இயற்கையேயாம்'[23]

'ஒரு மொழி வழங்கும் தேயத்தில் உள்ளார் புதிதாக ஒரு பண்டத்தைக் கண்டுபிடித்துச் செய்து அதற்குத் தமது மொழியிற் பெயரும் இட்டுப் பிறகு அதனை வேறு தேயங்களிற் கொண்டுபோய் விலைப்படுத்துங்கால் அப்பண்டத்தின் பெயர் வேற்றுமொழியில் கலத்தல் இயற்கையேயாம். இத்தகைய நிகழ்ச்சிகளிலும் கூடப் புதுப்பண்டங்கள் வாங்கும் மற்ற நாட்டவர் நாகரிகமும் உயர்ந்த அறிவும் உடையராயிருந்தால் அவற்றிற்குத் தமது மொழியிலே புதுப்பெயரிட்டு வழங்குவர்.'[24]

'பிற சொற்களை எடுத்து வழங்குவதற்கு இன்றியமையா இடங்கள் என்பன புதுப்பொருளைக் கூறுதற்குத் தமிழில் உள்ள சொற்களை எவ்வளவு முயன்று பார்த்தும் அவை அதற்கு இசையா நேரங்களேயாம். முயற்சியும் அறிவும் உடையவர்கள் கருத்து வைத்தால் எத்தகைய புதுப்பொருள்கட்குந் தமிழிலேயே பெயரமைக்கலாம் என்பதே நமது கொள்கை.'[25]

'இன்றியமையா வேற்றுமொழிச் சொற்களைச் சேர்க்க வேண்டிவந்தக்கால், அதன் இயல்புக்குப் பொருந்தினவற்றையே சேர்த்தல் அழகுடைத்தாம்'.[26]

ஓர் உடம்பின் உள்ளும் புறமும் உள்ள உறுப்புகள் எல்லாவற்றின் தொகுதியே அவ்வுடம்பாதல் போல ஒரு மொழியில் உள்ள அதன் எல்லாச் சொற்களின் தொகுதியே அம்மொழியாகும். இயற்கைச் சொற்களால் அமைந்ததாகிய தமிழில் பிறமொழிச் சொற்களைப் புகுத்துதல் எதுபோலிருக்கிறதென்றால் எல்லாவுறுப்புகளும் அமைந்த அழகியதோர் உடம்பில் உள்ள உறுப்புகளை வெட்டியெறிந்துவிட்டு வேறு மண்ணாலும் மரத்தாலும் செயற்கையாக அவ்வுறுப்புகள் போல் ஒட்டவைத்துப் பார்த்தலுக்கே ஒப்பாகின்றது.'[27]

மேற்சுட்டிய மறைமலையடிகளின் கூற்றுகளிலிருந்தும் ஏனைய படைப்புகளிலிருந்தும் அவரது தனித்தமிழ்க் கொள்கையைப் பின்வருமாறு சுருக்கிக் கூறலாம்.

அ) தமிழில் பிறமொழிச் சொல் கலப்பது இயற்கை.

ஆ) தமிழில் படைக்க முயன்றும் முடியாத நிலையில் பிறசொற்களை வழங்கலாம். முயன்றால் எப்பொருளுக்கும் தமிழில் பெயரமைக்கலாம், எக்கருத்தையும் தமிழ்ச்சொற்களால் விளக்கலாம்.

இ) அயல்மொழிச் சொற்களைத் தமிழியல்புக்கேற்ப மாற்றியே வழங்கல் வேண்டும்.

ஈ) அயல்மொழிச் சொற்களை, உருவு திரிந்தவற்றையும் அளவுக்கு மிஞ்சிச் சேர்த்தல் கூடாது.

உ) இருக்கும் தமிழ்ச் சொற்களை விடுத்துப் பிறமொழிச் சொல்லைப் பயன்படுத்தவே கூடாது.

ஊ) வேண்டாத பிறமொழிச் சொற்களைக் கலப்பது தமிழின் எழிலுக்குக் கேடு, மொழிக்குச் சிதைவு, அச்செயல் பெருங்குற்றம்.

எ) ஆரியம், ஆங்கிலம் முதலிய பிறமொழிச் சொற்களைக்

கலவாமல் தனித்தமிழில் பேசவும் எழுதவும் கடைப்பிடியாய்ப் பழகிவரல் வேண்டும்.

மறைமலையடிகளின் தனித்தமிழ்க் கொள்கையை ஏற்ற தனித்தமிழியக்கத்தை வளர்த்த பா.வே. மாணிக்கநாயகர், ந.மு. வேங்கடசாமியார், சோமசுந்தர பாரதியார், பாரதிதாசன், அ. சிதம்பர நாதர், மகிழ்நன், இளவழகனார், மா. இராசமாணிக்கனார், சி. இலக்குவனார், சுந்தர சண்முகனார், மு. வரதராசனார், இ.மு. சுப்பிரமணியனார், கீ. இராமலிங்கனார், வ.சுப. மாணிக்கம் முதலிய தமிழறிஞர்கள் மறைமலையடிகளின் கருத்துக்களையே பெரும்பாலும் தமது கருத்துக்களாகவும் தெரிவித்துள்ளனர்.

'தனித்தமிழ்தான் என் முதற் குறிக்கோள்' என அறிவித்துத் தனித்தமிழுக்காக 'உலகத் தமிழ்க் கழகம்' எனும் அமைப்பை உருவாக்கி, அதன் தலைவராகச் செயற்பட்டுத் தமக்கென தனித்தமிழியக்கத்துக்கென ஒரு தொண்டர் அணியைத் திரட்டி அதனை ஓர் இளைஞர் இயக்கமாக, மக்கள் இயக்கமாக மாற்றியவர் தேவநேயப் பாவாணர்.

மொழிஞாயிறு எனப் போற்றப்பட்ட அவர் 'மறைமலையடிகளின் குறிக்கோள் தமிழைப் பிறமொழிச் சொற்கலப்பின்றி முழுத்தூய்மையாகப் பேசவும் எழுதவும் வேண்டும் என்பதே. அதை அவர்கள் நிறைவேற்றி விட்டார்கள். அதனால் பெரும்பயன் விளையாது. சமஸ்கிருதம் தேவமொழி என்று திருக்கோயில் வழிபாட்டு மொழியாக இருக்கும்வரை தமிழுக்கு வளர்ச்சியோ முன்னேற்றமோ இராது.

என் குறிக்கோள் தமிழைத் திராவிடத்தாயாகவும், ஆரியத்தின் மூலமாகவும் உலகறிய நாட்டி அதை வடமொழிப் பிணிப்பினின்று அடியோடு மீட்பதே.'[29]

'தமிழை மீட்பதே என் வாழ்க்கைக் குறிக்கோள். தமிழ் உயர்ந்தால்தான் தமிழன் உயரமுடியும். அதற்குத் தமிழர் இனி எல்லா வகையிலும் தமிழையே போற்றுதல் வேண்டும்.'[30]

பாவாணரின் மேற்சுட்டிய கூற்றுகள் 'தனித்தமிழில் பேசுதல், எழுதுதல்' எனும் மொழிக்கலப்பு நோக்கம் என்பதைத் தாண்டித்

தமிழ் மீட்பு, தமிழ் வளர்ச்சி, தமிழர் உயர்வு, தமிழின விடுதலை என்பனவும் தனித்தமிழியக்க நோக்கங்களாக அமைந்தன என்பதைப் புலப்படுத்தும்.

தனித்தமிழியக்கத்தார் எதிர்கொண்ட மாற்றுக் கருத்துக்களையும் தாக்குதல்களையும், அவற்றுக்கு எதிராக அவர்கள் முன்வைத்த மறுமொழிகளையும் எடுத்துரைத்து ஆராய்ந்தால் தனித்தமிழியக்கம் பற்றியும் மொழித்தூய்மைக் கோட்பாடு குறித்தும் துல்லியமான புரிதல் கிடைக்கும். கட்டுரையின் விரிவஞ்சி அவை விலக்கப்பெறுகின்றன.

எனினும் தூயமொழிக் கோட்பாடு எம்மொழிக்கும் பகையானதன்று. மக்களுக்குப் புரியாததன்று, எதிரானதுமன்று, அறிவியல் உண்மைக்கு முரணானதோ அறிவியல் வளர்ச்சிக்கு எதிரானதோ அன்று, மொழியின் இயற்கைக்கு முரணாகச் செயற்கையான ஒன்றன்று. நடைமுறைக்கு ஒவ்வாததன்று, செயற்படுத்த முடியாததும் அன்று, குறுகிய நோக்குடையதும், பிற்போக்குத்தன்மை கொண்டதுமன்று என்பதைத் தனித்தமிழியலார் வலிவாகவே தெளிவுபடுத்தியுள்ளனர் என்பது மனங்கொள்ள வேண்டிய ஒன்று.

முடிவுரை:

கடந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் தனித்தமிழியக்கம் காலத்தின் கட்டாயமாக இருந்தது போன்றே, இன்று அதன் எழுச்சியும் இன்றியமையாததாக உள்ளது. அன்று வடமொழியின் வல்லாண்மை தமிழின் கழுத்தை நெரித்துக் கொண்டிருந்தது. இன்றோ தமிழின் உயிர்மூச்சையே நிறுத்தும் வண்ணம் ஆங்கில வல்லாண்மை மேலோங்கியுள்ளது. முன்னர் உயர்சாதியினரிடமும் மேட்டுக் குடியினரிடமும் வடமொழி அடிமைத்தனம் மேலோங்கியிருந்தது. இன்று எளிய, நாட்டுப்புற மக்களிடமும்கூட ஆங்கில மயக்கம் மேலோங்கியுள்ளது. தமிழர்கள் தங்கள் தாய்மொழி தமிழ் என்பதையும் மறந்து தாங்கள் தமிழர்கள் என்பதையும் மறந்து தங்கள் அடையாளங்களையும் விழுமியங்களையும் இழந்து போய்விட்டனரோ என அஞ்சவேண்டிய அவலநிலை தோன்றியுள்ளது. தமிழர்தம் பேச்சு மொழியாகத் ‘தமிங்கிலம்’ வன்மையாக மாறிவருகிறது.

இந்நிலை தொடரவும் மேலும் வலிமை பெறும் வகையிலும் தமிழ்த்தாளிகைகளும் திரைப்படங்களும் தொலைக்காட்சிகளும் 'திருப்பணி'யாற்றி வருகின்றன. இத்தகு சூழலில் மொழித்தூய்மைக் கோட்பாடு பற்றித் தெளிந்துணரல் தமிழுக்கும் தமிழர்க்கும் உதவும்.

நாம் உருசிய மொழியைக் கெடுக்கிறோம், தேவையின்றிப் பிறமொழிச் சொற்களைப் பயன்படுத்துகிறோம், அவற்றையும் தவறாகப் பயன்படுத்துகிறோம். . . . தேவையற்ற பிறமொழிச் சொற்கள் எனக்கு எரிச்சலூட்டுகின்றன. ஆனால் செய்தித்தாள்களில் எழுதுவோர் செய்யும் தவறுகள் என்னை உண்மையாகவே சினமடையச் செய்கின்றன.

உருசிய மொழிச் சிதைப்பிற்கு எதிராகப் போர்தொடுக்க உரிய நேரமல்லவா இது.'[31]

ஆம்! சோவியத்துப் புரட்சியாளர் இலெனின் கேட்ட அதே கேள்வியைத்தான் தனித்தமிழியலார் தமிழர்களை நோக்கிக் கேட்கின்றனர்.

## சான்றெண் விளக்கம்


1. Opening Statement by Endamgered Language Funds Committee, Quoted by David Crystal, Preface: Language Death.
2. Cudden, J.A, A Dictionary of Literary Terms, P.542.
3. Great Soviet Encyclopaedia, Volume 21, P.20.
4. Wexler Paul, Purism and Language, P.11.
5. Ibid, P.315-316.
6. தமிழமல்லன், க., தனித்தமிழ், ப.90.
7. Bangh, A.C., A History of English Language, P.277.
8. அகத்தியலிங்கம், ச., உலகமொழிகள் - முதல்பகுதி, ப.98.
9. Lenin, V.I, Lenin on Language, P.253.
10. Brune D Besse, "Terminology Committees in France; Balance and Perspectives" International Journal of Socialogy of Languages, No.23. மேற்கோள் :

குழந்தைசாமி, வா.செ., 'அறிவியல் தமிழ், ப.40.
11. The Hindu, 31.12.1985.
12. Srinivasa Iyengar, P.T., History of Tamils, P.39.
13. Guna, Asiatic Mode: A Socio-Cultural Perspective, P.124.
14. மீனாட்சி சுந்தரனார், தெ.பொ., தமிழ் மொழி வரலாறு, ப.275.
15. தமிழண்ணல், 'புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, பக்.275-276.
16. திரு அருட்பிரகாச வள்ளலார், திருவருட்பா உரைநடைப்பகுதி, 1981, ப.216.
17. கால்டுவெல் இராபர்ட், திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் (தமிழில்: கா. கோவிந்தன், க. இரத்தினம்). ப.69.
18. சிவஞானம், ம.பொ., விடுதலைப் போரில் தமிழ் வளர்ந்த வரலாறு, ப.44.
19. இளங்குமரன், இரா., மறைமலையடிகளார் தனித்தமிழ்க் கொள்கை, ப.55.
20. சுப்பிரமணிய சிவா, ஞானபானு, சூலை, 1915. மேற்கோள்: மணி. பெ.சு., வீரமுரசு சுப்பிரமணிய சிவா, பக்.308-09.
21. விரிவான செய்திகட்குக் காண்க - முன்னே சுட்டப்பட்ட பெ.சு. மணியின் நூல், ம.பொ., சிவஞானம் எழுதிய இந்திய விடுதலைப் போரில் தமிழ் வளர்ந்த வரலாறு.
22. நீலாம்பிகை அம்மையார், 'தனித்தமிழ்க் கட்டுரைகள்', முகவுரை.
23. மறைமலையடிகள், அறிவுரைக் கொத்து, பக்.94-95.
24. மேற்படி.
25. மேற்படி.
26. மேற்படி.
27. மேற்படி, பக்.101-102.
28. பாவாணர், பாவாணர் கடிதங்கள், ப.136.
29. மேற்படி, ப.190.
30. பாவாணர், முதன்மொழி (இதழ்), 15.2.1971.
31. Lenin, V.I., Lenin on Language, P.253.

## 2. தனித்தமிழியல் நோக்கு : மொழித்தூய்மை

முனைவர் கு. பூங்காவனம்,
தமிழ்ப் பேராசிரியர் (ஓய்வு),
பெங்களூர்.

அண்மையில் *'சிக்கன் குனியா'* என்னும் முடக்குக் காய்ச்சல் தென் மாநிலங்களிலும். 'டெங்கு' என்னும் தாங்காக் காய்ச்சல் (Danga (Spanish) > Dengue) வடமாநிலங்களிலும் பரவி வாட்டின. இவ்வாறே அவ்வப்போது வயிற்றுக் கழிச்சல் 'பிளேக்கு' என்னும் கொள்ளை நோய் முதலானவை தொற்றிப் பரவித் துன்புறுத்துவதையும் காண்கிறோம். இத்தகைய நோய்த் தொல்லைகள் மிகவும் பரவிப் பலர் துன்புறும் போதும் இறப்புக்கு ஆளாகும் போதும் துப்புரவையும் தூய்மையையும் பேண வேண்டும் என்பது வலியுறுத்தப்படுகின்றது.

இயங்கி வண்டிகள் மிகப் பலவாகப் பெருகி வருகின்றன. அவற்றின் புகையும் ஓசையும் மாசுகளைப் பெருக்குவதுடன் சுற்றுச் சூழலையும் சீர் குலைக்கின்றன. அதனால் உயிரினங்களின் உள, உடல், உயிர் முதலானவற்றிக்கு நலக்கேடுகள் சூழ்கின்றன.

எனவே,
இடத்தூய்மை வேண்டும்!
உடைததூய்மை வேண்டும்!
சுற்றுச் சூழலும் சீராக அமைந்து நலக்கேடு
உண்டாகாதவாறு பாதுகாக்கப் படவேண்டும்!

என்னும் உண்மைகள் மிகப் பலவாகத் துன்பங்களும் நோய்களும் இறப்பும் பெருகிய பின்னரேனும் உணரப்படுகின்றன.

இவற்றிற்கெல்லாம் அடிப்படையாகவும், மூலமாகவும், ஊற்றுக்கண்ணாகவும் அமைவது எண்ணத் தூய்மை என்பதையும், எண்ணத்தூய்மையை உண்டாக்குவதும் காப்பதும் வளர்ப்பதும் விரிவாக்குவதும் மொழித்தூய்மையே என்பதையும் நாம் உணர்தல் வேண்டும். அவ் உணர்வைப் பெறுதற்கான ஒரு தூண்டுகோலாக இந்த ஆய்வுரை அமையும்.

புகுந்த சனியன் எது?

ஓராண்டுக்கு முன்னர் நடந்த ஒரு நிகழ்ச்சி.

ஒரு பொதுக்கூட்ட நிகழ்ச்சியிற் கலந்து கொண்டு பேசினேன். நிகழ்ச்சி முடிந்த பின்னர் ஓரளவு அறிமுகமாகியிருந்த நண்பர் ஒருவர் புன்சிரிப்புடன் வந்தார். கைகளைப் பிடித்துக் குலுக்கினார். 'மிக நன்றாகப் பேசினீர்கள். ஆனால் இன்னும் கொஞ்சம் எளிமையாய் எல்லார்க்கும் புரியுமாறு பேசியிருக்கலாம்' என்றார். 'அப்படியா? புரியாதது எது?' என்றேன். 'ஐயம் என்று சொன்னீர்கள், அகவை என்றீர்கள். 'சந்தேகம்' 'வயது' என்றால் எளிதாகப் புரியுமே' என்றார்.

அந்த நண்பர்தம் குடும்பத்தைப் பற்றி எனக்குத் தெரியும். அவருடைய தாத்தா மைசூர் அரசருக்குச் சமமாக வாழ்ந்த செல்வர் எனக் கேள்விப் பட்டுள்ளேன்: அவர்தம் தந்தையாரை அறிவேன். அவர் குதிரைப் பந்தயப்பித்துடையவர். குன்றனைய செல்வம் முழுவதையும் குதிரைப் பந்தயத்தில் இழந்துவிட்டு ஒருநாள் மாரடைப்பால் இறந்து போனார். நண்பரின் தாயார் பெயரில் இருந்த வீடும், முறை மன்ற வழக்கில் இருந்த நான்கு கடைகளும்தாம் குதிரைப் பந்தய இழப்பிலிருந்து தப்பின, அவையே இன்று அந்நண்பரின் வாழ்க்கை நடப்புக்கு உரியவையாகவும் உள்ளன. அந்த நண்பரும் பெருமையுணர்வுமிக்கவர். கைப்பொருள் இருந்தால் பிறருக்கும் சேர்த்துச் செலவு செய்வார். இன்னொருவர் செலவில் தேநீரும் குடிக்க மாட்டார். அவரைச் சுற்றி வாழ்பவர்களில் பலர் அவர்தம் குடும்பத்துக்குக் கடன் பட்டுள்ளனரேயன்றி, அவர் பிறர் உதவியையோ கடனையோ ஏற்காதவர்.

அந்த நண்பரைப் பற்றிய இவ்வளவு செய்திகளும், எனக்கு ஏற்கனவே தெரிந்திருந்ததால், 'எளிமையாய்ப் பேசியிருக்கலாமே' என்று அன்புடன் கூறிய அவருக்கு விடை சொல்வது எனக்கு எளிதாய் விட்டது. அவருக்கு அளித்த விடையின் சுருக்கம் வருமாறு.

தமிழ் மிகவும் பழமையான மொழி,வளமான மொழி, பிறமொழிக் கடன் வேண்டாத மொழி, இருக்கும் செல்வ வளத்தையும் இழந்து விட்டுப் பிறமொழிச் சொற்கள் கடனாகத் திணிக்கப் படுகின்ற மொழி. அதனால் தான்,

'சந்தேகம்' என்னும் வடமொழிச் சொல் எளிதாகப் புரிகிறது, ஐயம் தெளியவில்லை!

அகவையை மறக்கடித்து விட்டு 'வயது' வந்து புகுந்து கொண்டது!

நம் வாழ்க்கையில் மகிழ்ச்சியைத் தொலைத்து விட்டுச் 'சந்தோச'மாக இருக்கிறோம்.

சினம் சென்ற இடத்தில் 'கோபம்' புகுந்து கொண்டுள்ளது.

நாம் இரக்கப் படவும் முடியாதவாறு 'பரிதாபத்துக்கு ஆளாகிவிட்டோம்.

இவ்வளவு எளியவையான அடிப்படை மாந்த உணர்வுகளை வெளிப்படுத்துவதற்குக் கூட நாம் பிறமொழிக் கடனை ஏற்க வேண்டுமா? என்று கூறி முடித்தேன்.

பழமையான செல்வ வாழ்வும் குடிப்பெருமையும் மிக்க அந்த நண்பர் தலையை ஆட்டி மகிழ்வாய் ஒப்புக் கொண்டு, கடனாக வந்து புகுந்த 'சனியன்' களை அறியாதது நம் தவறுதான் என்று கூறிவிட்டு முகமலர்ச்சியுடன் சென்றார்.

'சனியன்' என்றதால் இங்கே இன்னொன்றையும் நினைவு கூர்தல் தகும். கிழமைக்குரிய ஏழு நாள்களின் பெயர்களில் 'புதன்' 'சனி' என்பவை இரண்டும் வடமொழிப் பெயர்கள். எஞ்சியவை ஐந்தும் தமிழ். எனவே சில ஆராய்ச்சியாளர்கள் தமிழர்களுக்கு ஐந்து நாள்கள் மட்டுமே தெரிந்திருந்தது. வடமொழியாளர் தொடர்புக்குப் பின்னரே கிழமைக்கு ஏழுநாள் என வகுத்துக் கொண்டனர் என்றெல்லாம் கூறி வரலாற்றை மறைக்கவும் முற்பட்டனர். காரி, மைம்மீன் என்பன சனிக்கு முந்திய தமிழ்ச் சொற்கள். புறநானூறு முதலான பண்டைய இலக்கியங்களில் காணப்படுபவை. 'புதனு'க்கு முந்திய தமிழ்ச் சொல்லான அறிவன் என்பதற்கு 'மதிமகன்' என்று திவாகர நிகண்டு பொருள் உரைக்கின்றது.

தமிழ்ச் சொல் மறைப்பு வரலாற்று மறைப்புக்கும் இருட்டடிப்புக்கும் வழிவகுக்கின்றது என்பதையும் அறிய முடிகின்றது.

## உலகின் முதல் குடியாட்சி முறை:

அண்மையில் தமிழக ஊராட்சி, நகராட்சி, மாநகராட்சி இவற்றிற்கான தேர்தல் நடைபெற்றது. அரசு அறிவிப்புகளில் மட்டும் ஊராட்சி, நகராட்சி எனக் குறிக்கப்பட்டாலும், பலருடைய நாவிலும் பஞ்சாயத்து, பஞ்சாயத்துபோர்டு, பஞ்சாயத்து எலக்சன் பஞ்சாயத்து போர்டு மெம்பர், ஓட்டு, வாக்கு என்பனவாகிய சொற்களே வழங்கின.

சோழர்கள் காலக் கல்வெட்டுகளிலும் செப்பேடுகளிலும் 'குடவோலை' முறை பற்றிக் குறிக்கப்பட்டுள்ளது. குடியாட்சி முறையில் ஊராட்சி மன்றத் தேர்தல் நடை பெற்றதையும், போட்டியிடும் வேட்பாளருக்கான தகுதிகளையும் கமுக்கமுறைத் தேர்தல் நடைபெற்ற பாங்கையும், ஐம்பெருங்குழு, எண்பேராயம் என்னும் ஊராட்சி மன்றக் குழுக்களையும் பற்றி நாம் அறிந்து கொள்கின்றோம். அதுமட்டுமன்றி, உலகில் கொடுமையே மிகுந்த முடியாட்சி நடைபெற்ற அக்காலத்தில் குடியாட்சித் தேர்தல் முறை பற்றி நாம் அறிந்து வியப்பும் அடைகின்றோம்.

ஊராட்சிக் குழுக்களாகிய ஐம்பெருங்குழு என்பதில் ஐந்தைப் 'பஞ்ச' என வடமொழியிற் பெயர்த்தும், எண்பேராயம் என்பதில் உள்ள ஆயம் என்பதை அதனுடன் ஒட்டியும் 'பஞ்சாயத்து' என்னும் புதிய இருபிறப்பிச் சொல் உருவாக்கப்பட்டது.

Vote என்னும் ஆங்கிலச் சொல் கமுக்க முறைத் தேர்தல் வருமுன் கையைத் தூக்கிக் காட்டும் ஒப்புதலைக் குறிப்பது 'வாக்கு' என்பது வாய்மொழியாய்க் கூறும் உறுதியையும் ஒப்புதலையும் குறிப்பது. பழந்தமிழ்ச் சொல்லான குடவோலை என்பதைக் காலமுறைக்கேற்றவாறு சற்று மாற்றி ஒப்போலை எனக் குறிப்பதே 'ஓட்டு' 'வாக்கு' என்பவற்றிக்கு நேரான தமிழ்ச் சொல் ஆகும்.

இப்படி வழங்கும் முயற்சிதான், உலகின் முதற் குடியாட்சி முறைக்குச் சொந்தக்காரர்கள் நாம் என்னும் உரிமை உணர்வைத் தூண்டுவதாகும்.

## உலகமொழிகளும் தமிழும்:

உலக மொழிகள் மூவாயிரத்துக்கு மேற்பட்டவை எனப்படுகின்றது. மொழிகள் பொதுவாக,

1. அமைப்பு முறை
2. ஒலிப்பு முறை
3. தோற்றம்
4. தொன்மை
5. சொற்றொகுதி
6. இலக்கண அமைப்பு

என்னும் பல நிலைகளால் வேறுபடுகின்றன. அவையே, மேலும்,

1. நாகரிக வளர்ச்சி
2. மெய்யியல், அறிவியல் முதலான கருத்துப் பெருக்கம்
3. ஆட்சிச் சார்பு
4. வாழ்க்கை முறை

என்பனவாகிய நிலைகளால் பாதிக்கப்படுகின்றன.

இம் மொழிகளிடையே தமிழ்மொழியின் நிலை எத்தகையது என்பது பற்றிச் சற்று எண்ணிப் பார்த்தல் வேண்டும்.

தமிழ் மிகப் பழமையானது, வளமானது எனப் பொதுவாக இன்று ஏற்கப்படுகின்றது. ஆயின், மிகப்பெரும் வரலாற்றுப் பின்னணியுடைய பிறமொழித் தாக்கத்தால் தமிழ்க் குடும்ப மொழிகள் சிதைந்து, வடமொழிச் சார்பின்றி வாழவும் வழங்கவும் முடியாத திராவிட மொழிகள் என ஒருபுறமும், ஓரளவு பாதிப்புக்கு உள்ளானாலும் தனித்தன்மையைக் காத்துக் கொண்டு வீறுடன் திகழும் தமிழ் ஒருபுறம் எனத் தமிழ்க்குடும்ப மொழிகள் பிரிந்து பிளவு பட்டன. தமிழ்க்குடும்ப மொழிகளைச் சிதைத்ததும், அதன் காரணமாகத் தமிழைத் தனிமைப் படுத்தியதும், வந்து புகுந்து தாக்கிய வடமொழிக்குக் கிடைத்த பெரு வெற்றியாகும். தனித்தன்மையுடன் தற்காத்துக் கொண்டதே தமிழுக்குக் கிடைத்த அளவான வெற்றியாகும்.

இந்நிலையில், சமய வழிப்பட்ட மேலாண்மையாலும், அன்றைய ஆட்சியாளர்களின் துணையாலும், வடமொழி தேவமொழி என்பதும், அதனால் அது பிறமண்ணுலக மொழிகளிடம் இருந்து கடன் பெறாது என்பதும் ஆகிய மாயைகள் உருவாக்கப்பட்டன. இம்மாயையினால் அதுவே வழிபாட்டுமொழி, கரண (சடங்கு) மொழி என்னும் நிலைக்கு உயர்த்தப் பட்டு, அந்நிலைகளிலிருந்து தமிழ்

வெளியேற்றப்பட்டது.

வடமொழிச் சார்பாக உருவாக்கப்பட்ட மாயைகளை முதன் முதலில் உடைத்தெறிந்த பெருமகனார் திராவிடத் தந்தை கால்டுவெலார் ஆவார். அவரே, வடமொழித் துணையின்றித் தமிழ் தனித்து இயங்க வல்லது என்பதையும், முத்து, ஆணி முதலான தமிழ்ச் சொற்கள் பல வடமொழிக்குச் சென்றுள்ளன என்பதையும் ஆராய்ச்சி முடிவாக வெளிப்படுத்தியவர்.

பின்னர், தமிழின் சில மூலக் கூறுகளைத் தனித்தனியே ஆழமாக ஆராய்ந்து தமிழே உலக முதன்மொழியாய் இருக்கலாம் அல்லது உலக முதன்மொழிக்கு மிக நெருக்கமானதாகலாம் என்னும் கருதுகோள்களை முதலில் வெளியிட்டவர்கள் மாகாரல் கார்த்திகேயனாரும் அருள் தந்தை ஞானப்பிரகாசரும் ஆவர்.

ஆயின் தமிழ்மொழிக் கூறுகளுடன் நிலஅமைப்பு, உயிரியல் வரலாறு, பண்பாட்டு வளர்ச்சி, மாந்த வரலாறு என்னும் பன்முக ஆய்வின் வழி, உலகில் மாந்தன் தோன்றிய இடம் குமரிக்கண்டம், உலக முதல் மாந்தன் தமிழன். உலக முதன்மொழி தமிழ் என்னும் உண்மைகளைத் தம் வாணாள் முழுதும் மேற்கொண்ட ஆய்வுகளால் கண்டறிந்து கூறிய பெருமகனார் பாவாணர் ஆவார். அவரே உலகமொழிகள் அனைத்தும் இயன்மொழி, திரிமொழி என்னும் இரண்டு வகைக்குள் அடங்கும் என்றும் கூறினார்.

இயன்மொழியும் திரிமொழியும்:

- இயற்கையாய்த் தோன்றி வளர்ந்தது
- முந்தியது
- வேறுமொழிகளின் பிறப்பிற்கு இடமானது
- பிறமொழித் துணை வேண்டாதது
- மொழிக்குடும்பத்தின் தலைமைப் பண்புடன் அம்மொழிக் குடும்ப மூலங்கள் அனைத்தையும் கொண்டிருப்பது
- இருவகை வழக்கிலும் இருப்பது

என்னும் தகுதிகளை உடையது இயன்மொழி என்றும், இல்லாதது திரிமொழி என்றும் அறிந்து கொள்ளுதல் வேண்டும்.

ஆங்கிலம் மேலையாரியக் குடும்பத்தில் ஒருதிரிமொழி, கன்னடம் தெலுங்கு மலையாளம் ஆகிய இவை திரவிட மொழிக்குடும்பத்தின் திரிமொழிகள், உலகமொழிகளில் தமிழ் ஓர் இயன்மொழி, என வேறுபாடறிதல் வேண்டும்.

மேலும் இயன் மொழியின் இன்றியமையாக் கூறுபாடுகள் யாவை எனவும், தமிழ்மொழி இயன்மொழிக் கூறுபாடுகளைக் கொண்டிருக்கும் பாங்கையும் காண்போம்.




இவற்றை ஒவ்வொன்றாகக் காணலாம்.

1. இயற்கை ஒலியமைப்பு (அ) பெரு முயற்சி ஏதும் தேவை இன்றி, எல்லாப் பருவத்தினரும் எளிதாக ஒலிக்கத்தக்க அடிப்படையான முப்பது ஒலிகளே உயிர், மெய் என்னும் வகைகளில் அமைந்த ஒலிப்பு முறை தமிழில் உள்ளமை.

(ஆ) ஒலிப்புமுறையில் இயல்பையும் எளிமையையும் பேணும் வகையில்,

மொழி முதல் எழுத்துக்கள்,

இறுதி எழுத்துக்கள்,
இடைநிலை மெய்ம்மயக்க எழுத்துக்கள்
புணர்ச்சியில் எழுத்துக்கள் அடையும் மாற்றங்கள்

முதலான கூறுபாடுகளைத் தமிழ் கொண்டிருத்தல்.

## 2. எதிர்கால வளர்ச்சிக்கு ஏற்றதாதல்:

மாந்த நாகரிகத்தில் மாற்றமும் வளர்ச்சியும் இடைவிடாது நிகழ்ந்து கொண்டேயுள்ளன. இவற்றிற்கு ஏற்றவாறும் ஈடுகட்டும் வகையிலும் அமைந்த கூறுபாடுகள் தமிழில் காணப்படுகின்றன. சில எடுத்துக் காட்டுகளாவன:

(அ) 'அம்மா!' 'அம்மா!' என்பன வியப்புணர்வை வெளிப்படுத்தும் சொற்கள் வியப்புக்கரியதும் பெரிதுமாகிய ஒன்றைக் காணும்போது, 'அம்மாடி!' 'அம்மாடியோய்!' என்று கூறி வியப்புணர்வை வெளிப்படுத்துவதை இன்றும் காணலாம். இவை வியப்பிடைச் சொற்கள் எனப்பட்டன. இவை 'அம்' எனக் குறுகி, அக்குறுகிய ஒரு சொல்லுடன் இணைந்து பெருமைப் பொருளைச் சுட்டுவதற்குப் பயன்படுவதால் 'அம்' என்பது பெருமைப் பொருட் பின்னொட்டு எனப்பட்டது.

(எ-டு) வானம்
நிலம் என்பன.

அவ்வாறே, இவ்வளவு, இத்தினியூண்டு என்பவை 'இ' என நின்று சிறுமைப் பொருட் பின்னொட்டாகின்றது.

(எ-டு) சிறுமி, ஈ.

இது கணினி உலகக் காலம். Website என்பதும் வானளாவ விரிந்த ஒரு கணினித் தொடர்பு பற்றி எழுந்த சொல். அந்த அண்டத்திற்குள் உரிய அடையாளத்துடன் யார் வேண்டுமானாலும் புகுந்து விளையாடலாம்!.

அதனைக் குறிப்பதற்கான தமிழ்ச் சொல்லாக உருவாகியுள்ள வலையம் என்னும் இன்றைய புத்தாக்கச் சொல்லிலும் அதே பெருமைப் பொருட் பின்னொட்டுச் சேர்ந்து அதே பெருமைப் பொருளைச் சுட்டுகின்றது.

முதல் நிலையில் அமைந்த கணிப்பொறி பெரும் பூதவடிவுடன் பேரிடத்தில் அமைக்கப்பட்டது.

நாளடைவில் அது சுருங்கிச் சிறுத்து இன்று மடியிலும், கையடக்கமாகவும் வைத்து இயக்கத்தக்கவையாய் அமைப்பில்

சிறுத்துள்ளது. கணினி என்னும் இப்புத்தாக்கச் சொல்லில் 'இ' என்னும் சிறுமைப் பொருட் பின்னொட்டு அமைந்து அப்பொருளையே சுட்டுவதையும் காண்கிறோம்.

எதிர்கால வளர்ச்சிக் கூறுகளுக்கு இடமளிக்கும் வகையில் அமைந்தனவாகிய இத்தகைய இடைச் சொற்களும் பின்னொட்டுகளும் மிகப் பலவாய்த் தமிழில் காணப்படுவதால், எதிர்கால மொழித் தேவையை நிறைவு செய்ய முடிகின்றது.

முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம் பொருளாகவும், பின்னைப் புதுமையையும் ஏற்க இடந்தருவதாகவும் திகழ்வது தமிழ்மொழி என்பதை அறியலாம்.

### 3. மாறாத மாந்த உணர்வு வெளிப்பாடுகள்:

ஓர் இனத்தின், இடையீடும் தடையும் இல்லாத் தொடர்ச்சியான நாகரிகப் பண்பாட்டுக் கூறுகளின் படப்பிடிப்பாகவும், உணர்வுக் குறியீட்டு வெளிப்பாடாகவும் அமைந்த நிலையான உணர்வுத் தெறிப்புகள் அவ்வினத்தின் மொழிவழியாகவும் இலக்கியங்களின் வாயிலாகவும் காணப்படும். கால மாற்றத்தினால் மாந்த வாழ்வில் எத்தகைய பெரு மாறுதல்கள் உண்டானாலும், அடிப்படையான அவ் உணர்வுக் கூறுகள் இயன்மொழிகளில் செறிவாகக் காணப்படும்.

தமிழ் ஓர் இயன்மொழியாதலால் மாறாத அடிப்படை உணர்வுக் கூறுகள் பலவற்றைப் பழந்தமிழ் இலக்கியங்கள் கொண்டுள்ளன.

தமிழர்தம் அகவாழ்வுக் கூறுபாடுகளின் மேம்பாடுகள் அளவிலாச் சிறப்புடையன. பிற இனத்தாரிடம். எத்தகைய திருத்தமான அகவாழ்வுச் சிறப்புகளும் இன்றி, காட்டுவிலங்காண்டித்தனமே காணப்பட்ட அக்காலத்தில், தமிழரின் அகவாழ்வுச் சிறப்பை ஒப்பிட்டுக் காணும் போதுதான் அச்சிறப்பை அறிய முடியும். தமிழ் இலக்கிய இலக்கணங்கள் கூறும் முதற்பொருள் கருப்பொருள் வரையறைகள் காலமாற்றத்தால் அடிப்பட்டுப் போனாலும் உரிப் பொருள் என்னும் மென்பொருள் தமிழரின் மிக உச்சமான அக வாழ்வியலைக் காட்டுவதாகும்.

அவ்வாறே, மாறாத அடிப்படை உணர்வைத் தாங்கி நிற்கும் இரண்டு புறநானூற்றுப் பாடல்களை இங்குச் சான்றாகக் காணலாம்.

(1) அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவின்
எந்தையும் உடையேம் எம்குன்றும் பிறர் கொளார்
இற்றைத் திங்கள் இவ்வெண் நிலவின்
வென்றெறி முரசின் வேந்தர்எம்
குன்றும் கொண்டார் யாம் எந்தையும் இலமே

புறநானூறு 112
பாரிமகளிர்

(2) இனி நினைந் திரக்கம் ஆகின்று திணிமணல்
செய்வுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத்
தண்கயம் ஆடும் மகளிரொடு கைபிணைந்து
தழுவுவழித் தழீஇ தூங்குவழித் தூங்கி
மறைஎனல் அறியா மாயம்இல் ஆயமொடு
உயர்சினை மருதத் துறைஉறத் தாழ்ந்து
நீர்நணிப் படிகோடேறிச் சீர் மிகக்
கரையவர் மருளத் திரையகம் பிதிர
நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து
குளித்து மணற்கொண்ட கல்லா இளமை
அளிதோ தானே யாண்டுண்டு கொல்லோ
தொடித்தலை விழுத்தண் டூன்றி நடுக்குற்று
இரும் இடை மிடந்த சிலசொற்
பெருமூ தாளரேம் ஆகிய எமக்கே.

புறம் 243
தொடித்தலை விழுத்தண்டினார்.

இவ்விரண்டு பாடலும் அவலச் சுவையை உட்கொண்டுள்ளன.

முதற்பாடல் உரிமைத் தந்தையார் இழப்பையும் உடமையிழப்பையும் நாட்டுரிமை இழப்பையும் வெளிப்படுத்துகின்றது. இவ் அவலமும்,

ஆழிப் பேரலையின் தாக்கத்தால் அளவிலா உயிரிழப்பும் உடமையிழப்பும் நேர்ந்த இக்காலத்தே தோன்றிய அவலமும் ஒன்றாகத் தானே உள்ளன!.

இரண்டாவது பாடல் கடந்து சென்ற இளமைப் பருவத்தை நினைத்து ஏங்கும் உணர்வைக் காட்டுவது. நம் இளமைப் பருவத்தை

எண்ணுங்கால் நாமும் தொடித்தலை விழுத்தண்டினாராகி விடுவோம் அன்றோ!.

இவை, மாறாத உணர்வு வெளிப்பாடுகளைக் கொண்ட இலக்கியங்கள் மிகுதியாய்க் காணும் தமிழின் இயன்மொழிச் சிறப்பை உணர்த்துவன.

4. காப்பு முறை:

வருமுன் காத்தல், எதிரதாக் காத்தல் என்று முற்காப்பை வலியுறுத்துகிறது திருக்குறள்.

நோயற்ற நிலையில் அதனுடன் போராடுவதைக் காட்டிலும் நோய்த் தடுப்பு முறையே சிறந்தது என்பது இப்போது மிகவும் உணரப்பட்டுள்ளது.

தமிழின் இயன்மொழித் தன்மை சிதைந்து விடாதவாறு முற்காப்பும் தற்காப்புமாய் உள்ள இயற்கை அமைப்பு (Natural Mechanism) முறை தமிழில் மட்டுமே காணப்படுவதாகும். அதற்கான சான்றுகளாவன:

(1) மொழிக்கு முதலில் வரும் எழுத்துக்கள் இவை என்னும் வரையறை

(2) இடைநிலை மெய்ம்மயக்க வரையறை

(3) வடமொழி முதலான பிறமொழிச் சொற்கள் தமிழில் வழங்க நேரிடுமெனின் அவற்றின் வடிவ மாற்றங்குறித்து,

வடவெழுத் தொரீஇ வடசொற்கிளவி
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே
(தொல். சொல் 401)

என்று தொல்காப்பியம் கூறியுள்ள வரையறையும் பின்னர் நன்னூலில் இதுபற்றி இன்னும் விரிவாய்க் கூறப்பட்டுள்ளமையும்.

(4) கல்லாதார் பேச்சிலும் கிட்ணன் (கிருஷ்ணன்) வெசம் (விஷம்) என, இத் தொல்காப்பிய நெறிமுறை

பின்பற்றப்படுதல்.

(5) பிறமொழிக் கதையிலக்கியங்களைத் தமிழில் பாடிய புலவர் பெருமக்கள் இவ்விதிமுறையை மீறாது பின்பற்றியுள்ளமை.

(6) சதகர்ணி என்பதை நூற்றுவர்கன்னர் என மொழிபெயர்த்துத் தொல்காப்பியம் கூறிய 'அதற்பட யாத்தல்' என்னும் மொழிபெயர்ப்பு முறையைப் பின்பற்றியமை

(7) பிறநாட்டு இறக்குமதிப் பொருள்களுக்கு உரிய தமிழ்ப்பெயரை இட்டு வழங்கியமை.
(எ-டு) வேர்க்கடலை நிலக்கடலை (மணிலா)

புகையிலை-(பாரசீகம்)
கரும்பு (சீனம்)
வான்கோழி (துருக்கி)

இவையும் இவைபோல்வன பிறவும் ஆகிய இயன்மொழித் தற்காப்பு முறைகள் தமிழில் பின்பற்றப்படுகின்றன.

மொழிக் கடன்:

தெரிந்த ஒரு நிகழ்ச்சி .

ஓர் அலுவலகத்தில் பணியாற்றிய ஒருவர் வைப்பகத்திலிருந்து கடன் பெற விரும்பினார். அதற்குச் சான்றுறுதி தரவேண்டும் என்று உடன் பணியாற்றிய வேறு ஒருவரை அவர் வேண்டினார். இரண்டாமவர் அதற்கு ஒப்பியதால் இருவரும் வைப்பகப் பணியாளரைச் சென்று கண்டனர். அங்கே சென்ற போது தான் கடனுக்குப் பிணைக் கையெழுத்திட வேண்டும் என்பது இரண்டாமவருக்குத் தெரிந்தது. அவரும் அதற்கும் ஒப்பினார். பின்னர், கடன் தொகை வைப்பக அதிகாரியின் அதிகார வரம்புக்கு மிஞ்சிய தென்றும், வைப்பகத்தின் தலைமை அலுவலகத்தில்தான் அதற்கு ஒப்புதல் வழங்கவேண்டும் என்றும் ஏதாவது அசையாச் சொத்தைப் பிணையாகக் காட்டினால் எளிதில் கடன் கிடைக்கும் என்றும் கூறப்பட்டது. கடன் பெறுவாரிடத்தில் அப்படி ஏதும் சொத்தில்லாததால் இரண்டாமவர் தமது காலிமனையின்

ஆவணத்தையும் பிணையாகத் தரப் பெருந்தன்மையுடன் இசைந்தார். முதலாமவர் கடனைப் பெற்றுக் கொண்டார்.

மூன்று திங்களில் முதலாமவருக்குச் சற்று தொலைவான இடத்திற்கு மாறுதலாகிவிட்டது. மேலும் இரண்டு திங்களில், மாதந்தோறும் கட்டவேண்டிய கடன்தொகை வரவில்லை யென்றும், பிணைக் கையெழுத்திட்ட இரண்டாமவர் அதற்கு ஆவன செய்ய வேண்டும் அல்லது அவரே கடனைக் கட்ட வேண்டும் என்றும் அவருக்கு அறிவிப்பு வந்தது. அவர் வைப்பக அலுவலரைக் கண்டுபேசியபின் உடனடியாக வட்டித் தொகையையேனும் கட்டவேண்டும் என்றும், கடன் பெற்றவருடன் தொடர்பு கொண்டு கடனைத் தவறாமல் கட்ட வற்புறுத்த வேண்டும் என்றும் முடிவானது, வாங்காத கடனுக்கு வட்டிகட்டிய இரண்டாமவர் முதலாமவருடன் பலமுறை தொடர்பு கொள்ள முயன்றும் பயனில்லாமற் போனது. இப்படிச்சில திங்கள் கழிந்ததன்பின் கடனும் வட்டியும் ஒழுங்காக வராததால் பிணையாகக் காட்டிய காலிமனை ஏலம்விடப்படும் என்று வைப்பகத்தினர் அறிவித்தனர்.

இரக்கத்திற்குரிய இரண்டாமவரின் நிலையைப் போலத் தமிழுக்கும் ஓர் இக்கட்டான நிலை அமைந்துள்ளது!.

வாங்காத கடனாகத் திணிக்கப் பெற்றுப் புகுந்து கொண்ட பிறமொழிச் சொற்கள், தமிழின் இயல்பான சொற் செல்வச் சொத்துகளை இருந்த இடந்தெரியாமல் செய்துவிட்டன!

'மேகம்' என்ற ஒரு வட சொல் வந்து புகுந்தது.
முகில், எழில், மஞ்சு, குயின், களம், கார், மால்
என்னும் ஏழு தமிழ்ச் சொற்கள் மறக்கப்பட்டன.
'சன்னல்' என்னும் ஒரு போர்ச்சுக்கிசியச் சொல் வந்ததால், சாளரம், பலகணி, வளிவாய்,
காலதர், காற்றுவளி என்னும் சொற்கள் வழக்கிற் குறைந்தன.
'மத்தியானம்' வந்தது. உருமம், உச்சி, உச்சிவேளை,
நண்பகல் என்னும் சொற்கள் இருந்த இடம் தெரியாமல் போயின.

'வாரிசு' என்னும் சொல், எச்சம், கான்முறை, கால்வழி, மரபு என்னும் தமிழ்ச் சொற்களை வீழ்த்தியது.

அறைகூவல் (சவால்)
பறிமுதல் (சப்தி)
அருந்தல் (கிராக்கி)
உசில் (மசாலா)
கெடு (வாய்தா)
நிலுவை (பாக்கி)
தண்டல் (வசூல்)
முற்றாலம் (நாஸ்தா)
கழுவாய் (பிராயச்சித்தம்)
கிள்ளாக்கு (Passport)
உளவாடம் (அச்சாரம், Advance)

எனத் தமிழ்ச் சொல்வளச் செல்வங்கள் வாங்காக் கடன் சுமையாய் அழிந்துவருவதைப் பாவாணர் எடுத்துக் காட்டியுள்ளார்.

ஆங்கிலம் உலகமொழிகள் பலவற்றிலும் இருந்து கடன் பெற்றுப் பெருகி வளர்ந்துள்ளது என்றும் அதனால் அது உலகமுழுவதும் பரவி ஏற்கப்படுகிறது என்றும் அவ்வப்போது கூறப்படுகின்றது. ஆங்கிலம் கடன் பெற்றுள்ளதும் உலக முழுவதும் பரவியுள்ளது என்பதும் உண்மையே. ஆயின் அது தன்னிடம் சொல் இல்லாமையாலேயே கடன் பெற்றது என்பதை மறந்து விடக் கூடாது. அது உலகிற் பரவியதற்கு ஆங்கிலர் ஆட்சிப் பரப்பும் அவர்தம் ஆட்சி அதிகாரத்தால் உண்டான ஆங்கிலத் திணிப்புமே அடிப்படைக் காரணம் ஆகும் என்பதையும் மறந்துவிடக் கூடாது.

ஆங்கிலத் திரிபு மொழிக்குரிய இயல்பை, இயன்மொழியாகிய தமிழுக்குப் பொருத்திக் காட்டுவது பொருந்தாது. இது கதைத் தலைவன் ஆகிய நாயகனும் கோமாளியைப் போலக் கூத்தாட வேண்டும் என்பதைப் போன்றதாகும்!

தமிழ் இயன்மொழியாகவும் உலக முதன் மொழியாகவும் உள்ளமையால் அடிப்படைச் சொற்கள் பல உலகப் பெருமொழிகள் பலவற்றிலும் இன்றியமையாக் கடன் சொற்களாகச் சென்றுள்ளன.

அம்மா, அப்பா என்னும் முதன்மையான உறவுச் சொற்கள் இரண்டும் அதே வடிவில் அல்லது சற்றுத்திரிந்து உலகப் பெருமொழிகளில் சென்று வழங்குகின்றன.

நாகரிக வளர்ச்சியால், கடலை அடக்கியாண்ட தமிழர் முதன் முதலில் கடலாண்மையுடையவர்களாகத் திகழ்ந்தனர். அதனால் தான்,

| | |
|---|---|
| வாரணம் | - Varinus (L), Marina (E) வருண (S) |
| கரை | - Curtus (L), Shore (E) |
| படகு | - Burea(L), Baris (G), Bark, Barge (E) |
| நாவாய் | - Navis (L), Naus (G), Nau(S), Navy (E) |
| கப்பல் | - Scapha (L), Skaphos (G), Schiff (Ge), Skiff, Ship (E) |
| கலம் | - Galata (G), Galley, Gallow (E) |
| நங்கூரம் | - Aneora (L), Angkyra(G), Ancre (F), Anchor(E) |

[L- Latin, G-Greek, Ge-German, F-French, E-English, S-Sanskrit]

என்னும் தமிழ்ச் சொற்கள் மேலை, கீழை ஆரிய மொழிகளுக்குச் சென்று வழங்குகின்றமையைப் பாவாணர் எடுத்துக்காட்டியுள்ளார்.

உலக நாடுகள் பலவற்றிற்கும் கடனாகவும் உதவியாகவும் கோடிகோடியாகப் பெருந்தொகை வழங்கும் நிறுவனம் உலக வைப்பகம் (World Bank) அந்நிறுவனம் ஏதோ ஓர் எளிய வைப்பகத்திலிருந்து சில்லறையாய்க் கடன் பெற்றுத்தான் இயங்குகின்றது என்று கூறுவதைப் போலத்தான், உலக வைப்பகம் போன்ற சொல்வழிச் செழுமைமிக்க தமிழும் வேறுமொழிகளிலிருந்து செல்லாக் காசுச் சில்லரைக் கடன் பெற்றுத்தான் செழிக்கவேண்டும் என்று கூறுவதும் உள்ளது.

ஆயின் பிற நாட்டில் தோன்றும் அறிவியற் புதுப் புனைவுகளும்

கண்டுபிடிப்பு உண்மைகளும் அவ்வம் மொழிகளின் வழியே தமிழுக்கும் வரவேண்டும் என்பதில் சற்றும் மறுப்பில்லை. எனினும் அவற்றை,

(1) தமிழ்ச் சொல்லாற் குறித்தல் (எ-டு Tsunami – ஆழிப்பேரலை)

(2) புதுச்சொல்லாக்கத்தாற் குறித்தல் (எ-டு Petrol – கன்னெய்)

(3) பழஞ்சொல்லாக்கத்தாற் குறித்தல் (எ-டு Bonus – நன்னர்)

(4) மொழிபெயர்த்துச் சுட்டல் (எ-டு Electronic – மின்னணு)

(5) அதே சொல்லைத் தமிழ் வடிவிற்கேற்ப மாற்றிச் சுட்டுதல் (எ-டு Walt-வாட்டு, Ohms-ஓம்சு)

என்றிவ்வாறு பலவகை நெறிகளுக்கு உட்பட்டு அவற்றை ஏற்பதே தகும்.

**மொழித்தூய்மைக்கு உள்ள முட்டுக் கட்டைகள்:**

தமிழ் தனித்தும் தூய்மையாகவும் இயங்கும் ஆற்றல் உடையது என்பதையும், அது தன்னைப் பற்றியுள்ள பிறமொழிப் பிடிப்பிலிருந்து நீங்கும் அளவிற்கு மேன்மையுறுவது என்பதையும் முதலில் அடையாளம் கண்டு கூறியவர் கால்டுவெலார். தமிழுக்குத் தனித்தியங்கும் தன்மையுடன் அதன் அகத்தே அமைந்த உள்ளாற்றல் அமைந்திருப்பினும் புறத்தே உள்ள பிற சுழல்களால் அதன் மொழித்தூய்மை இலக்கு இன்னும் எட்டப் பெறாமலே உள்ளது. அத்தகைய புறத்தடைகளாவன:

(1) 'இந்து' என்னும் கலவைச் சமயத்தின் தாக்குதலால் தமிழ்ச்சைவ, மாலியற் சமயங்களும் வடமொழிச் சார்பாகியும், ஓர் இந்தியா என்னும் வடமொழி சார் வல்லாண்மைச் சார்பால் நடுவண் அரசுத்துறைகள் Ayush, பாரத் சஞ்சார் நிகம் என வடமொழிமயமாகியும், வாய்ப்புள்ள இடத்தில் எல்லாம் இந்தி

திணிக்கப்பெறுதலும் ஆகிய நிலைகள் காணப்படுகின்றன.

(2) உலகமயமாதல், தாராளமயமாதல், ஆங்கிலமயமாதல் என்னும் உலகளாவிய போக்கினாலும் முன்னைய ஆங்கில அரசாட்சியாலும் ஆங்கில வல்லாண்மை மிகுந்திருத்தல்.

(3) தமிழின் தாய்மைப் பண்பும் தலைமைப் பண்பும் அறியப்படாமையும், அறியப்பட்டபோதும் அவற்றை ஏற்காமையும் ஆகிய இரட்டை நிலை.

இத்தகைய சூழலேயன்றித் தமிழரிடையே காணப்படும் குறைபாடுகளும் உள்ளன. அவை:

(1) தம் தாய்மொழியின் தனிச்சிறப்பைச் செவ்வையாய் அறிந்து போற்றாதிருத்தல்.

(2) வடமொழி, ஆங்கில எடுப்பொலிகளுக்கு மயங்கி, தனித்தமிழ்ச் சொற்களையும் எடுப்பொலி கூட்டி வழங்குதல். (எ-டு: வேட்டி-வேஷ்டி: சடை-ஜடை, பூசை-பூஜை.

(3) தமிழைப் பேசுங்கால் கவனமின்மையாலும் சோம்பலாலும் தாழ்வு மனப்பான்மையாலும் பிறமொழிச் சொற்களைக் கலந்து பேசுதல். அதனால் ஏதேனும் ஒருமொழியிலாவது தம் கருத்தைத் தடையின்றி வெளிப்படுத்தும் ஆற்றலையும் இழந்து நிற்றல்.
(எ-டு) 'தையற்காரரிடத்தில் சட்டைக்கு அளவு கொடுத்தேன்' என்று கூறவேண்டியபோது

'Tailor இடத்தில் shirt க்கு Measurement கொடுத்தேன்' என்றும்

'வேலைக்கு நேரமாகிவிட்டது' என்பதை Dutyக்கு Late ஆகிவிட்டது என்றும் இன்னும் பலவாறும் மிக எளிதாய்த் தமிழிற் பேசத் தகுந்தவற்றையும் எல்லா

இடங்களிலும் எப்போதும் குற்றுயிரும் கொலையுயிருமாக்கிக் குதறிப் பேசுதல்.

(4) உரிய தமிழ்ச் சொற்களால் கருத்தை உறுதிப்படக் கூறுங்கால் எண்ணத் தெளிவும் செயலுறுதியும் பிறரால் மதிக்கப்படுதலும் ஆகிய நன்மைகள் உண்டாகின்றன என்பதை அறியாதிருத்தல்.

(5) தமிழ்ப் பெயர் தாங்குவதே தங்களை அடையாளம் காட்டிப் பெருமிதம் கொள்ளச் செய்வது என்பதை உணராதிருத்தல்.

இவையும் இவைபோல்வன பிறவும் மொழித்தூய்மை இலக்கை அடைவதில் உள்ள முட்டுக்கட்டைகளாகும்.

**கவனம் செலுத்தவேண்டிய துறைகள்:**

தமிழ்மொழித்தூய்மைபற்றி,

(1) 50 ஆண்டுகளுக்கு முந்திய நிலை
(2) 25 ஆண்டுகளுக்கு முந்திய நிலை
(3) இன்றைய நிலை

எனப் பாகுபாடு செய்து புள்ளிவிளக்கச் சான்றுகளுடன் ஒப்பு நோக்கி ஆராய்ந்தால் தமிழ்த்தூய்மையின் சார்பும் தாக்கமும் எவ்வாறு ஆழமாகவும் செறிவாகவும் சமுதாயத்தில் பல்வேறு நிலைகளிலும் பரவியுள்ளன என்பது புலப்படும். குறிப்பாகக் கல்வியியல், ஆய்வியல், ஆட்சியியல் முதலானவற்றில் தமிழ்த் தூய்மையின் தாக்கம் வெளிப்படையாகவே காணப்படும்.

எனினும், மொழித்தூய்மை பெரும்பாதிப்பை உண்டாக்காத துறையாகவே படைப்பிலக்கியத் துறை உள்ளது. படைப்பாற்றல் திறங்கொண்ட தனித்தமிழ் ஆர்வலர்கள் இத்துறையில் முத்திரை பதிக்க முற்பட்டால் இங்கும் மொழித்தூய்மை பீடுநடை போடும்.

ஆனால், மொழித்தூய்மைத் தொடர்பற்றதாகக் காணப்படுவது திரைத்துறை. படத்தின் பெயரைக் கொண்டு அது தமிழ்ப்படமா? ஆங்கிலப்படமா? என்று அறியமுடியாத நிலையும் உண்டு.

திரைத்துறையின் முற்பகுதியில் 'கலைவாணர்', 'நடிப்பிசைப் புலவர்,'நடிகவேள்', 'நடிகர் திலகம்', 'புரட்சி நடிகர்' என்று சிறப்பு அடைமொழிகள் வழங்கப்பட்ட நிலைமாறி, இன்று Super Star, super hero, Action king என்றாகி விட்டுள்ளன. உரையாடல், பாடல்கள் பற்றிக் கூற வேண்டியதில்லை, பிறமொழியாளர் வல்லாண்மை, வணிக நோக்கு, புகழ் விருப்பு, போட்டிமனப்பான்மை என்னும் இவையே அத்துறையில் மேலோங்கியுள்ளனவேயன்றி மொழிநலத்திற்கு இடமில்லை.

திரைத்துறையின் தாக்கம் குமுகாயத்தின் அடிமட்ட நிலை வரையிலும் சென்று தாக்கக் கூடியது என்பதையும், அவ் ஊடகத்தின்வழி ஒரு புதிய ஊக்கத்தையும் எழுச்சியையும் உண்டாக்க அறிந்திருந்தும் அத்தகைய முயற்சியை மேற்கொள்ளாமல் ஏழை எளிய பொதுமக்களின் உழைப்புக்காசு என்னும் குருதியை உறிஞ்சிக் கொழுக்கும் அட்டைகளாகவே உள்ளனர்.

இவ்வகையில், தமிழில் பெயர் அமையும் திரைப்படங்களுக்கு வரிவிலக்கு அளிக்கப்படும் என்னும் அரசின் கொள்கை சற்று ஆறுதல் அளிப்பதாக உள்ளது. இச்சலுகையால் திரைத்துறையும் தமிழ்த்தூய்மைச் சார்பினதாக மாறுமா என்பதைப் பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும். அதோடு, தமிழ்ப்பட முதலாளிகளும் இயக்குநர்களும் கதை, பாடல் ஆசிரியர்களும் இதுபற்றிக் கவனம் செலுத்துதல் வேண்டும். அதனால் மொழித்தூய்மை என்னும் கருத்தாக்கமும் குமுக நன்மையும் என்னும் இரட்டை விளைச்சல் உண்டாகும்.

வாழ்வின் அனைத்துக் கூறுகளையும் உள்ளடக்கி உயர்வதாகிய சமநிலை வளர்ச்சியே சாலச்சிறந்தது என்னும் பொது உண்மை, தமிழ்த்தூய்மை வளர்ச்சிக்கும் பொருந்துவதாகும்.

தொகுப்புரை:

மொழித்தூய்மை என்பது எண்ணத்தூய்மையையும் செயல்தூய்மையையும் உள்ளடக்கிய செப்பநிலையின் வெளிப்பாடு என்பதும், தமிழ் தானே தோன்றி வளர்ந்த இயன்மொழியாய்த் தொடர்ச்சியான பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக நிலவி வரும் ஓர் இனத்தின் வரலாறு, பண்பாடு, நாகரிகம் முதலான எல்லா அறிவுக்

கூறுகளின் வெளிப்பாடுகளைப் பதிந்து வைத்துக் கொண்டுள்ளது என்பதும், அதனால் அது பிறமொழித் துணையோ, சார்போ, கடனோ வேண்டாத் தன்னிறைவும், காலத்திற்கேற்ற கருத்தாக்கங்களின் வெளிப்பாட்டுக்கு ஏற்ற அமைப்புகளும் தன்னகத்தே கொண்டுள்ளது என்பதும், தமிழின் மீது திணிக்கப்பட்ட வேண்டாக் கடன்சுமை என்பது, அதன் வரலாற்றை மறைக்கும் ஓர் இருட்டடிப்பு முயற்சி என்பதும், அக் கடன்சுமையை ஒதுக்கி உதறித் தள்ளுவதால் அம்மொழியினர்தம் கூரறிவும் நுண்ணறிவும் செம்மைச் செயல்திறனும் பன்மடங்காய் மேலோங்கும் என்பதும், தமிழ்த் தூய்மையைப் பேணாத துறைகளும் அத்தூய்மையைத் தழுவிச் சமநிலை வளர்ச்சி பெருகவேண்டும் என்பதும், ஆகிய இவை இங்குக் கருத்துரையாய்க் கூறப்பட்டன. இவ்வகையில் அனைவர்க்கும் உரிய பங்குக் கடமைகள் உள்ளன என்பதையும் நாம் நினைவிற் கொள்ளவேண்டும்.



# 3. தனித்தமிழியல் நோக்கு : மொழித்தூய்மை

முனைவர் சா. உதயசூரியன்
அயல்நாட்டுத் தமிழ்க் கல்வித்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

## "பெருஞ்சித்திரனாரின் மொழித் தூய்மைச் சிந்தனைகள்"

மொழி என்பது மாந்தனின் உள்ளுயிரில் தோன்றி உணர்வு வளர்ச்சிக்கேற்ப முகிழ்த்து ஒளிவடிவாய் வெளிவரும் ஓர் இயற்கை வெளிப்பாடு. அஃது ஒரு சொற்கூட்டமோ வெறும் கருத்துப் பரிமாறிக் கொள்ளும் கருவி மட்டுமோ அன்று. அது மக்களினத்தில் உள்ளுணர்வுகளோடு பின்னிப் பிணைந்து பண்பாட்டால் அவ்வினத்தை வளர்த்தெடுக்கும் வாழ்வியற் கூறு. மாந்தரினம் இன்று மொழியின் வாயிலாகவே தன்னை அறிமுகப்படுத்திக் கொள்கிறது. பெற்ற தாய்க்கும் பிள்ளைக்குமிடையே இயற்கை உறவொன்று அமைந்து செயற்படுவதுபோல, ஒருவனுக்கும் அவன் தாய்மொழிக்குமிடையே ஓர் அரிய உறவு நிலைத்து நின்று இயங்குகின்றது. இவ்வுறவின் உண்மையினையும் வன்மையினையும் ஆற்றலையும் ஆழத்தையும் நன்குணர்ந்து மற்றையோர்க்கு உணர்த்துவோர் கவிஞராவர். இவ்வகையில் பெருஞ்சித்திரனார் பாடல்களில் உணர்த்தப்படும் மொழித் தூய்மைச் சிந்தனைகள் ஈண்டு ஆராயப் பெறுகின்றன.

### மொழித் தூய்மை:

ஒவ்வொரு மொழிக்கும் சில தனித்தன்மைகள் உண்டு. ஒரு மொழி தன் இயல்பிற்கு ஒவ்வாத பிறமொழிச் சொற்களோடு கலக்கும்போது அது நாளடைவில் சிதைந்து வேற்றுமொழியாகி விடக்கூடும். தமிழில் வடமொழி கலந்ததன் விளைவாகவே தமிழ்மொழி பல்வேறு வகையாகத் திரிபடைந்து, சிதைந்து தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு முதலிய 22 மொழிகளாகப் பிரிந்தது என்பர். இந்தச் சிதைவை உணர்ந்தே உலகமொழிகள் பலவற்றிலும் 'மொழித்தூய்மை இயக்கங்கள்' தோன்றலாயின.

1918ஆம் ஆண்டில் தனி ஆங்கிலக் கழகம் (Society for Pure English) தொடங்கப் பெற்றமையும் 1976ஆம் ஆண்டு பிரெஞ்சு மொழியின் தூய்மையைக் காக்கப் பிரான்சு அரசாங்கம் தனிச்சட்டம் கொண்டுவந்தமையும், தூய சீன மொழியான மண்டாரின் சீனா முழுவதும் பேசப்பட வேண்டும் என்று சீனப் பொதுவுடைமை அரசு ஆணையிட்டமையும் குறிப்பிடத்தக்க வரலாறுகளாகும். இந்திய மொழிகள் பலவற்றில் மொழித் தூய்மை இயக்கங்கள் தோன்றியமை பற்றி அவ்வவ்மொழி வரலாறுகள் குறிப்பிட்டுச் செல்கின்றன. அவ்வகையில் தெலுங்கு மொழியில் நடந்த முயற்சியை வாழ்வியற் களஞ்சியம் குறிப்பிடுகிறது. கேரளத்தில் உருவாகிய தூய மலையாள முயற்சிகள் பற்றி ச. வே. சுப்பிரமணியன் குறிப்பிட்டுள்ளார்.

கி.பி. முதல் நூற்றாண்டு வரை பிற மொழிக் கலப்பு தமிழில் அருகியே இருந்தது எனலாம். தொல்காப்பியத்திலுள்ள வடசொற்கள் இருபதிற்கு மேற்படா. அந்நூலின் விரிவை நோக்கும்போது அவை பொருட்படுத்தத் தக்கனவாகா என்று கொண்டு பாவாணர் தொல்காப்பியத்தைத் தனித்தமிழ் நூல் என்றே குறிப்பிடுகிறார். இன்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னிருந்த தமிழ்ப்புலவர் அனைவரும் தமது தமிழ்மொழி திரிபடைந்து மாறுதற்கும் அயன்மொழிச் சொற்கள் அதன்கட் புகுந்து விரவுதற்கும் இடங்கொடாமல், இலக்கண இலக்கிய வரம்புகொலித் தாமும் தனித் தமிழிலேயே நூல்கள் இயற்றி அதனை ஒருமுகமாய் நின்று கண்ணுங்கருத்துமாய்ப் பாதுகாத்து வந்தனர் என்பர் மறைமலையடிகள்.

காலப்போக்கில் தமிழக அரசியலில் நிகழ்ந்த ஆட்சி மாற்றங்கள் தமிழைச் சீர்குலைத்தன. பல்லவ, விசயநகர, மராட்டிய, மொகலாய, ஆங்கிலேய வல்லரசுகளின் வல்லாண்மையும் பிறமொழிச் சொற்களின் கலப்பிற்குக் காரணமாயின என்கிறார் ம.பொ.சி. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கம் முதல் மறைமலையடிகள், தேவநேயப் பாவாணர் போன்றவர்களால் தமிழ் மொழித் தூய்மை ஓர் இயக்கவடிவம் பெற்றது. வடமொழிக்கு அடிமைப்பட்டுக் கிடக்கும் தமிழை அதனின்றும் மீட்பதே தன் வாழ்க்கைக் குறிக்கோளாய் வாழ்ந்தவர் தேவநேயப் பாவாணர். ஆரியர் வருமுன் தமிழ் இயற்கையாக எப்படி வழங்கியதோ அப்படி வழங்குவதே தனித்தமிழ் என்பார் அவர். இந்தப் பின்னணியில்தான் பெருஞ்சித்திரனாரின் மொழித்தூய்மைப் பணி தொடங்குகிறது.

மொழித்தூய்மையைக் குறிக்க மட்டும் தனித்தமிழ் என்னும் தொடரைப் பயன்கொள்வது ஏற்புடையதாகாது. தமிழர், தமிழ், தமிழகம், தமிழ்ப் பண்பாடு, சான்றாண்மை, நாகரிகம், அறம், கலையொழுகலாறுகள், மரபுகள் போன்ற அனைத்தையும் ஒருசேரவும் தனித்தனியும் உணர்த்தும் அரிய கலைச்சொல்லாகத் தனித்தமிழ் என்னும் தொடரைப் பயன்கொள்ள வேண்டும் என்பர். இவ்வகையில் பரந்துபட்ட பொருட்செறிவுடன்தான் பெருஞ்சித்திரனார் தனித்தமிழ் என்னும் தொடரைத் தம் பாடல்களில் பயன்படுத்தியுள்ளார். இதனை,

*"தனித்தமிழைப் போற்றாதார் நூலெழுதல்*
*தமிழ்மொழிக்குக் கேடு செய்யும்*
*தனித்தமிழைப் பேணாதார் உரையாற்றல்*
*தமிழினத்தை அடிமை கொள்ளும்*
*தனித்தமிழைப் பழித்திடுவார் அரசாளல்*
*தமிழ் நிலத்தில் கீழ்மை சேர்க்கும்"*
(தொ.1:பா.38)

என்னும் பாடல் அடிகள் உணர்த்தி நிற்கின்றன.

மொழிக்கலப்பு என்பது தமிழ்மொழியைப் பொறுத்த அளவில் கடன் வாங்கப்பெற்றது அன்று. இல்லாத ஒன்றைப் பெறுவதே கடன் வாங்குவது எனப்படும். தமிழ்மொழியில் வந்து கலந்த சொற்கள் இல்லாமையால் எழுந்த தேவையால் கடன் வாங்கப்பெற்றன ஆகா. தமிழ்மொழி மொழிக்கடன் பெறும் அளவிற்கு வறுமையுற்ற மொழியன்று. அஃது ஒரு நிறைமொழி, சொற்செல்வ மொழி. எனவே 'தமிழ்மொழி பெற்றது கடனன்று: கலப்பேயாகும்' என்று மொழிக்கலப்புக் குறித்துத் தெளிந்த சிந்தனையுடையவர் பெருஞ்சித்திரனார். அதனால்தான்,

*"மொழிச்சிறப் பழித்து மொழியுணர் வழித்தால்*
*எழுச்சியின்றித் தமிழினம் இன்றினும்*
*அடிமை யுற்றுத் தாழ்ந்தழி யாதா?"*
(தொ.1:ப.57)

என்று இவர் வினவுகின்றார். இதனை நோக்குங்கால் மொழிக்கலப்பு என்பதன் விளைவாக மொழி வளர்ச்சியும் இலக்கிய

வளர்ச்சியும் ஒரு தேக்க நிலையைச் சந்திப்பதோடு மட்டுமன்றி அம்மொழிக்குரிய இனத்தின் வளர்ச்சியும் தடைபடுகிறது என்பதே மொழிக்கலப்பு குறித்த இவர்தம் எண்ணமாகும் என்பது புலனாகிறது.

தமிழும் வடமொழியும்:

பழங்காலத்திலேயே வடமொழிச் சொற்கள் தமிழில் தடையின்றிப் புகுந்து விடாதவாறு தமிழிலக்கண வரம்புகள் அமைக்கப்பட்டிருந்தன. 'வடசொற்கிளவி வடவெழுத்தொரீஇ எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே' என்னும் தொல்காப்பிய நூற்பா வடசொற்களை எவ்வாறு தமிழ் மொழியின் ஒலி இயல்புக்கேற்ப மாற்றிப் பயன்படுத்த வேண்டும் என்பதைத் தெளிவுபடுத்துகிறது. இதன் விளைவாகவே, இந்தியாவில் ஏனைய மொழிகளை வென்ற வடமொழி, தமிழைத் தன்மயமாக்க முடியாமல், தமிழோடு கலந்து அதன் மயமானதற்குக் காரணம் தமிழ்ப்புலவர் மொழி மரபில் கட்டுப்பாட்டோடு இருந்து செயலாற்றியதாகும் என்னும் கருத்தாக்கம் உருப்பெற்றது. இத்தகு தெளிவான இலக்கண வரம்புகளையும் புறக்கணித்துச் சமசுகிருத மயமாக்கும் பணி தொடர்ந்து வந்தமை காலந்தோறும் தமிழ் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளப் போராட வேண்டிய சூழலை ஏற்படுத்திவிட்டது.

சங்ககாலத்தில் நூற்றுக்கு இரண்டு அல்லது மூன்று எனும் அளவில் தமிழில் இடம்பெற்ற வடசொற்கள், சங்க மருவிய காலத்தில் நூற்றுக்கு நான்கு அல்லது ஐந்து எனும் அளவில் பெருகின. ஆழ்வார், நாயன்மார் வாழ்ந்த பக்திக் காலத்தில் அவை நூற்றுக்குப் பத்தும் பதினைந்துமாகப் பல்கிப் பெருகின. பக்திப் பனுவல்களுக்கு உரை எழுதும் பாங்கில் தமிழிற் புகுந்த மணிப்பிரவாள நடைப்போக்குச் செல்வாக்குற்ற காலத்தில் வடமொழிக் கலப்பு அளவின்றிப் பெருகியது என்பர். பல்லவர் ஆட்சிக் காலத்திலேயே மணிப்பிரவாள நடை கருக்கொண்டது எனினும், அது கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற்பாதியில்தான் முழுவடிவம் பெற்றது. தமிழை வீழ்த்துவதற்கென்றே உருவாக்கப்பட்ட மணிப்பிரவாள நடை காலப்போக்கில் தோற்று வீழ்ச்சியுற்றது. இருப்பினும் வடமொழிச் சொற்களைத் தமிழிற் கலக்கும் கலப்படப் பணி நின்றுவிடவில்லை.

வடமொழிக் கலப்பின் விளைவாகத் தமிழக அரசியல்,

சமுதாயம், சமயம், மொழி, இலக்கியம் போன்ற எல்லா நிலைகளிலும் வடமொழியின் மேலாண்மை முகிழ்க்கத் தொடங்கவே தமிழின் சீரும் சிறப்பும் புறக்கணிக்கப்பட்டன. கி.பி. பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழக ஊர்ப்பெயர்களும், தெய்வப் பெயர்களும் வடமொழி மயமாக்கப்பட்ட நிலையில் அம்மொழிச் செல்வாக்குப் பெருகிற்று. எனவே, வடமொழி மேலாண்மையை எதிர்ப்பது என்பது கடந்த நூற்றாண்டிலேயே வரலாற்று அடிப்படையில் உருவாகிவிட்ட ஒரு கட்டாய நிகழ்வு என்பர்.

வடமொழிக் கலப்பின் உச்ச நிலையாக வடமொழியின்றித் தமிழ்மொழி இயங்காது என்று வடமொழியாளர்களும் வடமொழிப் பற்றாளர்களும் எண்ணத் தொடங்கும் நிலை ஏற்பட்டது. இந்தச் சூழலில் 'எம் தெய்வத் தமிழ் அன்னையை இழித்துப் பேசி இறந்துபட்ட ஆரியமாதை உயர்த்துப் பேசுவோர்தம் மடமையையும் குறும்பையும் என்னென்போம்' என்று மறைமலையடிகள் வடமொழி மேலாண்மையை எதிர்த்துக் குரல் கொடுத்தார். தமிழ் நூல்களில் வடமொழிக் கலப்பு மதிப்புப் பெறுவதில்லை. அஃதில்லாமையே நூலுக்குச் சிறப்பு என்று கா. சுப்பிரமணிய பிள்ளை தமிழ்நூல் செய்வார்க்கு வழிவகுத்தார். வடமொழிப் பேச்சு வழக்கிலிருந்து முற்றிலும் அழிந்துபட்ட நிலையிலும், அம்மொழியின் மேலாண்மைக்காக அவ்வப்போது குரல் எழுவதும், தமிழுணர்வு மிக்கோரிடமிருந்து அதற்கு எதிர்ப்புக் குரல் எழுவதும் தமிழ் வரலாற்றில் தொடர் செய்திகளாக அமையலாயின.

"தமிழக மக்களின் அடிமை நிலைகளைத் தகர்த்தெறியவும் புதிய பொலிவான மானம் நிரம்பிய மீட்சி வாழ்க்கையொன்றில் அன்னோரைக் கொண்டு செலுத்தவும் பெருஞ்சித்திரனார் தொடர்ந்து செலுத்திவரும் பேருழைப்பு மீப்பெரியது" எனப் பெருஞ்சித்திரனாரின் தமிழினப் பணிகளை மதிப்பீடு செய்வார் அருளி. தமிழுக்கும் தமிழினத்துக்கும் எதிராக எச்சிறு முயற்சி தலையெடுத்தாலும் அதை எதிர்த்துக் குரல் கொடுப்பதை அவர்தம் பாடல்கள் காட்டி நிற்கின்றன. ஒருமுறை சுனித்குமார் சட்டர்சி என்றும் வடநாட்டைச் சேர்ந்த மொழியியல் அறிஞர் சமசுகிருத மொழியின்றித் தமிழ்மொழி இயங்காது என்று கூறியபோது பெருஞ்சித்திரனார் பெரும் எதிர்ப்பினைத் தெரிவித்துள்ளார்.

அவ்வெதிர்ப்பினை ஒரு பாடலாக வடிவமைத்துள்ளார்.

*''சட்டர்சி போன்றவர்க்கும், தெ.பொ.மீ.*
*போன்றவர்க்கும்*
*சாட்டையடி போல் தந்தே,*
*உடன்முன் நின்று,*
*தட்டியடக் கின்றதிறம் படைத்தவர் இங்கிலரா?*
*தன்மானம் உள்ளவர்கள் அற்றா போனார்?*
*அட்டியிலை: இருக்கின்றார்.*
*ஆனாலும், வாய்ப்பிலராய்*
*முடங்கிப் போனார்*
*கேட்டதொரு வாய்ப்பிதுதான் நமை நாமே*
*என்றென்றும்*
*கெடுத்து வந்த கதையிதுதான்*
*கேட்டுக் கொள்வீர்''* (தொ.1:பா.33)

தமிழ்மொழியை இழிவுபடுத்தும் கருத்துக்குக் கூடத் தமிழரிடையே போதுமான எதிர்ப்பு எழவில்லையே என்று வேதனைப்படுகிறார். காலங்காலமாகத் தமிழரிடையே காணப்படும் இந்த மெத்தனமான உணர்வே பிறமொழி மேலாண்மைக்கு வழிவகுத்துத் தந்தது என்னும் வரலாற்றைக் கோடிட்டுக் காட்டுவதோடு அதன் விளைவாகத் தமிழ்மொழியின் தனித்தன்மையும் தமிழ் இனத்தின் பண்பாட்டுச் சிறப்பும் சிதையத் தொடங்கியது என்பதையும் உணர்த்துகிறார்.

வழக்கிழந்து போன வடமொழிக்கு வாழ்வளிக்க இன்று பல்வேறு முயற்சிகள் ஒருபுறம் நடந்துவர, உயர்தனிச் செம்மொழியாகிய தமிழைச் சீரழிக்கும் முயற்சிகள் மற்றொருபுறம் நடந்து வருவதை உணர்ந்த பெருஞ்சித்திரனார் அச்சீரழிவிலிருந்து தமிழைக் காக்கப் பாடுகிறார்.

*“கல்லறைப் பிணத்தைத் தோண்டிக்*
*கவின்பெறப் புகழ்வர் ஆனால்*
*சில்லறை மொழிகள் கூறிச்*

*செந்தமிழ் அழிப்பர் இன்னார்*
*சொல்லறை பட்டுந் தேரார்*
*செவியறக் கொடிறு வீழ*
*மல்லறை வாங்கித் தேரும்*
*மணிநாளும் விரைந்த தன்றே"*

(தொ.1 பா. 30)

தமிழனம் ஒன்றுபட்டுக் குரல்கொடுப்பதன் வாயிலாகப் பிறமொழி மேலாண்மையைத் தவிர்த்துத் தமிழன் தனித்தன்மையையும் தமிழரின் பண்பாட்டுச் சிறப்பையும் காக்க முடியும் என்பதனைச் சமசுகிருதமயமாக்கத்திற்கு எதிரான பெருஞ்சித்திரனாரின் கோட்பாடாகக் கொள்ளலாம்.

**பேச்சுத் தமிழ்:**

தமிழ் மக்களின் வாழ்வு நிகழ்ச்சிகள் அனைத்துமே தமிழில் நடைபெற வேண்டும் என்பர். தனித்தமிழ் இயக்க வரலாறே பேச்சுத் தமிழில்தான் தொடங்குகிறது. 1916 ஆம் ஆண்டில் ஒரு நாள் வள்ளலாரின் திருவருட்பாவில் கலந்துள்ள பிறமொழிச் சொற்களைப் பற்றித் தம் மகள் நீலாம்பிகையாரிடம் கூறிய மறைமலையடிகள் அயன்மொழிச் சொற்களைப் பயன்படுத்துவதால் தமிழ்ச் சொற்கள் மறைந்து போகின்றன என்பதைச் சுட்டிக்காட்டினார். அதற்கு "அப்படியானால் நாம் அயன்மொழிச் சொற்களை நீக்கித் தனித்தமிழிலேயே பேசுதல் வேண்டும். அதற்கான முயற்சிகளைக் கைவிடாது மேற்கொள்ள வேண்டும்" என்று நீலாம்பிகையார் ஆர்வத்தோடு மறுமொழி கூறியதை ஏற்று அன்றுமுதல் மறைமலையடிகள் தனித்தமிழில் பேசவும் எழுதவும் தொடங்கினார் என்பர். இந்நிகழ்ச்சியே இருபதாம் நூற்றாண்டில் தமிழகத்தே மொழித்தூய்மை இயக்கம் தோன்ற அடிப்படையாக அமைந்துவிட்டது.

தூய தமிழில் எழுதுவதை மட்டுமின்றித் தூயதமிழில் பேசுவதையும் மாணாக்கர்பால் ஊக்குவிப்பதைத் தம் தலையாய பணியாகக் கொண்டவர் மறைமலையடிகள். தமிழிற் பேசும்போது அயன்மொழிச் சொற்களை அகற்றித் தூயதமிழில் பேசவேண்டும் என்பதை மறைமலையடிகள், தேவநேயப்பாவாணர் ஆகியோர் வழியிற் செல்லும் தனித்தமிழ் அன்பர்கள் தம்வாழ்க்கைக் குறிக்கோளாய்க்

கொண்டுள்ளனர். பெருஞ்சித்திரனாரின் குடும்பத்தார் பிறமொழி கலவாத தூய தமிழினை இயல்பாகப் பேசிவருவது இங்குக் குறிப்பிடத்தக்கது.

மக்கள் மொழியாகத் தனித்தமிழ் அமைய வேண்டும் என விரும்புபவர் பெருஞ்சித்திரனார். இவர் மொழித்தூய்மையைப் பேணாமல் பேசப்படும் பேச்சுத் தமிழ் மாற்றப்படவேண்டும் என்னும் கொள்கை செயற்பாட்டிற்குப் பெரிதும் உழைத்து வருகிறார். அண்ணாமலைப் பல்கலைக்கழக மொழியியல் பேராசிரியராகப் பணியாற்றிய டாக்டர் முத்துச் சண்முகம் பேச்சுத்தமிழே உண்மைத்தமிழ். இலக்கியத்தமிழ் உண்மைத் தமிழன்று என்னும் கருத்துடையவர். அவர் 1965ஆம் ஆண்டுக் 'கலைக்கதிர்' இதழ் ஒன்றில் 'தென்மொழி' எழுதும் தமிழ் செயற்கைத்தமிழ் என்றும், ஆனந்த விகடன், கல்கி, குமுதம் ஆகிய இதழ்களில் எழுதப்பெறும் தமிழே உண்மைத்தமிழ் என்றும் தெரிவிக்கும் ஒரு கட்டுரை எழுதியிருந்தார். அக்கொள்கையைத் தாக்கியும் அவரைக் கண்டித்தும் பெருஞ்சித்திரனார் விரிவான குறிப்புரையோடு ஒரு பாடல் எழுதியுள்ளார்.

'அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்க்கொலை' என்ற பெயரில் 135 அடிகளாலான விரிவான பாடலாய் அது வெளிவந்தது.

*'பிடித்த' தைப் 'பிடிச்ச' தென் றெழுதலாம் இனிமேல்*

*'பெற்ற' தைப் 'பெத்த' தென் றெழுதலாம் இனிமேல்*

*'போன' தைப் 'போச்' செனப் புகலலாம் இனியே*

*'வேண்டு'. மென்பதை 'வேணு' மென் றெழுதலாம்*
*மொத்தமாய்க் கூட்டிக் கழித்து மொழிந்தால்*
*முத்துச் சண்முகம் கருத்துப் படியினி*
*அத்திம்பேர் அம்மாமித் தமிழே இலக்கியம்*
*முத்தமிழ் வளர்ச்சியைப் பாருங்கள் தமிழரே*

(தொ.1:பா.28)

என்று 'எழுதுவதெல்லாம் இலக்கியம்' என்னும் பழுதுறுங் கருத்தால் விளையும் கேட்டினை எடுத்துக்காட்டுகிறார். பிறரைக்

கடுமையாக எதிர்க்கும்போது கடுமையான சொல்லாட்சியை இவர் கையாள்வதைக் காணமுடிகிறது.

அப்பாடலை எழுதியதோடமையாமல், பெருஞ்சித்திரனார் ஒருமுறை பெருந்திரளான தனித்தமிழ் இயக்க மாணவர்களுடன் அண்ணாமலைப் பல்கலைக்கழக வளாகத்திலிருந்த அப்பேராசிரியர் இல்லத்திற்குச் சென்று அவரை நேரே கண்டு இதுபோன்ற தவறான கருத்துகளை இனி உரைத்தல் கூடாது என்று எச்சரித்து விட்டும் வந்தார். பெருஞ்சித்திரனார் கருத்து, மாணவர்களிடையே செல்வாக்குப் பெற்று விளங்குவதற்கு அந்நிகழ்ச்சி ஓர் எடுத்துக்காட்டாக அமைந்தது.

"தனித்தமிழ் இயக்கத்துடன் தொடர்புடைய அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை மாணவர்களோடு புலவர் பெருஞ்சித்திரனாருக்கு நட்பும் தொடர்பும் இருந்தன. தமிழ் மாணவர் இடையே தென்மொழி இதழுக்கு நல்ல வரவேற்புக் கிடைத்தது. தென்மொழி ஆசிரியர் அடிக்கடி அண்ணாமலை நகருக்கு வருகைதந்து தனித்தமிழ் இயக்கக் கருத்துக்களைப் பரப்புவதில் ஆர்வம் காட்டுவார்" என்று ஈழத்துச் சிவானந்தன் குறிப்பிடுவது மேற்கூறப்பட்ட கருத்திற்கு வலிமை சேர்ப்பதாக உள்ளது.

இன்றைய தமிழகத்தில் மக்கள் பேசும் தமிழில் பிற மொழிக் கலப்பு மிகுந்திருப்பதை,

*"தமிழ்நாட்டில் தமிழில்லை: இருந்(து) அவர்வாய் திறந்தால்*

*தமிழ் மணப்பதில்லை: ஐயோ பிறமொழித் தீ நாற்றம்"*

(தொ.1:பா.102)

என்னும் பாடலடிகளில் சுட்டிக்காட்டி வருந்துகிறார். இக்காலப் பேச்சுத் தமிழில் ஆங்கிலமொழி மிகுதியாகக் கலந்திருப்பதை,

*"வெங்காயத் தோசையில்லை: 'ஆனியன்' தோசைதான்*
*உண்ணுதற்குச் சோறில்லை: 'ரரைசு' 'கீ ' தான்*

*'பப்பட்','ஆனியன் புளவர்' கூட்டாம் 'லைம் பிக்கிள்'*
*தண்ணீர் இல்லை: 'வாட்டர்' 'டொமொட்டோ சூப்'*
*'கர்டு'*
*தாழ்ந்துவிட்ட தமிழ் மொழியின் வீழ்ந்தநிலை*
*தாணீர்'*

(தொ.1:பா.102)

என்று எடுத்துக்காட்டித்

"தண்டமிழில் பிறமொழியைக் கலந்து பேசுந்
தரங்குறைந்த தமிழ் வழக்கை நீக்கல் வேண்டு

(தொ.1:பா.15)

என்று வலியுறுத்துகிறார். மேலுமவர் ஆங்கிலத்தையும் பிறமொழியையும் தமிழ் கல்லாத அயலவரிடம் உரையாடற்கன்றித் தமிழருககுள் பேசிக்கொள்ளப் பயன்படுத்தல் கூடாது என்னும் உறுதிமொழியைத் தமிழர்கள் ஏற்க வேண்டும் என விரும்புகிறார்.

ஒரு மொழி மிகுதியும் பேச்சு மொழியாகவே பயன்பாட்டில் இருக்கும். எனவே அப்பேச்சு மொழியில் தூய்மை ஏற்ப மொழிக்கலப்பும் பெருமளவு குறைக்கப்பட்டு மொழித்தூ உருவாகும் என்பதனையே இவர்தம் பேச்சுமொழி குறித்த கருத்தாக்கமாகக் கொள்ளலாம்.

